# நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கேடசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள்

திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு
ஆய்வியல் நிறைஞர் (எம்ஃபில்) பட்டத்திற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு.

**மு. இராமலிங்கம்.** *எம்.ஏ , எம்.ஃபில்., பி.எட்.,*
*ஆய்வு மாணவர்*
தமிழ்த்துறை

நூல் கிடைக்குமிடம்
**மு. இராமலிங்கம்**
தமிழ் விரிவுரையாளர்
**7-117 ஈசுவரன் கோயில் தெரு**
**புத்தூர்-(அஞ்சல்) 517 583**
சித்தூர் மாவட்டம்- ஆந்திர மாநிலம்

முதற் பதிப்பு : டிசம்பர், 1991

பிரதிகள் 1000

**விலை : ரூ. 35.00**



திருமலை—திருப்பதி ஸ்ரீ வேங்கடாசலபதி தேவஸ்தான நிர்வாகத்தினரிடமிருந்து நிதி உதவி பெற்று

**நாராயணவனம் அருள்மிகு வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள்**

என்ற இந்த நூல் வெளியிடப்படுகிறது.

தேவஸ்தான நிர்வாகத்திற்கு எங்கள் உளங்கனிந்த நன்றி!

This Book is Printed with the Financial Assistance of
THIRUMALAH—TIRUPATHI DEVASTNAHAMS
under their Scheme of
Aid to Publish the Religious Books.

மாருதி பிரஸ்,
173, பீட்டர்ஸ் ரோடு,
சென்னை-600 014.



# காணிக்கை



என்னை ஈன்று புறந்தந்து இவ்வுலக
வாழ்வை நீத்த எனது தாயார்
திருமதி மி மு. ஒசூரம்மாள்
அவர்களின் திருவடிகட்கு இம் முதல் நூலைக்
காணிக்கையாக்குகின்றேன்.

# வாழ்த்துரை

டாக்டர். பொன் சௌரிராசன்.
M. A., P.h.D.,

பேராசிரியர் தமிழ்த்துறை
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்
திருப்பதி-517 502

ஒரு சமுதாயத்தின் எழுதப்பெறாத சட்டங்களே மரபுகள். அவை கலை, இலக்கியம், சாதி, சமய, மொழி, இனத்திற்கு ஏற்ப பல்வகையாய்ப் பரவி உள. காலத்திற்கு ஏற்பப் பயன்தரா மரபுகள் சில தாமே மறைந்துவிடுகின்றன. அல்லது மறக்கப்படுகின்றன அப்படியே பயன்தருவன சில காககப்பெற்று, போற்றப்பெற்று வளர்க்கப்பெறுகின்றன. இவற்றுக்கிடையே தன்னலக் குழுக்கள் சிலவற்றில் தம் சொந்த நன்மைக்காக நல்ல சில பொது மரபுகளை மாற்றியோ மறைத்தோ அழித்துவிட்டு புதிய மரபுகள் சிலவற்றைப் புகுத்திவிடுகின்றன. இவையெல்லாம் மானுடவியலார், சமுதாய வியலார் எண்ணுதற்கு உரியன. அவர்தம் அத்தகு ஆய்வுக்கு அடிப்படைச் செய்திகளைத் தேக்கிவைத்துத் தருவன நாராயண வனம் அருள்மிகு கல்யாணவெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள் போன்ற ஆய்வுகள் ஆகும்

வைகாநச பாஞ்சராத்திர ஆகம அடிப்படையில் தோன்றிய வைணவக் கோயில்கள் எல்லாம் வேத மந்திரங்களோடு ஆழ்வார் பாசுரங்களையும் வழிபாட்டுக் காலங்களிலும், பிறகோயில் நிகழ்ச்சி களின்போதும் தவறாது ஓதி வருமாறு எம்பெருமனார் இராமாநுசர் கோயில் ஒழுகலாறுகளை உருவாக்கினார். திருமாலை வழிபாடு செய்யும் அடியார் அனைவரும் ஒரே சாதி, ஒரே இனம். அவர்களுள் உயர்வு தாழ்வு இல்லை என்றும் ஆழ்வார் அருளிச் செயல்களின் உண்மை நெறியையும் அவர் உணர்த்தினர். ஆனால் மொழி, இன வேறுபாட்டை வளர்த்துத் தன்னலக் குழுக்கள் அவரின் அந்த சத்திய நெறிக்கு ஆங்காங்கு அவ்வப்போது சில இடையூறு களை விளைவித்தன அவற்றையெல்லாம் சமுதாய, சமய வரலாற்று ஆராய்ச்சி அடிப்படையில் ஆராய இத்தகு ஆய்வுகள் பயன்தரும்.

இந்த ஆய்வு ஆய்வாளர் தம் பெரிய அரிய முயற்சியால் உருவாகியுள்ளது. ஆண்டு முழுதும் அங்கு நிகழும் நாள்விழா, வாரவிழா, திங்கள் விழா, ஆண்டு விழா அனைத்தையும் அருகிலேயே இருந்து கண்டும், கேட்டும் கருதியும் இந்த ஆய்வை ஆய்வாளர் உருவாக்கியுள்ளார். எல்லையில்லாத ஆழமும் அகலமும் உடைய தமிழ் இலக்கியக் கடலில் கலந்துவிடும் இந்தத் துளியும் அழியாத அமரத்துவம் பெற்றுவிடும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

வாழ்க வளர்க இந்த ஆய்வாளர்.

டாக்டர். பொன் சௌரிராசன்

# மதிப்புரை

டாக்டர், R. மனுவேல்
M.A, Ph.D.,

தமிழ்த்துறைத் தலைவர்
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்
திருப்பதி-2

எல்லாம் வல்லவன் இறைவன். அவனின்றி ஓர் அணுவும் அசையாது என்னும் சொற்றொடர் இறைவனின் அளவிடற்கரிய சக்தியை வெளிப்படுத்துவன. மனிதன் தன் சுய சக்தியாலும் சுய அறிவாலும் இயற்கையை வெல்ல வேண்டும் என்று எவ்வளவு தான் போராடினாலும் கடல் கொந்தளிப்பு, நில நடுக்கம், கொடிய வியாதி, இவைகளால் தாக்கப்படும்போது இறைவனின் திருவருளுக்காக ஏங்குகிறான். அன்றாட வாழ்க்கையில்கூட இன்பத்தையும், நன்மையையுமே நாடும் மனிதன் சிறுசிறு பிரச்சனைகள் வந்துற்றபோது சோர்வுற்று இறைவா என்று கூப்பிடுகிறான். ஆகவே, இறையருள் தேவைப்படும்போதெல்லாம் பரம்பொருளைத் தேடிச் செல்வது மானுடரின் இயல்பாகும். மேலும் படைக்கப்பட்ட உயிர்களுள் உணவு, உறைவிடத்தையும் கடந்து மேலான ஓர் இலக்கியத்தைக் காணவே மானுடப் பிறப்பு தோன்றியது அந்த உயர்ந்த இலட்சியமாகிய இறைவன் திருவருளுக்காக சிலர் தம் வாழ்வை ஒப்படைத்து வாழ் கின்றனர். இறைவழிபாட்டிற்கு இதுவும் ஒரு தலையாயக் காரணமாகும்.

மானுடரின் குறைகளுக்காக மனம் இரங்கும் இறைவனும் பக்தர்களின் குறைகளை நீக்கி அருள் புரிகிறான். அத்தகு அருளாளனின் பாதுகாப்பில் உள்ள பக்தர்களுக்கு இன்பமே; எந்நாளும் துன்பமில்லை. அவன் சந்நிதி தேனினும் இனிய மதுரம் எந்நாளும் இறைவனடிகளில் வீற்றிருக்க நினைக்கும் பக்தர்கள் தாங்கள் குடியிருக்கும் பகுதியிலேயே ஒரு திருக்கோயிலை எடுத்து அங்குத் தாம் நினைத்த கடவுளின் திருவுருவத்தை எழுப்பினர். இவ்வாறு நிறுவப்பட்டதே இறைவனின் திருத்தலங்கள்.

காக்கும் கடவுளாகிய திருமாலின் திருத்தலங்கள் நாடெங்கும் காணப்படுகின்றன. அவற்றின் எண்ணிக்கை எண்ணிலடங்கா. அவர் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு கோலத்துடன் மக்களின் குறைதீர்க்கும் இறைவனாகக் காட்சி யளிக்கிறார். அவர் தம் திருமணக்கோலத்தோடு மகிழ்ச்சியாக வீற்றிருக்கும் திருத்தலமே நாராயணவனம் என்னும் திருவூராகும்.

நாராயணவனத்தில் எழுந்தருளியுள்ள கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் சிறப்பு வாய்ந்த வைணவத் திருத்தலங்களுள் ஒன்றாகும். ''நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள்'' என்னும் தலைப்பில் வெளிவரும் இந்நூல் திருவாளர்

மு. இராமலிங்கம் அவர்களால் இயற்றப்பெற்றதாகும். இவ் ஆய்வு நூல் நான்கு கலைப்புகளின்வழி திருமாலின் பெருமைகளை நயம்பட நவில்கின்றது.

முதற்பகுதி, இறைவனுக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பினை விளக்கித் திருத்தலங்களில் இறைவனுக்கு எடுக்கும் திருக்கோயில்கள் மக்களின் மனவுணர்வுகளின் பிரதிபலிப்பைக் காட்டுவனவாக அமைந்துள்ளது. பக்தர்களிடம் காணப்பெறும் நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், கலாச்சாரம், பண்பாடு, அனைத்தும் அவர்கள் வாழும் நிலத்தின் பின்னணியிலும் அமைந்துள்ள திறம் நன்கு சுட்டிக்காட்டப் பெற்றுள்ளது. 'நாராயணவனம்' பெயர்க் காரணமும் அத் திருத்தலத்தின் பெருமாளுக்குக் கல்யாண வெங்கடேசுவரர் என்னும் பெயர்க் காரணமும் புராணக் கதைகளோடு இலக்கிய நயத்துடன் கூறப்பட்டுள்ளது. பழமை வாய்ந்த நாராயணவனத்தைச் சுற்றியுள்ள ஏறக்குறைய எட்டுத் திருத்தலங்களைப் பற்றி அறிந்துகொள்ள இரண்டாம் பகுதி துணை செய்கிறது.

அடுத்து வைணவத் திருக்கோயிலின் வளர்ச்சியும் நாராயணவனத் திருக்கோயில் எவ்வாறு ஆகமத்தின் அடிப்படையில் நிறுவப்பெற்றது என்ற செய்திகளும் வரைபடங்கள் வழி நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளன. திருமேனிகளின் சீரான வைப்பு முறைகள் பற்றிய குறிப்பும் உரைக்கப்பட்டுள்ளது. திருமாலின் பத்து அவதாரங்கள் கல் திருமேனியாக எழுந்தருளிய பாங்கும் விளக்கப்பட்டுள்ளது.

இத் திருக்கோயில் வழிபாட்டுமுறை திருமலை திருப்பதி திருக்கோயில் பண்டு தொட்டு சீராக நடந்து வந்தமை அறியப்பெறுகிறது. அன்று இறைவனுக்குத் திருமணம் நடந்த முறையிலேயே இன்றும் அனைத்துச் சடங்குகளுடன் பெருமாளுக்குத் திருக்கல்யாணம் செய்யப்பெறுகிறது. திருக்கோயிலின் நிர்வாகப்பணி தொடக்கத்தில் கார்வேட்டி நகர மன்னர்களால் சீரிய முறையில் செய்யப்பட்டமையும், தொடர்ந்து திருமலை திருப்பதி தேவத்தானத்தாரால் சிறப்பாக நடந்துவரும் செய்தியும் குறிக்கப்பெற்றுள்ளது.

இந்நூலின் மையப் பகுதியாக விளங்குவது "திருக்கோயில் திருவிழாக்கள்" என்பதாகும். திருவிழாக் காலங்களில் மக்கள் கடைப்பிடிக்கும் மரபுகள், நோன்புகள், விழாப் பணிகள் முதலியவை குறிப்பிடத்தக்கது. இவை பக்தர்களின் இறையுணர்வை நன்கு புலப்படுத்தவல்லன தீய எண்ணங்களை விரட்டி மனதிலுள்ள மாசை அகற்றி நல்லெண்ணத்தை வளர்க்க இவ்விழாக்கள் பயன்படுமாற்றை அறியலாம். விழா வகைப்பாடு பொது நிலை, சிறப்பு நிலை என்னும் இரண்டு பகுதிகளில் விழாத் தொடர்பாக நடைபெறும் அனைத்துச் செய்திகளையும் ஆய்வாளர் தொகுத்துத் தருகிறார் இவை கற்போர் மனதைக் களிப்புறச் செய்வது மட்டுமின்றி இறைவன்பால் ஈடுபாட்டையும் தெய்வ பயத்தையும் ஏற்படுத்துகின்றன. நம் சான்றோர் இத்தகு திருவிழாக்கள் வழி மக்களை நெறிப்படுத்தியும், இறையருளைப்

பெற்றும் நாட்டு வளத்தைப் பெருக்கியும் அமைதியாக வாழ்ந்த பாங்கும் இப்பகுதியின் வாயிலாக நாம் அறிகிறோம். மேலும் திருமால், பத்மாவதித் தாயார், ஆண்டாள், ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள் ஆகியோர்க்கு இத் திருக்கோயிலில் நடத்தப்பெறும் விழாக்கள் இங்கு விளக்கப்பெறுகின்றன.

இந்நூல் வைணவத்தின் பல்வேறு சிறப்புச் செய்திகளைக் கூறித் திருமாலின் பெருமைகளை வெளிப்படுத்துகிறது. குறிப்பாகச் சித்தூர் மாவட்ட மக்கள் இந்நூலைக் கற்று மகிழும் நல்வாய்ப்பைப் பெறுகின்றனர் மக்களின் பழக்க வழக்கம், பண்பாடு, இறையுணர்வு ஒற்றுமையுணர்வு முதலியவை சீரிய முறைகளில் காட்டப்பெற்றுள்ளன. திருமாலின் திருக்கல்யாண திருக்கோலக் காட்சி பக்தர்களின் மனதில் அமைதியையும் இன்பத்தையும் அளிப்பதுபோல் இந்நூலைக் கற்பவரும் இன்பமும் நற்பேறும் அடைவர் என்பதில் ஐயமில்லை. இந்நூலாசிரியர் திருவாளர் மு. இராமலிங்கம் அவர்கள் இத்தகு சிறந்த நூல்கள் பல படைத்துத் தமிழன்னைக்கு அணி செய்ய எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவாராக.

டாக்டர் ஆர். மனுவேல்

# அணிந்துரை

முனைவர் தெ. ஞானசுந்தரம்

பேராசிரியர், தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-30

ஆய்வு இருவகை. ஒன்று நூலாய்வு; மற்றொன்று கள ஆய்வு. இன்று கள ஆய்வு பெருகிவருகிறது. சமயக்கணக்கர்கள் காண்டல் (பிரத்யட்சம்) கருதல் (அனுமானம்) உரை (சப்தம்) என்று மூன்று அளவைகளை முதன்மையாகக் கொள்வர். அவற்றுள் பின்னவை இரண்டினும் முன்னது வலிமையானது. காரணம், நேரடியாக உணர்வதே என்பர். அதுபோல நூலாய்வினும் கள ஆய்வு நேரடியாகக் கண்டறிதலாக இருத்தலின் உயர்வும் வலிமையும் மிக்கது எனலாம்.

"ஊரானோர் தேவகுலம்" என்னும் முதுமொழி தோன்றிய நாடு தமிழ்நாடு. ஒரு காலத்தில் தமிழ்நாடு வடக்கே வேங்கடம் முதல் தெற்கே குமரி வரை விரிந்திருந்தது. இந் நிலப்பரப்பில் எடுக்கப்பட்டுள்ள திருக்கோயில்களும் விண்ணகரங்களும் எத்தனை எத்தனை! சிவனுறையும் ஆலயங்களைத் திருக்கோயில் என்றும் திருமால் உகந்தருளிய இடங்களை விண்ணகரங்கள் என்றும் குறித்தல் வழக்கம்.

தொண்டை நாட்டில் விண்ணகரங்கள் பல உள்ளன. அவற்றுள் ஒன்று புத்தூரை அடுத்த நாராயணவனம் என்னும் ஊரில் உள்ளது. அதற்கு அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் என்பது பெயர். அக் கோயில் பற்றியும் சிறப்பாக அங்கு நடைபெறும் விழாக்கள் பற்றியும் பல்வேறு செய்திகளை நூலாய்வோடு கள ஆய்வும் செய்து வெளிப்படுத்துவதே திரு. மு. இராமலிங்கம் அவர்களின் இந்நூல் ஆகும்.

இந்நூலின் பல்வேறு பகுதிகளில் ஆசிரியர் எடுத்துக்கொண்ட முயற்சி நன்கு தெரிகிறது. இத் திருத்தலத்தைப் பற்றிய புராணச் செய்திகளைத் தருவதோடு அங்குள்ள கல்வெட்டுச் செய்திகளைத் தருவதும், அக் கோயில் அர்ச்சகர், இசைக்கலைஞர் ஆகியோரைச் சந்தித்துச் செய்திகளை அறிந்து திரட்டித் தருவதும் சான்றாக அமைந்துள்ளன.

நாராயணவனம் என்னும் பெயரைக் கொண்டு அது காடாக இருந்த பகுதி என்று விளக்கிக் காடு என்னும் பெயர் கொண்ட கோயிலமைந்த ஊர்களைத் தொகுத்தளிப்பது சுவையாக உள்ளது,

நாராயணவனத்தின் சுற்றுப்புறத்தில் உள்ள ஆலயங்கள், கல்யாண வெங்கடேசுவரத் திருக்கோயில் அமைப்பு, அங்கு நடைபெறும் நாள், திங்கள் வழிபாடுகள், சிறப்பு வழிபாடுகள், பல்வேறு விழாக்கள் ஆகியன சிறப்பாகவும் விளக்கமாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளன.

திருமலையில் வீற்றிருக்கும் வெங்கடேசப் பெருமாள் கோயிலைப் போலவே இத் திருக்கோயிலும் வராக சுவாமி எல்லைக்குட்பட்டிருத்தலையும், வைகானச ஆகமத்தின்படி வழிபாடுகள் நடைபெறுதலையும், சுட்டுவது சிறப்புக்குரியது இக் கோயில் வடகலையார் கோயில் என்பதனைத் தெரிவிப்பது.

இக் கோயிலில் கூரத்தாழ்வான் திருவுருவம் இருத்தலை விளக்குவது அரிய செய்தி தொண்டைநாட்டில் கூரத்தில் தோன்றிய ஆசாரியராகிய அன்னாரது திருவுருவத்தைத் தங்கள் கோயிலில் எழுந்தருளச்செய்து வைணவர் போற்றினர் என்னலாம்.

திருமணம் ஆகாமல் தடைப்படும் பெண்களுக்கு விரைந்து அது நடைபெறவும், மணமானவர்கள் பிள்ளைப்பேறு வேண்டியும் இத் திருக்கோயிலுக்கு வருகின்றனர் என்னும் செய்தி மனங்கொள்ளத் தக்கது இத்தகைய கோயில்கள் வேறு சில இடங்களிலும் உள்ளன. தஞ்சைமாவட்டத்தில் திருமணஞ்சேரி என்னும் தலத்தோடும் இத்தகைய நம்பிக்கையைத் தொடர்புபடுத்திக் கூறுவர்.

இவையேயன்றி, நம்பிக்கைகள், கோயில் அமைப்பு, தசாவதாரம், ஆழ்வார்கள், விழாக்களின் தோற்றம், வளர்ச்சி, நோக்கம் முதலானவை குறித்துப் பொதுவான செய்திகள் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

சுருங்கச் சொல்லின், இந்நூல் நாராயணவனப் பகுதியில் அமைந்துள்ள ஆலயங்களின் வரலாற்றினையும் அமைப்பினையும் நடைமுறைகளையும் தெரிவிக்கும் ஒரு சிறந்த கையேடு ஆகும்.

ஆசிரியரின் முயற்சி வெல்வதாக. தமிழ் உலகமும், வைணவ உலகமும் இவரது முயற்சிகளைப் போற்றும் என்று நம்புகிறேன். என் நல்வாழ்த்துகள்.

"கலையகம்"
149, அண்ணாநகர்
மேற்கு விரிவாக்கம்
சென்னை-600 101.

அன்புடன்
தெ. ஞானசுந்தரம்

# நன்றியுரை

தெலுங்கும் தமிழும் தேனும் பாலும் போல இயைந்து இணைந்து மக்கள் வாழ்வையும் வளத்தையும், பண்பையும் பகுத்தறிவையும் வளர்க்கின்ற ஆந்திர மாநிலப் பகுதி சித்தூர் மாவட்டமாகும். இம் மாவட்டம் ஆந்திரத்தோடு இணைந்த நாளிலிருந்து தமிழ் மொழிப் பயிற்சியும் பயனும் மெல்ல மெல்லக் குறைந்துவருகின்றன. என்றாலும் வைணவம், சைவம், கிறித்துவம் முதலான சமயங்கள் தளர்ந்து வரும் தமிழுக்கு ஊக்கம் தந்து அதனைப் பெரிதும் காத்துவருகின்றன. இந்த வகையில் சித்தூர், புத்தூர், நகரி திருப்பதி பகுதிகளில் வைணவம் வாழ்வித்து வரும் தமிழ் குறிப்பிட்டுப் போற்றத் தக்கது. இவ்வாறு வைணவம்வளர்த்து வரும் தமிழ் பல பாங்குகளைக் கொண்டது. அவற்றுள் ஒன்று வைணவக் கோயில்களில் நிகழும் விழாக்கள் ஆகும்.

இத்தகு திருமாலுக்குரிய திருவிழாக்கள் வைணவக் கோயில் பலவற்றில் இங்குச் சிறப்பாக நிகழ்ந்துவருகின்றன. அத்தகு கோயில் திருவிழாக்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது "நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்களாகும்.'' ஓராண்டு காலம் தொடர்ந்து நேரில் சென்று இரவு பகலாக இருந்து கண்டும் கேட்டும் கற்றும் கருதியும் உருவாக்கப்பெற்றதே இந்த ஆய்வு நூல். இஃது எனது முதல் முயற்சி.குறை நீக்கி குணம் கொள்ளுமாறு வேண்டுகின்றேன்.

இந்நூல் வெளிவரப் பொருளுதவியளித்த திருமலை திருப்பதி தேவத்தானத்தார்க்கும், குறிப்பாக சப்தகிரி திங்கள் இதழ் துணைப் பதிப்பாசிரியர் திரு. N. R. இராமமூர்த்தி அவர்கட்கும் என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

"நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள்'' எனும் தலைப்பில் ஆய்வு செய்யவும் இந்நூலை வெளியிடவும் அனுமதியளித்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கும், நாராயணவனம் திருக்கோயில் பற்றி ஆய்வு செய்ய அனுமதியளித்த கோயில் ஆய்வாளர் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னைப் பகுதி நேர ஆய்வு மாணவனாகத் தேர்வு செய்து எனக்கு மேற்பார்வையாளராக இருந்து மேலே குறித்த தலைப்பினைத் தேர்ந்தெடுத்து ஆய்வு செய்யப் பணித்ததுடன் இந்நூலை மாருதி அச்சகத்தினர் விரைவாக அச்சிட்டு வெளியிட

பல்லாற்றானும் துணை நின்றவர் பேராசிரியர் பொன். சௌரி ராசனார் அவர்கள். என் வாழ்விற்கு வழிகாட்டியாக நின்று என் கல்வி வளர்ச்சிக்கு எப்போதும் துணையாக இருந்துவரும் அவர் இந்நூலுக்கு முன்னுரை வழங்கி நூலைச் சிறப்பித்தார். அவருக்கு என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

என்னை ஊக்குவித்து ஆய்வேட்டினை விரைவாக எழுதச் செய்த பேராசிரியர் டேனியல் தேவ சங்கீதம் அவர்களுக்கும், முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் இணைப் பேராசிரியர் ந. தர்மாரெட்டி அவர்களுக்கும், விரிவுரையாளர் டி. ஜெ இரகுபதி அவர்களுக்கும் என் நன்றி.

இந்நூலுக்கு மதிப்புரை வழங்கி இந்நூலுக்கு மதிப்பளித்த முனைவர் ஆர். மனுவேல் தமிழ்த் துறைத் தலைவர் ஆவர். அவருக்கு என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

இந்நூலுக்கு அணிந்துரை நல்கி அணி செய்த பேராசிரியர் டாக்டர். A. ஞானசுந்தரம், தமிழ்த்துறை பச்சையப்பன் கல்லூரி சென்னை, அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றி.

நாராயணவனம் திருக்கோயிலில் கள ஆய்வு செய்யவும், நேரில் கண்டு செய்திகளைச் சேகரிக்கவும் பேருதவி புரிந்த திரு A. சௌரிராச பட்டாச்சாரியார் அவர்கட்கும் அவருடைய திருமகன் திரு A ஸ்ரீதர், திரு ஏ. திருவேங்கட ஆச்சாரியர் திரு M. இராசகோபால் பிரபந்தம் ஓதுபவர். மற்றும் கோயில் ஆய்வாளர், கோயில் நிர்வாகிகள், கோயில் பணியாளர்கள் ஆகியோருக்கும் என் நன்றி.

ஆய்வேடு எழுதுவதற்குப் பயன்பட்ட நூல்களை அளித்து உதவிய திருவேங்கடவன் பல்கலைக்கழக நூலகர், அடையார் தமிழாராய்ச்சி நிறுவன நூலகர், சென்னை மறைமலையடிகள் நூலகர், கன்னிமாரா நூலகர், நகரி கல்லூரி நூலகர் முதலானோர் அனைவருக்கும் என்றும் நன்றி உடையவனாக இருப்பேன்.

ஊர் மற்றும் மண்டல வரை படங்கள், சிற்பங்களின் வரை படங்கள், கோயில் வரை படம் ஆகியவற்றை வரைந்து தந்த நகரி அரசினர் உயர்நிலைப்பள்ளி ஓவியர் P. V. துரைசாமி அவர் களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுலக நண்பர்களான சாந்தாடி சதாசிவம், கே. சேகர், M. கிருட்டிணமூர்த்தி, தெ. மீனாட்சிதாசன் ஆகியோர் எனக்குப்

பல வழிகளிலும் துணை நின்றனர். அவர்களுக்கும் நன்றி கூற கடமைப்பட்டுள்ளேன்.

எனக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்து உயர்ந்தோனாக்கிய என் தந்தை மி. எ. முனுசாமி முதலியார் அவர்களுக்கும் எனது இளவல் மி. மு. புண்ணியகோட்டிக்கும் பல்வேறு வகையில் உதவிய எனது ஆயிருர் மனைவி திருமதி சரோசா எனது மூத்த மகன் மணிக்கும் ஆகியோருக்கும் நன்றி.

எனக்கு வழிகாட்டியாக அமைந்து அறவுரை பல கூறிய திரு H. S. சீனிவாசராவ் முன்னாள் நகரி கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் இன்னாள். முதல்வர் திரு A. நரசிம்மராஜு அவர்களுக்கும் நன்றியுடையவனாக அமைகிறேன்.

எனது கல்லூரி நண்பர்களான திரு சு. சகாதேவன், திரு. K. N. சண்முகம் திரு S. முனிராசுலு செட்டி திரு. P.M.D இராசேந்திரன் திரு V. M. மீரா முகைதீன், திரு S. இரவி வர்மா, திரு B. சங்கரநாராயணராசு திரு A. சுப்பிரமணியம், திரு G. கிரிஜா சங்கர், திரு A மோகன், K. V. இராசசேகர். முதலானோர்கள் கூறிய அறவுரைகள், காட்டிய பரிவு ஆகியவற்றை என்றும் மறவேன்.

மேலும் என்மீது என்றும் பாசம் கொண்டொழுகும், நண்பர்களான, திரு. M. K. பொன்னுசாமி, திரு M. சுப்பிரமணியம், திரு S. இராமலிங்கம், திரு S.S. சம்பத்து, திரு. N.V. சுந்தரமூர்த்தி திரு V. பக்தசீலன். திரு A. N. அருணாசலம் ஆகியோர் காட்டிய ஆர்வத்திற்கும் என் நன்றி.

இந்நூல் விரைவாக வெளியிடுவதற்கு உதவியாய் இருந்த மாருதி அச்சகத்தார் திரு. ஹரிஹரன் அவர்களுக்கும் நன்றி கூற கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூல் நனி சிறக்க நல்லுதவி நல்கிய அத்துணை நெஞ்சங்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்களன்புள்ள,

**மு. இராமலிங்கம்**

# முன்னுரை

மனிதனை நெறிப்படுத்தவும், அவன் தன்னோடு வாழ்கின்ற மக்களோடு இணைந்தும் இயைந்தும் செயல் புரிவதற்காகவும் தன்னைச் சுற்றி வாழ்கின்ற மக்களின் இன்பதுன்பங்களில் பங்கு கொள்வதற்காகவும், சமுதாயம் பல வழிகளில் செயல் புரிந்து வருகிறது. அவற்றுள் ஒன்றே விழாக்களாகும். விழாக்களிலும் கோயில் திருவிழாக்கள் ஊர்மக்கள் அனைவரையும் ஒன்று கூட்டி மகிழ்வூட்டி இயக்கிச் செல்லும் சமுதாயம் கண்ட ஒரு நல்ல நெறியாகும். இவ்வாறு ஊர் தோறும் நாள் தோறும் விழாக்கள் நிகழ்வதற்கு ஏற்றவாறு கோயில்கள் அமைந்துள்ளன. அவற்றுள் ஒன்றே நாராயணவனம் கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில். இக்கோயில் தொடர்பாக எழுந்த திருவிழாக்கள் பல. பொதுவாகக் கோயில்கள் பற்றியும் சிறப்பாகத் திருவிழாக்கள் பற்றியும் ஆய்வுகள் சில நிகழ்த்தப் பெற்றுள்ளன.

ஆனால் கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் பற்றியோ அங்கு நிகழும் திருவிழாக்கள் பற்றியோ ஆய்வு எதுவும் மேற்கொள்ளப் பெறவில்லை. எனவே இந்த ஆய்வு இங்கு மேற்கொள்ளப்பெறுகிறது.

ஆய்வு நெறிகள் பல, இங்குக் களஆய்வு சிறப்பாக மேற்கொள்ளப் பெற்றது.

இத் திருக்கோயிலில் நிகழும் திருவிழாக்கள், அவை நிகழ்த்தப் பெறுகின்ற நிலை ஆகியன வரலாற்று நோக்கிலும், களஆய்வு அடிப்படையிலும் ஆய்ந்துரைக்கப்பெற்றுள்ளன.

1. திருவிழா, விழாநிகழும் கோயில், கோயில் அமைந்த திருவூர், பொதுவாகக் கோயில் பற்றிய பற்பல அரிய செய்திகள், கோயில்கள் நடைபெறும் வழிபாடுகள் என்ற அடிப்படையில் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி தல வரலாறும் மக்கள் நம்பிக்கைகளும், வேண்டுதல்களும் 2. அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் அமைப்பும் திருமேனிகளும் 3. அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் வழிபாடுகள். 4. அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள் என்ற நான்கு இயல்களில் இந்த ஆய்வு அமைந்துள்ளது.

முதலாவது இயல், பொதுவாக, மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றிய வழிபாட்டைக் குறிப்பிட்டு, சிறப்பாக அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருத்தலமாகிய நாராயணவனத்தின் தல

வரலாற்றையும் மக்கள்தம் தெய்வ நம்பிக்கையையும், தெய்வத்திடம் அவர்கள் கேட்கும் வேண்டுதல்கள் பற்றியும் விவரிக்கிறது.

இரண்டாவது இயல், அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலைச் சுற்றியுள்ள பல்வேறு கோயில்களைப் பொதுவாகக் குறிப்பிட்டு, சிறப்பாகக் கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலை விளக்கி, ஆகமங்கள் போக்கில் கோபுரம், கருவறை, பள்ளியறை, பிற திருமண்டபங்கள் எவ்வாறு அமைந்துள்ளன எனக் குறிப்பிட்டு மூலவர், உலாத் திருமேனி, ஆழ்வார்களின் திருமேனி, திருமாலின் அவதாரங்கள், திருக்கோயில் சிற்றாலயங்கள், ஊர்தித் திருப்பணிகள் ஆகியவற்றைக் கூறி அமைகிறது.

அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் வழிபாடு என்னும் மூன்றாவது இயல், வழிபாடு பற்றி விளக்கி வழிபாட்டு வகைசளைக் குறிப்பிட்டு இத் திருக்கோயிலில் நிகழும் நாள் வழிபாட்டையும், கிழமை வழிபாட்டையும், திங்கள் வழிபாட்டையும் விவரித்துப் பல்வேறு வகையான விழாக்களைக் கூறி வழிபாட்டுச் செயல்கள், வழிபாட்டைச் செய்விப்போர், வழிபடும்போது காட்சிதரும் திருமேனியின் அலங்காரங்கள் ஆகிய வற்றைக் கூறி முடிகிறது.

நான்காவது இயல், திருவிழாக்கள் பற்றியது. இந்த இயல் விழாப் பற்றிய விளக்கத்தோடு தொடங்குகிறது. விழாக்களின் தோற்றம், வளர்ச்சி, விழாக்களின் குறிக்கோள், விழாவும் நோன்பும், விழாவும் மனிதனும், விழாவும் கலையும், விழாவின் வகைப்பாடு, நாள் விழா, கிழமை விழா, கோள் விழா, ஆண்டு விழா, ஆழ்வார், ஆச்சாரியர்கள் பற்றிய விழா ஆகியன களஆய்வு அடிப்படையில் இவ்வியலில் கூறப்பெற்றுள்ளன.

இறுதியில் ஆய்வுத் தொடர்பான பின்னிணைப்புகள் இடம் பெற்றுள்ளன.

**மு. இராமலிங்கம்**

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அத்தி. | அத்தியாயம் |
| இ. ப. | இரண்டாம் பதிப்பு |
| இ. பா | இரண்டாம் பாகம் |
| உரை. ஆ | உரையாசிரியர் |
| கழக வெளியீடு | சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் |
| தெலு. நூ | தெலுங்கு நூல் |
| தொ. | தொகுதி |
| தொ. ஆ | தொகுப்பு ஆசிரியர் |
| ப. | பக்கம் |
| பக். | பக்கங்கள் |
| பதி | பதிப்பு |
| பதி ஆ | பதிப்பு ஆசிரியர் |
| பா. | பாடல் |
| ம. ப. | மறு பதிப்பு |
| மு. நூ. | முற்காட்டிய நூலிலிருந்து |
| மு. ப. | முதற்பதிப்பு |
| மேலது | மேற்காட்டிய நூலிலிருந்து |
| மொ. பெ. ஆ | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| | ENGLISH |
| IBID | IBIDEM |
| P | PAGE |
| P. P. | PAGES |
| Vol. | Volume. |
| F. E. | FIRST EDITION |
| C. E. | CHIEF EDITOR |
| E | EDITOR |

# இயல் ஒன்று

1-0 முன்னுரை

1-1-0 கல்யாண வெங்கடேசுவரத் திருத்தல வரலாறு

*1-1-1 மூர்த்தி*
*1-1-2 தலம்*
*1-1-3 தீர்த்தம்*

1-2-0 நாராயணவனம் பெயர்க்காரணம்

*1-2-1 திருக்கோயில்களும் நாராயணவனமும்*
*1-2-2 நாராயணவனம் அமைவிடம்*
1-2-3 இயற்கையும் இறையும்
1-2-4 மக்கள் குழுவும் பக்தி நிலையும்
1-2-5 மக்களின் மொழி கல்வி பொருளாதாரம்
*1-2-6 அலுவலகங்களும் நிர்வாகமும்*
*1-2-7 தொழிலும் பொருளாதாரமும்*

1-3-0 புராணச் செய்திகள்

*1-3-1 பத்மாவதித் தாயாரின் சிறப்புகள்*
1-3-2 கோயில் பற்றிய செய்திகள்

1-4-0 நம்பிக்கை

1-4-1 சொல்லும் பொருளும்
1-4-2 சமயமும் நம்பிக்கையும்
1-4-3-0 சமூக நம்பிக்கை

1-4-3-1 நம்பிக்கையும் மக்களின் மனநிலையும்
1-4-3-2 நம்பிக்கையும் மக்களும்

1-4-4-0 இறை நம்பிக்கை

1-4-4-1 நம்பிக்கையும் இறைவழிபாடும்
1-4-4-2 நம்பிக்கையும் திருவிழாவும்
1-4-4-3 நம்பிக்கையும் சடங்குகளும்

1-5-0 வேண்டுதல்

*1-5-1* பல்வகை வேண்டுதல்களும் அவற்றை நிறைவேற்றுதலும்

# முன்னுரை

நாராயணவனம் வெங்கடேசுவரசுவாமிதிருக்கோயில்பற்றி வருகின்ற இயலுக்கு முன்னோடியாக அமைந்துள்ள முதல் இயலான இவ்வியலில் கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருத்தல வரலாறு சிறப்பாக இடம் பெறுகிறது. இவ்வியல் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று பொதுவாகத் தொடங்கி நாராயணவனம்பற்றிச் சிறப்பாக அமைந்து செல்கிறது. இங்கு நாராயணவனத்தின் பெயர்க் காரணம் நாராயணவனம் என்னும் திருத்தலம் அமைவிடம், இயற்கைச் சூழல் முதலியனவும் தலவரலாறு பற்றிய புராணச் செய்தியும் தொடர்ந்து இங்கு எழுதப்பெற்றுள்ளன இவ்வியலிலேயே மக்கள் கொண்டுள்ள சமய ,நம்பிக்கையும், இறை வழிபாடும் அடுத்து இடம் பெறுகின்றன. மக்கள் நேர்ந்துகொள்ளும் வேண்டுதல்கள் அவற்றின் வகைப்பாடுகள் அவற்றை நிறைவேற்றுதல் ஆகியன இறுதியில் குறிக்கப்பெற்றுள்ளன.

## 1-1 கல்யாண வெங்கடேசுவரத் திருத்தல வரலாறு

இவ்வியலில் கல்யாண வெங்கடேசுவரத் திருத்தல வரலாறு எனும் தலைப்பில், மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றி விவரமாக கூறப்பெறுகிறது; கல்யாண வெங்கடேசுவரரைப் பற்றிய செய்தி மூர்த்தி என்ற தலைப்பிலும், நாராயணவனம் என்ற தலைப்பில் தலம் பற்றிய செய்தியும் இத் திருத்தலத்தில் அமைந்துள்ள தீர்த்தம் பற்றிய செய்தியும் சிறப்பாக ஆயப் பெறுகிறது. அடுத்துப் புராணச் செய்திகள் எனும் தலைப்பில் கல்யாண வெங்கடேசுவரர் பற்றிய வரலாறு விவரமாகத் தெரிவிக்கப்பெறுகிறது.

### 1-1-1 மூர்த்தி

நாராயணவனம் திருக்கோயிலில் அமைந்திருக்கும் மூலவர் கல்யாண வெங்கடேசுவரர் ஆவார். உற்சவர் வீதி தோறும் எழுந்தருளி அடியவர்கட்குக் காட்சியளிப்பார். இதனால் இறைவனின் எளிவந்த தன்மை (ஸௌலப்பியம்)

புலனாகும். தன்னை நாடி வருவார்க்கு மூலவராக இருந்து பெருமாள் அருள் புரிவார்.

திருக்கோயிலுக்கு வர இயலாதவர்க்குத் தானே வீதி தோறும் சென்று உற்சவராகி அருள் புரிவார். எனவேதான் இறைவனைக் கருணாமூர்த்தி என்று அழைக்கின்றனர்.

கோயிலில் எழுந்தருளும் உற்சவர்களைப் பலவகையாக அமைப்பர். அதைப் பேரம் என்றும் சிலை என்றும் அழைப்பர்.

திருமாலின் மூர்த்தம் (சிலை) திருப்பதியில் ஐந்து வகை யாக அமைந்துள்ளது.

1. "துருவபேரம் மூலவர் (திருவேங்கடவன்)
2. கௌதுக பேரம் —வெளியே செல்லாத உலோகச்சிலை (உக்ர சீநிவாசர்)
3. உற்சவ பேரம்—கோவிந்தராசர் (மலையப்பர்)
4. ஸ்நபன பேரம்—ஸ்நபனச் சிலை
5. பலி பேரம்—பள்ளியறைச் சிலை (போக சீநிவாச மூர்த்தி)"[1]

கோயிலில் எழுந்தருளியுள்ள கடவுளின் திருமேனியைச் சிலை என்பர்; பிம்பம் எனக் கூறுதலும் உண்டு; விக்கிரகம், பேரம், அர்ச்சை என்றும் வட மொழியாளர் கூறுவர்.

மூலவரைக் கற்சிலையாகவே அமைத்திருப்பர். உற்சவரைச் செம்பினாலோ ஐம்பொன்னாலோ அமைப்பர்.

கல்லுக்குத் தனிச்சிறப்பு உண்டு.

கல் எக்காலத்திலும் குளிர்ச்சியாகவே அமைந்திருக்கும். எவ்வளவு வெப்பத்தால் தாக்கப்பட்டாலும் இறுதியில் அது குளிர்ந்தே காணப்படும்.

எனவே இறைவனும் எல்லாக் காலத்திலும் குளிர்ச்சி யாகவே இருக்கிறான் என்பதை உணர்த்தவே கல்லில் மூலவரை அமைக்கின்றனர்.

சமூகத்தில் வாழும் மக்களுக்குப் பலதரப்பட்ட பணிகளாலும், இன்னல்களாலும் மன அமைதி இல்லாமல்

அவர்களின் மனம் அலைவதாலும் அவர்கள் எடுத்த பிறவிக்கு நற்பயனைப் பெறத் (வீடுபேறடைய) தடங்கல் ஏற்படுகிறது.

அதனால் மனிதன் தன் இன்ப துன்பங்களைத் துறந்து கடவுள் சிந்தனையில் ஈடுபட்டு வீடுபேறடைய இறைவனை வழிபடுகிறான்.

இத் திருத்தலத்தில் கடவுள் உருவத்தை ஆதாரமாகக் கொண்டு திருக்கோயில் எழுப்பி மக்கள் வழிபட்டு வருகின்றனர். கடவுள் உருவத்திற்குச் சிறப்பாக நான்கு கைகள், ஆடை, சூலப்படை, அணிகலன்கள் ஆகிய அமைப்பினைக் கொடுத்து வணங்கிவருகின்றனர்.

இங்கு அமைந்திருக்கும் இறைவன் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவரப் பெருமாள் ஆவார். இறைவி பத்மாவதித் தாயார். பெருமாள் திருமணத் திருக்கோலத்தில் நின்றவாறு காட்சியளிக்கிறார். சங்கு, சக்கரம், கத்தி ஆகியவைகளைக் கையில் ஏந்தி அழகுபடுத்தப்பட்ட நிலையில் காணப்படுகிறார்.

வலக் கீழ்க்கையில் காப்பு அணிந்தும் இடது கையைக் கீழ்நோக்கி வைத்த நிலையிலும், மார்பில் திருமகளைப் பெற்றும் காட்சியளிக்கின்றார்.

இதேபோன்று திருமகள் உருவத்தைக் கொண்ட பத்மாவதித் தாயார் தாமரை மலரின் மேல் அமர்ந்தவாறு நான்கு கரங்களிலும் தாமரை மொட்டுக்களை ஏந்தியவாறு காட்சியளிக்கிறார்.

கடவுளுக்குத் திருமுழுக்கு, அலங்காரம், ஆடை, அணிகள், மலர்மாலைகள், படையல்கள், வழிபாடுகள், திருவிழாக்கள் ஆகியன செய்யப்படுவது மக்களுக்கு எளிதாக அமைகிறது அதனால் மக்கள் மன ஒருமைப்பாட்டினால் பக்தியைச் செலுத்தி இன்ப துன்பங்களைத் துறந்து, இவ்வழியிலேயே வீடுபேறு அடைவதற்கு வழிமுறைகள் உள்ளன. எனவே மக்கள் வீடுபேறு அடைய பூசை செய்வதுதான் தகுந்த முறை யாகும்.

### 1.1.2 தலம்

மூர்த்தமும், தீர்த்தமும் சிறந்து காணப்படும் திருத்தலங் [illegible] அவற்றிற்குச் சென்று வழிபடுதல் இந்து சமயத்தார்

இடையே என்றும் நின்று நிலவும் வழக்கமாகும். மூர்த்தி, தீர்த்தம் ஆகியவை எவ்வாறு வழிபடுவதற்குரியனவாக உள்ளனவோ அவ்வாறே தலங்களும் வழிபாட்டுக்குரியனவாக மதிக்கப்படுகின்றன.

தலம் என்பது இறைவனின் திருக்கோயில் அமைந்துள்ள இடத்தைக் குறிக்கும். தலத்தை வடமொழியில் 'க்ஷேத்திரம்' என்று கூறுவர்.

வைணவத் தலங்கள் பலவற்றைச் சான்றோர் கூறுவர்' அவற்றுள், திருப்பதி, திருவரங்கம் குறிப்பிடத்தக்கனவாகும்.

மக்கள் கடவுள் வழிபாடு செய்வதற்காகவே அர்ச்ச அவதார உருவில் முன்னோர்களாலும், புராணக் காரணங்களாலும், பல புனித இடங்கள் தோன்றலாயின. இத் திருத்தலங்கள் அந்தந்த மூர்த்திக்கு ஏற்றவாறு சிறப்பு பெற்றுள்ளன. அம்முறையில் தலப்பெருமை பெற்றுள்ள இடங்கள் திருமலை என்றழைக்கப்படுகின்ற திருவேங்கடமும், திருப்பதிக்குத் தென்திசையில் அமைந்துள்ள நாராயணவனத் திருத்தலமும் ஆகும்.

"இவ்விரண்டு திருத்தலங்களுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இரண்டு திருத்தலங்களுமே வராக சுவாமியின் எல்லைக்கு உட்பட்டு அவரின் சொந்த நிலப்பகுதியில் அமைந்தவையாகும். திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள பெருமாள் திருமலையில் தோன்றுவதற்கு முன்பே அப் பகுதியெல்லாம் வராகப் பெருமாளின் ஆதிக்கத்தில் இருந்துவந்துள்ளது. அவரின் அனுமதி பெற்று சீநிவாசர் திருமலையில் தங்கினார் என்று புராணச் செய்திகள் கூறுகின்றன."[2]

வராக சுவாமியின் எல்லைக்குட்பட்ட நாராயணவனத்தில் பெருமாள் பத்மாவதியைப் பார்த்துக் காதல்கொண்டு மணம் புரிந்துகொண்டார்,

வராக சுவாமியின் எல்லைக்குட்பட்ட பகுதியின் எல்லைக் கோட்டில் அவரின் சிலை வைக்கப்பட்டிருந்தது. இச் சிலை ஆகாசமகாராசாவின் கோட்டைக்குப் பக்கத்தில் இருந்தது. சில ஆண்டுகளுக்குமுன்பு இச் சிலையைத் திருமலை திருப்பதி தேவத்தானத்தார் எடுத்துச்சென்று திருப்பதி அருங்காட்சியகத்தில் வைத்துள்ளனர்,

இத் திருத்தலம் புராண சம்பந்தமானது. பெருமாள் திருமலையிலிருந்து நாராயணவனத்திற்கு வேட்டைக்கு வரும் போது பத்மாவதியைக் கண்டு காதலித்துத் திருமணம் செய்து கொண்டார். இத் திருத்தலத்தை மையமாகக் கொண்டு பத்மாவதியின் தந்தையான ஆகாசமகாராசர் இப் பகுதியை ஆண்டு வந்தார். தம் மகளின் திருமணத்திற்குப் பிறகு அவர்களின் நினைவாக இக் கோயிலைக் கட்டினார். இத் திருத்தலக்கோயில் கிழக்குத் திசையை நோக்கியவாறு அமைந்துள்ளது. இக் கோயிலில் பெருமாளுக்கும் பத்மாவதித் தாயாருக்கும்; தனித்தனியாகச் (சந்நிதிகள்) சிற்றாலயங்கள் அமைந்துள்ளன.

"இத் திருத்தலக் கோயில் சுமார் இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்னதாகவே கட்டப்பட்டதாக வரலாற்றுச் சான்றுகள் கூறுகின்றன,"[3] இக் கோயிலுக்கு மன்னர் காலத்தில் பலரின் திருப்பணிகள் பல செய்யப்பட்டுள்ளன. எனவே திருமலைக்கு உள்ள சிறப்பு இக் கோயிலுக்கும் உண்டு என்பர்.

### 1-1-3 தீர்த்தம்

திருக்கோயில் தீர்த்தத்தில் நீராடித் தம் பாவத்தைப் போக்கிக்கொள்வோரும் தீர்த்தத்தைப் பருகி ஆன்ம லாபம் பெறுவோரும் இந்துக்களிடையே நிறைய காணப்படுகின்றனர்.

சிவத் தலங்களிலும், வைணவத் தலங்களிலும், அம்மன் தலங்களிலும் தீர்த்தத்தைப் பிரசாதமாகத் தருவர். தீர்த்தத்தில் மஞ்சள், பச்சைக் கற்பூரம், துளசி வில்வம் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றையோ பலவற்றையோ கலந்து தருவர். அபிஷேகத் தீர்த்தத்தையும் பக்தியுடன் அருந்துவோர் பலரைக் காணலாம். எனவே இறைவன் சம்பந்தப்பட்ட தீர்த்தமும் இறைவனைப் போலவே வழிபடுவதற்குரியது என்பதே இந்து சமயக் கருத்தாகும். இந்து சமயத்தவர் தங்கள் பாவத்தைப் போக்கிக்கொள்ளவும், மன அமைதி பெறவும் நன்மையடைய வும் இறைவனை வேண்டி மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றையும் நாடி வழிபடுவர்.

மூர்த்தியர் எழுந்தருளும் திருக்கோயிலைச் சார்ந்து தீர்த்த மும் இருக்கும். தீர்த்தம் என்பது புனித நீரைக் குறிக்கும். புனித நீர் என்பது தெய்வத்தன்மை பொருந்திய நீராகும். தெய்வத்

திற்கு எவ்வளவு ஆற்றல் உண்டோ அவ்வளவு ஆற்றல் தீர்த்தந் திற்கும் உண்டு என்பது இந்து சமயக் கருத்தாகும்.

நதிகளைப் போலவே திருக்குளங்களையும் தீர்த்தமாக மதிப்பர். எனவேதான் ஒவ்வொரு தலத்தைச் சார்ந்தும் ஒவ்வொரு தீர்த்தம் அமைந்திருக்கும்.

புனிதத் தலங்களில் அதற்குச் சம்பந்தப்பட்ட முக்கியத் துவம் வாய்ந்த புனித தீர்த்தங்களும் இடம் பெற்றிருக்கும். வடநாட்டில் புனித தீர்த்தங்கள் சிறப்புப் பெற்றுள்ளன. தென்னாட்டில் புனிதத் தலங்கள் சிறப்புப் பெற்றுள்ளன. ஆனால் திருவேங்கடத்திலும், அதற்குச் சம்பந்தப்பட்ட வரலாற்றுச் சிறப்புப் பெற்றுள்ள நாராயணவனத்திலும் தலம், மூர்த்தி, தீர்த்தம் ஆகிய மூன்றும் சிறப்புப் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

நாராயணவனத் திருத்தலத்தில் இரண்டு தீர்த்தங்கள் உள்ளன. அவை பத்ம தீர்த்தம் அரணிநதித் தீர்த்தம் என்பன வாகும்.

பத்ம தீர்த்தத்திற்கும், வெங்கடேசுவரர் வரலாற்றிற்கும் ஒற்றுமை உண்டு. அதாவது ஆகாசமகாராசர் பிள்ளைப்பேறு வேண்டி வேள்வி ஒன்றை நடத்தினார். அப்பொழுது அருணி என்னும் மூலிகையின் உதவியால் வேள்விக்குத் தண்ணீரை நிலத்திலிருந்து வெளியே கொணர்ந்தார். பிறகு அங்கு நதி உருவானது. இந்நதிக்கு அருணி நதி என்று பெயரிடப் பட்டது. பின் அருணா நதி என்று மருவி வழங்கலாயிற்று.

இவ் வேள்விக்காகக் கலப்பைக் கொண்டு நிலத்தை உழுதார். அப்பொழுது கலப்பையில் ஒரு பெட்டிச் சிக்கியது. அதைத் திறந்து பார்க்கையில் அதில் இருந்த தாமரை மலரில் குழந்தை ஒன்று இருந்தது.

தாமரை மலரிலிருந்து குழந்தை கிடைத்ததால் அக் குழந்தைக்குப் ‹பத்மாவதி என்று பெயரிடப்பட்டது. (பத்மம் என்றால் வடமொழியில் தாமரை என்று பொருள்.)

இக் காரணத்தைக்கொண்டு இத் திருத்தலத்தில் உள்ள திருக்குளத்திற்குத் தாமரைக்குளம் என்று பெயரிடப்பட்டு உள்ளது' (தெலுங்கில் 'பத்ம சரசு' என்பர்.)

இவ்விரண்டு தீர்த்தங்களிலும் பக்தர்கள் நீராடினால், மக்களிடத்திலிருக்கும் பிணிகள் நீங்கும் என்ற நம்பிக்கை உள்ளது. பிள்ளைப்பேறு அடையாத பெண்கள் நீராடினால் பிள்ளைப்பேறு அடைவர் என்ற நம்பிக்கையும் மக்களிடையே நிலவி வருகிறது.

இத் திருக்கோயிலில் ஆண்டுக்கு இரண்டுமுறை (தீர்த்தவாரி) திருநீராட்டு உற்சவம் நடத்தப்படுகின்றது. மற்றும் மார்கழித் திங்களில் பத்து நாட்கள் தாமரைத் திருக்குளத்தில் நடக்கும் திருநீராட்டு உற்சவத்தின்போது ஆண்டாளுக்குத் திருமுழுக்கு நடத்தப்படுகின்றது.

## 1-2-0 நாராயணவனம் பெயர்க்காரணம்

திருக்கோயில்கள் தொடக்கக் காலத்தில் நதிக்கரைகளிலும் இயற்கை சூழ்ந்த இடங்களிலும், சோலைகளிலும் அமைந்து இருந்தமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன. இக் கருத்துக்கு அரணாக பல திருக்கோயில் ஊர்கள் அமைந்திருந்தன. அவை,

"திண்டிவனம், தில்லைவனம், கடம்பவனம், செண்பக வனம், முல்லைவனம், வில்வவனம் என்றும் திருவேலங்காடு, திருவேற்காடு, சாயக்காடு, திருமறைக்காடு"[4] முதலியன.

நாராயணவனமும் துவக்கக் காலத்தில் சோலைகள் அடர்ந்த இடமாக இருந்திருக்கவேண்டும். இன்றும் ஊரைச் சுற்றிலும் மலைகளும், சோலைகளும், மரங்களும் சூழ்ந்து உள்ளன. அதனால் இவ்வூருக்கு வனம் என்று பெயரிடப் பட்டுள்ளது என்பர்.

ஸ்ரீவெங்கடேச மஹாத்மியம் என்ற தெலுங்கு புராண நூல்.

"நாராயணவனம் வனமாக இருந்தமையும், அவ்வனத்தில் பூப்பறித்துக் கொண்டிருந்த பத்மாவதியை நாராயணன் கண்டு காதலித்து மணம் கொள்கின்ற செய்தியினையும் குறிப்பிடுகிறது."[5] இப் புராணச் செய்தியின்மூலம் நாராயணன் இவ்வூருக்கு வந்ததன் பொருட்டு நாராயணவனம் என்று பெயர் வழங்கப்பட்டுவருகிறது என்றும் கூறுவர்.

இதைத் தவிர இத் திருக்கோயில் வரலாறுபற்றி அறிய கல்வெட்டுச் சான்றுகள் எதுவும் கிடைத்தில. எனவே புராண அடிப்படையிலேயே இவ்வூருக்கு இப் பெயர் ஏற்பட்டு இருக்கலாம் என்று தெரிகிறது.

நாராயணவனம் என்ற இவ்வூரின் பெயர் நாளடைவில் நாராயணவரம், நாராயணபுரம் என்று மருவி வழங்கப்பட்டு வருகின்றது.

### 1.2.1 திருக்கோயில்களும் நாராயணவனமும்

நாராயணவனமும் திருக்கோயில்களும் என்ற இப்பகுதியில், நாராயணவனம் அமைவிடமும் இவ்வூரைச் சுற்றியுள்ள திருக்கோயில்கள் அமைந்த இடங்களும் அவற்றின் அமைப்பும் பற்றிக் கூறப்பெறுகிறது.

### 1.2.2 நாராயணவனம் அமைவிடம்

நாராயணவனம் என்றழைக்கப்பெறும் இவ்வூர் பழம் பெருமை வாய்ந்தது. இவ்வூர் மலைகளாலும், வனங்களாலும், பூஞ்சோலைகளாலும் சூழப்பட்டுள்ளது.

இவ்வூருக்குக் கிழக்கில் அருணா ஆறும் தெற்கில் நகரி மலையும், மேற்கில் புத்தூரும், வடக்கில் திருவட்டம் என்ற ஊரும் எல்லைகளாக அமைந்துள்ளன. இவ்வூருக்கு வடகிழக்கில் சிங்கிரி அருவியும் தென்கிழக்கில் கைலாசநாதர் அருவியும் அமைந்துள்ளன. நாராயணவனத்தின் நடுவில் அருள்மிகு கல்யாணவெங்கடேசுவரப் பெருமாள் திருக்கோயில் அமைந்துள்ளது.

நாராயணவனம், திருப்பதி, புத்தூர் வழியாகச் சென்னைக்குச் செல்லும் பேருந்து வழித்தடத்தில் திருப்பதியிலிருந்து நாற்பது கிலோ மீட்டர் தொலைவில் அமைந்து உள்ளது. இவ்வூரிலிருந்து மேற்கில் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் புத்தூரில் தொடர்வண்டி நிலையம் அமைந்து உள்ளது. புத்தூரிலிருந்து இத் திருக்கோயிலுக்குச் செல்ல நகரப் பேருந்து வசதிகள் உள்ளன.

அருணாநதிக்கு மேற்கில் ஒரு கல் தொலைவில் ஆகாச ராசனின் கோட்டை அமைந்துள்ளது.

### 1.2-3 இயற்கையும் இறையும்

நாராயணவனத்தின் நடுவில் சுமார் ஐந்து ஏக்கர் நீலப் பரப்பில் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவரர் திருக்கோயில் அமைந்துள்ளது.

இவ்வூரைச் சுற்றியுள்ள அனைத்து மலைகளிலும் இயற்கை அருவிகள் வீழுகின்றன. இவ்வூருக்குத் தெற்கில் உள்ள மலையில் கைலாசநாத அருவி பாய்கிறது. அங்கு அருள்மிகு கைலாசநாதர் இலிங்க வடிவில் எழுந்தருளியுள்ளார். இவ்வூருக்கு வடகிழக்கில் உள்ள மலையில் சிங்கிரி அருவி பாய்கிறது. இங்கு நரசிம்மர் உபயநாச்சியார்களுடன் நின்ற கோலத்தில் எழுந்தருளிக் காட்சியளிக்கிறார். வடக்கில் சதாசிவ அருவி பாய்கிறது. இங்குச் சதாசிவர் இலிங்க வடிவில் எழுந்தருளியுள்ளார்.

### 1.2.4 மக்கள் குழுவும் பக்திநிலையும்

நாராயணவனத்தில் வசிக்கும் மக்கள் நெடுங்காலமாகப் பக்தி நெறியில் ஈடுபட்டு வந்துள்ளனர் என்பதற்குச் சான்றாக இவ்வூரில் பல கோயில்கள் அமைந்துள்ளன. வைணவர், சைவர், சாத்தேயர் முதலான சமயத்தினர் பலர் தொன்று தொட்டு வாழ்ந்துவருகின்றனர்.

மேலும் இங்குப் பல சமயத்தினர், பல மொழியினர் பல இனத்தவர் வாழ்ந்துவருகின்றனர். தமிழ், தெலுங்கு மொழி பேசும் மக்கள், மக்கள் தொகையில் சமநிலையில் இருக்கின்றனர்.

### 1.2.5 மக்களின் மொழி, கல்வி, தொழில், பொருளாதாரம்

செங்குந்தர், வன்னியர், வாணியர், ஆச்சாரியர், குயவர், அந்தணர், அரிசனர் முதலானோர் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டு வாழ்ந்துவருகின்றனர்.

பட்டு, பத்ம சாலியர்கள், பலிஜநாடு, வைசியர் முதலானோர் தெலுங்கினைத் தாய்மொழியாகக் கொண்டு விளங்குகின்றனர். இவர்களோடு இசுலாமியர், கிருத்துவர் முதலானோரும் வாழ்ந்துவருகின்றனர்.

இவ்வூர் மக்கள் பழங்காலந்தொட்டே கல்வியில் சிறந்தவர்களாக விளங்கியுள்ளனர் என்பது அவர்கள் பல துறைகளில் பணி புரிவதிலிருந்து தெரியவருகிறது. பொறியியல் வல்லுநர்கள், மருத்துவவல்லுநர்கள் விரிவுரையாளர்கள், வழக்குரைஞர்கள், ஆசிரியர்கள் முதலானோர் இவ்வூரில் படித்துப் பிற இடத்தில் பணிபுரிந்து வாழ்ந்துவருகின்றனர். மேலும் பிற துறைகளிலும், வங்கிகளிலும், வணிகவரித்துறையிலும் இவ்வூர் மக்கள் பணிபுரிந்து வருகின்றனர்.

இவ்வூரில் இரண்டு தெலுங்கு மொழிவழித் தொடக்கப் பள்ளிகளும், இரண்டு தமிழ் மொழிவழித் தொடக்கப் பள்ளிகளும் உள்ளன. உயர்நிலைப் பள்ளியில் தெலுங்கு தமிழ் ஆகிய இரு மொழிவழிகளிலும் மாணவர்கள் கல்வி கற்று வருகின்றனர்.

### 1.2.6 அலுவலகங்களும் நிர்வாகமும்

நாராயணவனத்தில் மண்டல வருவாய் அலுவலகமும், மண்டல மக்கள் அமைப்பு அலுவலகமும், காவல் நிலையமும் அமைக்கப்பெற்றுள்ளன. இவற்றுடன் மகளிர் கூட்டுறவுச் சிறப்பு அங்காடி, இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, அரசினர் மருத்துவமனை முதலியனவும் அமைந்துள்ளன. கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கமும், விசைத்தறி கூட்டுறவுச் சங்கமும் இடம் பெற்றுள்ளன.

திரு. ஆர்.டி. கோபால் அவர்கள் ஊராட்சி மன்றத் தலைவராகவும், திரு. சுதர்சன ரெட்டி அவர்கள் மண்டல மக்கள் தலைவராகவும் உள்ளனர்.

### 1.2-7 தொழிலும் பொருளாதாரமும்

செங்குந்தர்களும், சாலியர்களும் கைத்தறி, விசைத்தறி நெய்யும் தொழிலை மேற்கொண்டுள்ளனர்.

விசைத்தறிகள் வாயிலாக வேட்டி, வண்ண காடாத்துணி, வெள்ளைச்சேலை, மற்றும் கட்டம்போட்ட துணிகள் முதலியவற்றைத் தயார் செய்துவருகின்றனர்,

சாலியர் சரிகை வேட்டி, கைத்துணி, கைலி முதலியவற்றை கைத்தறியில் தயாரிக்கின்றனர்.

வன்னியரும், அரிசனரும் வேளாண்மைத் தொழிலைச் செய்துவருகின்றனர்.

வாணியர் கடலை எண்ணெய் வணிகம் செய்கின்றனர். அவர்கள் வசிக்கின்ற தெரு 'வாணியர்' தெரு என்றே அழைக்கப் பட்டு வருகின்றது. இவ்வூர் மக்கள் கைத்தறி, விசைத் தறியினால் தயாராகும் துணிகளை விற்றுப்பொருளாதாரத்தில் முன்னேற்றம் கண்டுள்ளனர். மேலும் வாணியர் கடலை எண்ணெய் வணிகம் செய்து அவர்களும் பொருளாதாரத்தில் முன்னேற்றம் கண்டுவருகின்றனர்.

## 1-3-0 புராணச் செய்திகள்

புராணச் செய்திகள் என்ற தலைப்பில் கூறப்பட்டுள்ள வெங்கடேசுவரருக்கும் பத்மாவதிக்கும் திருமணம் நடைபெற்ற முறை, வெங்கடேசுவர சுவாமி வரலாறு ஆகியவை பற்றிய செய்திகள் பல நூல்களில் உள்ளன. இங்குக் கூறப்பட்டுள்ள வெங்கடேசுவர சுவாமி வரலாற்றுக்குப் பயன்பட்ட நூல்கள் 25 ஆகும். "தமிழ், ஆங்கிலம், தெலுங்கு ஆகிய மொழிகளில் இவ்வெங்கடேசுவர சுவாமி வரலாற்றுச் செய்திகள் கூறப் பட்டுள்ளன. அவை இப் புராணச் செய்திகள் எழுத இங்குப் பயன்பட்டன."[6]

கலியுகத்தில் கொடுமை, கருணையில்லாமை, அநீதி, அநியாயம், அட்டூழியம் ஆகியவற்றின் காரணங்களால் மக்களும், மாக்களும் இன்னலுற்றனர். அத்தருணத்தில் கச்சியப முனிவரின் தலைமையில் பிருகு, அத்திரி, வசிட்டர், அகத்தியர் முதலானோர் ஒரு குழுவாகக் கூடி இவ்வின்னல்களுக்கெல்லாம் ஒரு தீர்வுகாண வேண்டுமென்று ஆலோசித்தனர். அப்பொழுது அவர்கள் நில உலகின் நன்மைக்காக வேள்வி ஒன்றை நடத்த வேண்டுமென்று முடிவெடுத்தனர்.

அச் சமயத்தில் நாரதர் அங்கு வந்தார். அவர் இவ் வேள்வியை யார் நன்மைக்காகச் செய்யவுள்ளீர் என வினவினார்? அதற்கு முனிவர்கள் அனைவரும் விடை கூற முடியாமல் திணறினர். பின் அவர்கள் பிருகு முனிவரை இதற்கு முடிவு காணவேண்டினர்,

பிருகு முனிவர் புறப்பட்டு மும்மூர்த்திகளான சிவன், திருமால், பிரம்மா ஆகியோரையும் தனித்தனியாகச் சந்தித்துச் சோதித்து முடிவு எடுப்பதாகக் கூறிச் சத்திய உலகம் சென்றார்.

அச் சத்திய உலகத்தில் பிரம்மா தன்னை மறந்து நான்கு திருமறைகளையும் ஓதிக்கொண்டிருந்தார். பிருகு முனிவர் வந்ததையும் கவனிக்காமல் திருமறை ஓதிக்கொண்டிருந்ததால் அவருக்குக் கோபம் வந்தது. பிரம்மாவிற்கு எங்கும் கோயில் வழிபாடே இல்லாமல் போகட்டும் எனச் சாபமிட்டுத் திரும்பினார். அதனால் அவருக்குக் கோயில் வழிபாடு இல்லை.

அங்கிருந்து பிருகு முனிவர் கைலாசத்திற்குச் சென்றார். அங்கு சிவனும் பார்வதியும் நடனம் ஆடிக்கொண்டிருந்தனர். பிருகு முனிவரின் வருகையை அவர்களும் கவனிக்கவில்லை. அதனால் பிருகு முனிவருக்குக் கோபம் வர சிவனுக்குக் கோயிலில் உருவ வழிபாடு இருக்காது இலிங்கவடிவ வழிபாடு தான் நடக்கும் எனச் சாபமிட்டார். அப்படியே இலிங்க வழிபாடு நடந்துவருகிறது.

அவ்விடத்திலிருந்து பிருகு முனிவர் வைகுண்டத்திற்குச் சென்றார். அங்குத் திருமால் படுத்தநிலையில் திருமகளிடம் உரையாடிக் கொண்டிருந்தார். இந்நிலையைக் கண்டதும் அவர் கோபமடைந்து திருமாலின் திருமார்பில் உதைத்தார். அச் சமயம் திருமாலின் திருமார்பி' விற்றிருந்த திருமகள் கோபித்துக்கொண்டு நிலவுலகத்தில் உள்ள கொல்லாப்பூருக்கு வந்து தவத்தில் அமர்ந்துவிட்டார்.

திருமால் பிருகு முனிவரிடம் கோபப்படாமல் அமைதியாக அவருக்குப் பாத பூசை செய்தார். அப்படிச் செய்யும் சமயத்தில் அவரின் (பாதத்தில்) திருவடியில் இருக்கும் கண்ணைத் தன் கையால் நசுக்கிவிட்டார். பின் முனிவரின் ஆணவம் அடங்கித் திருமாலின்மீது பக்தி ஏற்பட்டது என்று புராணம் கூறுகிறது.

மும்மூர்த்திகளுள் உயர்ந்தவர் திருமால் என முனிவர் களுக்கெல்லாம் தெரியப்படுத்தினார். ஆகையால் அவர்கள் வேள்விச் சக்தியைத் திருமாலுக்கு அர்ப்பணிக்க முடிவு செய்தனர்.

ஸ்வேதவராக கல்பம் அதாவது வெள்ளைப்பன்றியின் யுகங்கள் தோன்றும்போது உலகம் நீரில் மூழ்கியிருந்தது.

அச் சமயத்தில் திருமால் இரண்ணியட்சகன் என்னும் அரக்கனைக் கொன்று நில உலகத்தைக் காப்பாற்றினார். ஆகையால் அவ்விடம் வராகத் திருத்தலமாகவும், அக்காலம் முழுவதும் வராகக் கல்பமாகவும் திகழ்கிறது.

திருமகள் தம்மை விட்டுப் பிரிந்த வேதனையில் திருமால் தம் சுய நினைவை இழந்து வைகுண்டத்தை விட்டுத் திருவேங்கடமலையில் உள்ள குளக்கரையின் அருகில் உள்ள புளிய மரத்தடியின்கீழ் வசிக்கத் தொடங்கினார்.

நாள்தோறும் பிரம்மாவும், சிவனும் திருமாலுக்குப் பசு உருவில் வந்து பால் கொடுத்துவந்தனர்.

திருமால் வராகத் திருத்தலத்தில் தங்க எண்ணி வராக சுவாமியிடம் சென்று தங்கச் சிறிய இடம் தருமாறு கேட்டுக் கொண்டார்.

வராக சுவாமியும் திருமாலின் வேண்டுதலுக்கேற்பச் சிறிய இடத்தைக் கொடுத்தார். அதற்குக் கைமாறாகத் திருமால் தம் புண்ணிய தலத்திற்கு வரும் பக்தர்கள் திருக்குளத்தில் நீராடி வராகப் பெருமாளை முதலில் வணங்கினால்தான் அவர்களுக்குப் பலன் (நன்மை) கிடைக்கும் என்று கூறினார்.

யசோதை தேவகியின் மகனான கண்ணனைச் சிறிய வயதிலிருந்து வளர்த்துவந்தார். கண்ணன் உருக்குமணியை மணம் செய்துகொள்ளும் வைபவத்தை யசோதை பார்க்கவில்லை. ஆதலால் அவள் வருத்தமடைந்தாள். அதற்குக் கண்ணன் யசோதையிடம் "நீ மறு பிறவியில் வகுளாதேவியாகப் பிறப்பாய். நான் உன் வளர்ப்பு மகனாக அமைவேன். பத்மாவதியுடன் என் திருமண வைபவம் நடக்கும்; அதைக்கண்டு உன் ஆவல் நிறைவேறும்" என்று கூறினான்.

தொண்டை நாட்டில் உள்ள நாராயணவனத்தைச் சுதர்ம மன்னன் ஆண்டுவந்தான். அவருக்கு ஆகாச ராசன், தொண்டைமான் என்ற இரண்டு மக்கள் பிறந்தனர். இவ்விருவரும் வளர்ந்தபின் நாராயணவனத்தை ஆகாசராசனுக்கும் தொண்டை நாட்டைத் தொண்டைமானுக்கும் கொடுத்து ஆளச்செய்தான்.

ஆகாசராசா நீண்ட நாட்களாகப் பிள்ளைகள் இல்லாமல் இருந்தார். அதற்காக வேள்வி ஒன்றைச் செய்தார். வேள்விக்

காகத் தானே நிலத்தைக் கலப்பையால் உழுகின்றபோது அதில் பெட்டி ஒன்று சிக்கியது. அப்பெட்டியில் தாமரை மலரின் இடையில் தெய்வக் குழந்தை ஒன்று இருப்பதைக் கண்டார். அக் குழந்தையை அரசர் அரண்மனைக்குக் கொண்டுவந்து சீரோடும் சிறப்போடும் வளர்த்துவந்தார். தாமரை மலரில் (பத்மம்) கிடைத்ததால் அக்குழந்தைக்குப் பத்மாவதி என்று பெயரிட்டு அழைக்கலாயினர்.

பத்மாவதி நாளொருமேனியும் பொழுதொருவண்ணமும் ஆக வளர்ந்துவந்தாள். ஒருநாள் தோட்டத்தில் தன் தோழி களுடன் மலர்களைக் கொய்துகொண்டிருக்கையில் திருமலை யிலிருந்து திருமால் தன் ஆசிரமத்திற்கு இடையூறாக இருந்த காட்டு யானை ஒன்றைத் துரத்தியபடி கத்தியுடன் குதிரைமீது சவாரி செய்துவந்தார். அவ்யானை தென்கிழக்குத் திசையில் உள்ள நாராயணவனத்தில் அமைந்திருக்கும் பூஞ்சோலையில் வந்து மறைந்துவிட்டது.

திருமால் யானையைத் தேடிக்கொண்டிருக்கும்போது பூஞ்சோலையில் பூப்பறித்துக் கொண்டிருந்த பத்மாவதியைக் கண்டார். பத்மாவதித் தெய்வத் தன்மை பொருந்தியவ ளாகவும், அழகுடையவளாகவும் இருப்பதைக் கண்டு அவளிடம் தன் உள்ளத்தைப் பறிகொடுத்தார்.

பத்மாவதியும் அதே சமயத்தில் திருமாலைக் கண்டவுடன் அவரின் அழகையும் வீரத்தையும் பார்த்துத் தன் மனதை அவரிடம் பறிகொடுத்தாள். இருவருடைய மனமும் ஒரு மனதாயிற்று. இருவரும் ஒருயிரீருடல் என்ற நிலையினை அடைந்தனர்.

பின் திருமால் திருமலைக்குச் சென்றுவிட்டார். சிலநாள் கழித்துத் திருமால் குறி சொல்லும் பெண்மணி வேடமிட்டு ஆகாசராசர் அரண்மனைக்கு வருகைதந்து பத்மாவதிக்குக் குறி சொன்னார். அப்போது பத்மாவதியைத் திருமணம் செய்து கொள்பவன் தெய்வநிலைபெற்ற வீரன், ஆணழகன் என்றும் அவன் திருமாலே ஆவான் என்றும் சொல்லித் திரும்பினார்.

பத்மாவதித் தன் இல்லத்தில் பிரிவால் மிகவும் வேதனை அடைந்து மனநோயுற்று அவதிப்பட்டுவந்தார். அதே சமயத் தில் திருமலையில் திருமாலும் காதலால் கலக்கத்துடனும், மன

வேதனையுடனும் இருந்தார். இதனை உணர்ந்து திருமாலின் வளர்ப்புத் தாய் வகுளாதேவி தன் மகனிடம் செய்தியினைக் கேட்டுத் தெரிந்துகொள்கிறாள்.

வகுளாதேவி நாராயணவனம் சென்று அரசகுடும்பத்தினரைச் சந்தித்துப் பத்மாவதியைத் தன் மகனுக்குத் திருமணம்செய்து தரும்படிக் கேட்கிறாள். அவர்களும் அதற்கு ஒப்புதல் அளித்தனர். இருவீட்டாரும் திருமண ஏற்பாடுகளை நடத்திவந்தனர்.

திருமால் தன் திருமணச் செலவிற்காகக் குபேரனிடம் பணத்தைக் கடனாகப் பெற்றுக்கொள்கிறார்.

வைகாசித் திங்கள், வளர்பிறை, தசமி நல்லோரையில் பத்தாம் நாள் வெள்ளிக்கிழமையன்று திருமறைகள் ஓத ஆகாச மகாராசரின் அரண்மனையில் முக்கோடி தேவர்கள், சிவன், கலைமகள், பார்வதி, சுகமகரிஷி, நாரதர், சூரியன், கருடன், அநுமன் முதலானோரின் முன்னிலையில் பிரம்மா, வெங்கடேசுவரருக்கும் பத்மாவதிக்கும் திருமணம் செய்துவைத்தார் என்று புராணச் செய்தி கூறுகிறது.[7]

அச்சமயத்தில் வெங்கடேசுவரர் தம் மாமன் ஆகாச மகாராசாவை நோக்கி 'நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன்; இத்தருணத்தில் தங்களுக்கு என்ன வரம் வேண்டும்' என்று கேட்கிறார். அதற்கு அவர் திருமலையில் தாங்கள் இருப்பதைப் போன்று இத் திருத்தலத்திலும் தங்களின் பெயரில் ஒரு கோயில் அமைக்க உள்ளோம். தாங்கள் தங்கள் உருவத்தை இங்கு நிறுத்தி இப் பகுதியிலுள்ள பக்தர்களுக்குக் கலியுகம் முழுதும் காட்சி தந்து அருள்புரியுமாறு வேண்டுகிறேன்'' என்று வேண்டினார்.

பெருமாளும் அவரின் வேண்டுகோளை ஏற்று, அன்றிலிருந்து இத் திருத்தலத்தில் அருள்மிகு பத்மாவதிச் சமேத கல்யாண வெங்கடேசுவரராகத் திகழ்ந்து பக்தர்களுக்கு அருள்புரிந்துவருகிறார்.

## 1-3-1 பத்மாவதி தாயாரின் சிறப்புகள்

நில உலகில் அனைத்து உயிர்களும் நலமாக வாழ்வதற்கு மக்கள் காக்கும் கடவுளான திருமாலின் அருளைப் பெற வேண்டும் என்று கருதினர்.

இக்காத்தல் தொழிலைத் திருமால் திருமகள் துணையுடன் செய்கிறார். திருமகள் எல்லா நிலைகளுக்கும் எட்டு வகை நலன்களுக்கும், பயிர் செழிப்பிற்கும், உடல் நலனுக்கும், செல்வத்திற்கும், குடும்ப நல்வாழ்விற்கும், பெண்களின் மங்களநாண் பலத்திற்கும் வழிமுறை வளர்ச்சிக்கும், நாயகியாகத் திகழ்கிறாள்.

ஆகையால் மூவுலகில் உள்ள அனைவரும் நல்வாழ்விற்குத் திருமகளை வணங்குகிறார்கள்.

இக் கலியுகத்தின் அவதார நிலையிலுள்ள வெங்கடேசுவரப் பெருமாளின் நாயகியான பத்மாவதித் தாயார் மேற்கூறிய அனைத்து நிலைகளுக்கும், அதிபதியாகத் திகழ்கிறாள். அதனால் இப்படிக் கலியுகத்தின் தெய்வமான அருள்மிகு பத்மாவதிச் சமேத கல்யாண வெங்கடேசுவரரை வணங்கி வழிபடுவது பெரும் பேறுபெற்ற நிலையினை அடைந்ததாகும். அவளை வழிபடுவது மேலும் சிறந்ததாகும்.

இத் திருத்தலத்தில் உள்ள பத்மாவதித் தாயாரை "வரப்பிரசாதி" என்றே அழைக்கின்றனர். தாயாரை வணங்கி வேண்டிக்கொண்டால் மணமாகாத கன்னிப் பெண்களுக்கு மணமாகும் என்றும், மணம் ஆகிப் பிள்ளைப்பேறு அடையாத தம்பதிகள் பிள்ளைப்பேறு அடைவர் என்றும் இவையல்லாமல் வேறு எந்த வேண்டுதலை வேண்டிக்கொண்டாலும் அது நிறைவேறும் என்றும் மக்கள் நம்பிவருகின்றனர்.

மேற்கூறிய குறைகள் உள்ள மக்கள் கோயிலில் நடைபெறும் திருமண உற்சவத்தின்போது வழங்கப்படும் மஞ்சளரிசியையும், மலர்களையும் பெற்று வேண்டிக்கொண்டால் அவர்களின் குறைகள் விரைவில் நீங்கி, வேண்டுதல் நிறைவேறும் என்று அனுபவத்தால் அவர்கள் உணர்ந்துள்ளனர்.

வருடத்தில் ஒருமுறை வரும் பங்குனி உத்திரம் உற்சவத்தன்று நடைபெறும் திருக்கல்யாணத்திற்கும், அன்றிரவு பெருமாளுக்கும் தாயாருக்கும் நடைபெறும் பள்ளியறை சேவைக்கும் பக்தர்கள் வந்து தம் குறைகளை அவரிடம் வேண்டிக்கொண்டால் விரைவில் அக் குறைகள் நீங்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவிவருகின்றது.

## 1-3-2 கோயில் பற்றிய செய்திகள்

நாராயணவனத்தில் அமைந்திருக்கும் அருள்மிகு பத்மாவதிச் சமேத கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் சிறப்பு மிக்க ஒன்றாகும். திருமலையில் வீற்றிருக்கும் வெங்கடேசப் பெருமாள் கோயிலுக்கும், இக்கோயிலுக்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. "இரண்டு திருக்கோயில்களும் வராக சுவாமியின் எல்லைக்குட்பட்டதாகும்."[8]

காலை பூசை முதல் இரவு பள்ளியறை சேவை வரை நடைபெறும் எல்லா வழிபாடுகளும், சடங்குகளும் இரண்டு கோயில்களிலும் ஒன்று போன்றே அமைந்துள்ளன இரண்டு இடங்களிலும் தொன்றுதொட்டு வைகானச வைணவ ஆகமத்தின்படி வழிபாடுகள், திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன.

இந்நாராயணவனத் திருக்கோயில் முதன்முதலில் ஆகாச மகாராசா பரம்பரையில் வந்த கார்வேட்டி நகர மன்னர்களின் மேற்பார்வையில் நிர்வாகம் நடந்துவந்தது. இக் கோயிலில் தாயாருக்கும் பெருமாளுக்கும் அன்று நடந்த திருமணச் சடங்குகளைப் போன்றே இன்றும் பெருமாளுக்கு மஞ்சள் பட்டாடை உடுத்துவதும், கையில் கங்கணம் கட்டுதலும், தசாவதார வட்டியாணம் அமைத்தலும், சாலிக்கிராம மாலையை அலங்கரித்தலும் நடைபெற்று வருகின்றன. அவ்வண்ணமே தாயாருக்கும், தாமரை வண்ணப் பட்டாடைகள், அணிகலன்கள் அணிவிக்கப்பெறுகின்றன.

இத் திருக்கோயிலில் அன்று இறைவனுக்குத் திருமணம் நடந்த முறையிலேயே இன்றும், பெருமாள் உற்சவருடனும் உபயநாச்சியார்களுடனும் பத்மாவதித் தாயாரையும் எழுந்தருளச் செய்து அனைத்துச் சடங்குகளுடன், திருக்கல்யாணம் செய்துவைக்கப்பெறுகின்றது.

இத் திருத்தலத்தில் பெருந்திருவிழாவின்போது நடக்கும் தேர்த்திருவிழாவன்று மாலை குதிரை வாகன உற்சவம் நடத்தப்படுகின்றது. பின் கோயிலினுள்ள தாயார் சிற்றாலயத்தின்முன் இருக்கும் மாவு அரைக்கும் இயந்திரத்திற்கும் ஆகம முறைப்படி பூசை செய்து பின் பெருமாளுக்கும், பத்மாவதித் தாயாருக்கும் திருக்கல்யாணம் செய்கின்றனர்.

இக்கோயிலில் வடகலை வைணவ முறைப்படி வழிபாடு, திருவிழா நடைபெற்றுவருகின்றது. "பெருமாளின் திருமணத்திற்கு அனைத்து கடவுள்களும் வந்ததாகக் கூறப்படுகிறது".[9] அதன் பொருட்டு அவர்களின் உருவச் சிலைகளை இப்பொழுதும் இக் கோயில் வழிபாட்டில் காணலாம்.

திருவிழாக் காலங்களில் இத் திருக்கோயிலில், வேறெந்த வைணவத் திருத்தலங்களில் காண இயலாத முறையில் திருவிழா, வழிபாட்டு நெறிமுறைகளைக் கடைப்பிடித்து வருகின்றனர். அதாவது கோயிலுக்குள்ளேயே (வாகன) ஊர்தி மண்டபம் அமைந்திருப்பதால் அங்கு அலங்கரிக்கப்பட்ட ஊர்தியில் உற்சவர் ஊர்வலம் வந்து இராச கோபுரத்திற்கு சென்று வருவர். அங்கு முதன்முதலில் இராச ஆரத்தி பெற்றுக்கொண்டு பெருமானின் பக்தியைப் பெற்றவரான வேதாந்த தேசிகர் சிற்றாலயத்தின் முன் உற்சவரைக் கொண்டு வருவர். பெருமாளிடமிருந்து தேசிகருக்குச் சடாரி, மாலை, மரியாதை கொடுக்கப்படும். பின் மாடவீதி வழியாக உற்சவம் உலா தொடங்கும். மாடவீதி உலா ஆரம்பமானதும் பக்தர்களின் ஆரத்தித் தட்டுக்களை வாங்கிப் பெருமாளுக்குக் காட்டுவர்.

இத் திருவிழாக்களில் இராசகோபுரத்தில் ஆரத்தி ஆனவுடன் நாலாயிரத் திவ்வியப் பிரபந்த பாராயணமும், திருமறை ஓதுதலும் நடைபெறும். உற்சவரைக் கோயிலுக்குக் கொண்டுவந்ததும் மேற்கூறிய இரண்டு வழிபாடுகளையும் முடித்துவைப்பர். இவ்விதமான வழிபாட்டு நெறிமுறைகள் உள்ள வைணவத் திருக்கோயில் இஃது ஒன்றே என்று ஸ்ரீதர பட்டாச்சாரியார் உறுதியாகக் கூறுகிறார்.

இத் திருக்கோயிலில் உள்ள பெருமாளிடமும் தாயாரிடமும் மக்கள் வேறுபாடின்றி வந்து வழிபடுகின்றனர். வேண்டுதல்களை வேண்டிக்கொண்டு அவை நிறைவேறியப்பின் தம் வேண்டுதலைச் செலுத்த, பக்தர்கள் கோயிலுக்கு வருகை தருகின்றனர்.

மேற்கூறிய கருத்துக்களை நோக்கும்போது, கோயிலின் சிறப்புத் தெரியவருகிறது.

### 1-4.0 நம்பிக்கை

மக்கள் பொதுவாக இறைவன்மீது நம்பிக்கை வைத்து உள்ளனர். அது நாளடைவில் சமூக நம்பிக்கை, சமய நம்பிக்கை என மாற்றம் பெற்றது.

''மக்களின் வாழ்வில் சோர்வினைப் போக்கி இன்பத்தை யும் மகிழ்ச்சியையும் ஊட்டுவன விழாக்களே. மனித இனத்தை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்கவைப்பதே விழாக்களின் செயற்பாடாகும். அவை சடங்குகளின் அடிப்படையில் தோன்றிச் சமுதாய நம்பிக்கையின் காரணமாகச் செல்வாக்குப் பெற்று வளர்ந்தும், வாழ்ந்தும் மறுமலர்ச்சியடைந்தும் மக்களி டையே தொன்றுதொட்டு நிலவிவருகின்றன''.[10]

சமூகத்தில் பண்பாட்டு மரபினை அறிவிக்கவல்லன அச் சமுதாயத்தின் நம்பிக்கைகள். நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் புரக்கணிக்கப்படுவன. அவைசமூகத் தேவைகள் மற்றும் குறிக்கோளின் அடிப்படையில் தோன்றியன.

''மனித மனத்தின் விழைவால் நம்பிக்கை தோன்று கிறது".[11]

தீமைகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முயலும் தற்காப்பு முயற்சியும் நன்மை விளைய வேண்டுமென்ற விருப்பமும் நம்பிக்கைகளை நிலைநிறுத்துகின்றன.

''சிந்தனைத் திறன்மிக்க சமுதாயத்தில் நம்பிக்கைகள் குறைவாகவும், சிந்தனைத்திறன் குறைந்த சமுதாயத்தில் மூடநம்பிக்கைகள் மிகுதியாகவும் காணப்படும். இதனை நமது நகர் கிராமப்புற மக்களின் வாழ்வியல் கொண்டு உணரலாம்''.[12]

மனிதனில் பிறப்பு முதல் இறப்பு வரை பலவித நம்பிக்கைகளை மக்கள் கைகொண்டிருக்கக் காண்கிறோம்.

''ஒரு வளர்ச்சியடைந்த மனிதனிடம் பத்தாயிரக் கணக்கான நம்பிக்கைகளும், நூற்றுக்கணக்கான வழக்கங்களும் எண்ணிக்கைக்குட்பட்ட குறிக்கோள்களும் இருப்பதாகச் சமூக அறிவியல் கலைக்களஞ்சியம் சுட்டும்.[13]

மேற்கூறிய கருத்துகளை நோக்கும்போது நம்பிக்கை, மக்களிடையே மனத்தின் விழைவால் ஏற்படுகிறது என்பது

விளங்குகிறது. சிந்திக்காத நிலையில் நம்பிக்கைகள் அதிகமாகத் தென்படுகின்றன. அவை இறை, சமய, சமுதாய நம்பிக்கை களாகக் காட்சியளிக்கின்றன.

### 1-4-1 சொல்லும் பொருளும்

நம்பிக்கையினைச் சுட்டும் ஆங்கிலச் சொல் பிலீப் (Belief) இடைக்காலத்தில் பயிற்சி பெற்றதனை ஆங்கில அகராதிகள் தெரிவிக்கின்றன.

தொல்காப்பியத்தில் 'நம்பு'[14] என்ற சொல் விருப்பம் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது. இங்கு உரிச்சொல், அடியாகப் பிறந்த எச்சமாகக் காட்டப்படுகின்றது.

நற்றிணையில் 'நம்பு'[15] என்ற வினைச்சொல் நம்பிக்கை என்ற பொருளில் ஆளப்பட்டிருக்கக் காண்கிறோம். மற்றொரு பாடலில் 'நம்புதல்'[16] என்ற சொல்லாட்சியும் பயின்று வந்துள்ளது.

மேற்கூறியவற்றை அறியும்போது நம்பு, நம்புதல், விருப்பம் என்ற சொற்றொடர்களிலிருந்து நம்பிக்கை தோன்றியதாகக் கருதப்படுகிறது.

### 1-4-2 சமயமும் நம்பிக்கையும்

மக்கள் யாவரும் ஏதேனும் ஒரு சமயத்தின்மீது நம்பிக்கை வைத்திருப்பர். அச் சமயத்தின்மீது பற்றும் தொண்டுள்ளமும் ஏற்பட்டு அச் சமய வளர்ச்சிக்குப் பாடுபடுவர். பின்பு அது சமூக நம்பிக்கையாயும், இறை நம்பிக்கையாயும் மாற்றம்கண்டு மக்கள்மீது தாக்கம் கொள்ளும்.

### 1-4-3-0 சமூக நம்பிக்கை

மக்கள் சமூகத்தில் அங்கம் வகித்து வாழ்ந்துவருகின்றனர். சமூகத்தில் ஏற்படும் மாற்றங்களுக்கேற்ப நம்பிக்கையும் மாற்றம் கண்டுவருகிறது. முன்னோர்கள் கடைப்பிடித்து வரும் நம்பிக்கைகளை அவர்களின் பின் வருபவர்கள் அதனைப் பின்பற்றி வருவது முறையாக அமைகிறது.

வாரத்தில் புதன், வெள்ளி ஆகிய இரண்டு நாட்களை மிகச் சிறந்த நாட்களாகக் கருதுதல் இந்து மக்களின் மரபாகும். செவ்வாய், சனி ஆகிய நாட்களில் இந்துக்கள் பெரும்பாலும்

மங்களகரமானச் செயல்களைச் செய்வதில்லை. ஏழு நாட்களுள் புதன்கிழமைக்கு மட்டும் பெருமதிப்பு உண்டு. "பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது" என்பது பழமொழி.

திருமணம், போர்த்தொடக்கம், முடி புனைதல், பெயர் சூட்டுதல் முதலான நிகழ்ச்சிகளுக்கு நல்ல நாள் பார்க்க வேண்டும் என்ற நம்பிக்கை பண்டைக்காலம் தொட்டே இருந்துவருகிறது. தலைவன், தலைவி இருவரும் கூடி இன்பம் அனுபவிப்பதற்குக்கூட நல்ல நாள் பார்க்கப்பட்டுவருகிறது.

இப்படி மக்கள் யாவற்றிலும் நம்பிக்கைவைத்து சமூகத்தில் வாழ்ந்துவருவதைக் கண்கூடாகக் காணமுடிகிறது.

### 1-4-3-1 நம்பிக்கையும் மக்களின் மனநிலையும்

மக்கள், கடவுள் நம்பிக்கையில் மனம் ஒன்றுபடப் பலவழிகளில் இறைவனை வழிபடுகிறார்கள். பலதரப்பட்ட மக்கள் கடவுள்மீது பலவிதமான சிந்தனைகளை வைத்துள்ளனர். பலர் கடவுள் நம்பிக்கையின்மையினைப் பெற்றிருக்கிறார்கள். தம் பெற்றோர்கள், முன்னோர்கள், பெரியோர்கள் அனுபவத்தால் கூறுகின்ற கடவுள் நம்பிக்கையின் கருத்துக்களை நம்புவது இல்லை; கேட்பதில்லை. ஆனால் தமக்கோ, தம் இல்லத்தார்க்கோ உறவினர்க்கோ இன்னல்கள் வரும்போது மட்டும் இறைவனை உணர்கின்றார்கள். பின்பு கடவுள்மீது பல்வேறு வேண்டுதல்களை வேண்டிக் கொள்கின்றனர். இன்னல்கள் அகன்றதும் வேண்டுதல்களை நிறைவேற்றிவருகின்றனர். இவ்வகையான மக்கள்தான் பெரும்பாலானோர் உள்ளனர்.

சிலர் கடவுள்மீது நம்பிக்கையே இல்லாமல் வாழ்ந்து வரும்போது திடீரென்று நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் இருக்கும்போது இறைவழிபாட்டில் ஈடுபடத் தொடங்கிக் குணம் அடைகின்றனர். அன்றிலிருந்து அவருக்குக் கடவுள் மீது நம்பிக்கை ஏற்படுகிறது. அவரைப் பார்த்து மற்றவர்களும் கடவுள்மீது நம்பிக்கை வைக்கின்றனர்.

இன்னும் சிலர் நோய்வாய்ப்பட்டிருக்கும்போது கடவுளின் மீது பாடப்பெற்றுள்ள கந்தசஷ்டி கவசம், திருமால் போற்றி, ஆதித்ய இருதயம் முதலியவற்றினைப் பாராயணம் செய்து தம் இன்னல்களை போக்கிக்கொள்கின்றனர்.

சாதகமுறைப்படி (கிரகங்கள்) கோள்களின் நிலை சரி யில்லாவிட்டால் அதற்குப் பரிகாரமாக நவகோள்களையும், மற்ற தெய்வங்களையும் வலம்வந்து பூசை செய்தவன்மூலம் தம் கோள் இன்னல் தீர்ந்துவிடும் என்று பலர் எண்ணு கின்றனர்.

மேலும் சிலர் தம் சாதகப்படி நாகதோசம் உள்ளதென்று கருதி நாக உருவச் சிலைக்கும், நாகப்புற்றுக்கும் பால் ஊற்றி ஆரத்தி காட்டி வலம்வருகின்றனர்.

### 1-4-3-2 நம்பிக்கையும் மக்களும்

இத் திருத்தலத்திலும் மக்கள் இறைவன்மீது நம்பிக்கை வைத்து வாழ்ந்துவருகின்றனர். மக்கள் தம் அன்றாட வாழ்க்கையில் இன்ப துன்பங்களைப் போக்கிக்கொள்ள கடவுள்மீது நம்பிக்கை வைத்துப் பல வேண்டுதல்களைச் செய்கின்றனர். அவர்களின் வேண்டுதல்கள் நிறைவேறினால் அவ் வேண்டுதலுக்கேற்ப பல வழிகளில் அவற்றைக் கோயிலில் செலுத்துகின்றனர்.

இத் திருத்தலத்தில் உள்ள அருள்மிகு பத்மாவதித் தாயாரைக் கன்னிப்பெண்கள் வலம் வந்தால் மணம் நிகழும் என்ற நம்பிக்கை மக்களிடத்தில் உள்ளது.

இத் திருத்தலத்தின் திருத்தலத் திருமரமான செண்பவழ மல்லி மரத்தை வலம்வந்தால் பிள்ளைப்பேறு அடையாதவர் பிள்ளைப்பேறு அடைவர் என்ற நம்பிக்கை மக்களிடையே நெடுங்காலமாக இருந்துவருகிறது.

மனநிலை சரியில்லாதவர்களும் தீராத நோயுள்ளவர்களும் பெருமாளை வணங்கிப் புனிதநீர், சடாரி ஆகியவற்றைப் பெற்றுக்கொண்டால் அந்நோய் குணமாகும் என்ற நம்பிக்கை யும் உள்ளது.

பெருமாளுக்கும் பத்மாவதித் தாயாருக்கும் திருமணம் நடைபெறுகின்றபோது பயன்படுத்திய மஞ்சளரிசி, மலர்கள் ஆகியவற்றைக் கன்னிப் பெண்கள் தலையில் வைத்துக் கொண்டால் விரைவில் திருமணம் நடைபெறும் என்ற நம்பிக்கை மக்களிடத்தே நிலவிவருகின்றது.

இக் கோயிலில் உள்ள திருத்தேரின் வடம்பிடித்துத் தேரை இழுத்தால் உளநோயும் பிணிகளும் நீங்கும் என்றும் கருது கின்றனர். உடலில் தோன்றும் மருக்களைப் போக்கிக்கொள்ள தேர், வீதியின் முனையில் திரும்பும்போது அத் தேர் மீது மிளகையும் உப்பையும் வீசுவர். அப்படிச் செய்தால் அம் மருக்கள் மறைந்துவிடும் என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவி வருகிறது.

இத் திருக்கோயிலின் தீர்த்தமான தாமரைத் திருக்குளத் தில் நீராடி அதைப் பருகினால் உடலிலுள்ள நோய்கள் நீங்கும் என்றும் நம்பிவருகின்றனர்.

இக் கோயிலில் சிறப்பாக வெள்ளிக்கிழமைகளில் பெண்கள் மங்கள நாண்களைக் கொண்டுவந்து தாயாரிடம் வைத்துப் பூசைசெய்து ஆசிபெற்றுப் பின் கோயிலுக்கு வரும் சுமங்கலிப் பெண்களிடம் மங்கள நாண்களைக் கொடுத்து அவர்களிடமும் ஆசிபெற்றுக்கொண்டால்·விரைவில் திருமணம் நடைபெறும் என்று நம்புகின்றனர்.

### 1.4.4-0 இறை நம்பிக்கை

இயற்கையின் அச்சந்தரும் செயல்களே மனிதனைக் கடவுள் நெறிக்கு இட்டுச்சென்றன என்பது மாலிடவியலாரின் கருத்தாகும், மனிதன் தன் ஆற்றல் ஒரு வரம்பிற்குட்பட்டது என்பதை உணர ஆரம்பித்த நிலையில் கடவுள் கோட்பாடு உருவாகியது. தன் அறிவுக்கும், ஆற்றலுக்கும் முறையே புலப் படாத-உட்படாதவற்றின் மீது அச்சத்தின் காரணமாக மனிதன் நம்பிக்கை கொள்ளத் தொடங்கினான். அந் நம்பிக்கையின் அடிப்படையில் அவனிடம் கடவுள் நம்பிக்கை தோன்றியதெனலாம்.

இந்துசமயத்தின்மீது மக்களுக்கு நம்பிக்கைதான் அடித்தள மாகத் திகழ்கின்றது. அந் நம்பிக்கையை அவர்கள் தம் வாழ்க்கையில் கடைபிடித்துவந்தால்அனுபவபூர்வமான சமய உண்மைகளை அறிவார்கள். இந்து மதத்தின் கடவுள் பரம்பொருளே ஆனாலும் மக்களிடத்துப் பக்தியை வளர்க்கக் கடவுளின் சிந்தனையை நிலைநாட்டக் கடவுள் பல்வேறு உருவங்களில் தோன்றினார் என்பர்,

புராணங்களும், இதிகாசங்களும், திருமறைகளும் இக் கருத்தினை உறுதிப்படுத்துகின்றன. ஆகையால் பலவகையான மக்கள்பல்வேறு நிலைகளில் திகழும் கடவுள் உருவங்களைத் தம் விருப்பத்திற்கேற்ப அமைத்துக்கொண்டு கடவுள் சிந்தனையை வளர்த்துக் கொள்கிறார்கள். அதன் பயனையும் பெறுகிறார்கள்.

பலவகையான கடவுள் உருவங்களையும் அவற்றைச் சார்ந்த வழிபாட்டு நெறிமுறைகளையும் பின்பற்றுவதன் மூலமாகவும், அனுபவத்தின் காரணமாகவும் மனிதன் கடவுள் மீது வைத்த நம்பிக்கை, வீணாகவில்லை என்று நம்புகின்றான்.

இந்து மதத்தில் பல பிரிவினர் பல கடவுள்களை வணங்கி வருகின்றனர்.

சைவ சமயத்தினர் சிவன், பார்வதி, முருகன், விநாயகர் முதலான கடவுள்களையும், வைணவ சமயத்தினர் திருமால், திருமகள், அனுமன், (ஆஞ்சநேயர்) ஆண்டாள், சக்கரத் தாழ்வார் முதலான கடவுள்களையும் வணங்கி வழிபட்டு வருகின்றனர். இக் கடவுள்களை மட்டுமின்றி இந்து சமய மக்கள் சக்தி தெய்வங்களான காளியம்மன், மாரியம்மன், திரௌபதியம்மன் முதலான பெண் தெய்வங்களையும் அந்தந்தக் கடவுள்களின் வழிபாட்டிற்கு உகந்த முறையில் வழிபட்டுவருகின்றார்கள்.

கடவுள் உண்டு என்பதும் அவர் சர்வ வல்லமை உடையவர் என்பதும் உயர்வு, தாழ்வு அவர் அளிப்பனவே என்பதும் இந்து சமய நம்பிக்கை. எனவே அவனின்றி ஓரணுவும் அசையாது என்று மக்கள் நம்புகின்றனர், நம்பிவருகின்றனர்.

"எத்தகைய இடர்ப்பாடு வந்தாலும் மக்கள் மனிதர்களை விடக் கடவுளையே இறுதியாகவும், உறுதியாகவும் நம்பு கின்றனர். நீயே கதி என்று இறைவன் சன்னிதி முன் நின்று வேண்டுகின்றனர்.[1]

மக்கள் தம் இன்னல்களைப் போக்கிக்கொண்டு நல்வாழ்வு பெற கடவுள் சிந்தனையில் ஈடுபடுகின்றனர். அந் நம்பிக்கை களின்மூலம் பலவிதமான வழிபாடுகளைச் செய்துவருகின்றனர். மக்கள் அவ்வழிபாடுகளின்மூலம் பல்வேறு பயன்களை அடைகின்றனர். மக்கள் உருவ வழிபாட்டையும் இயற்கை வழிபாட்டையும் மேற்கொள்கின்றனர்.

இயற்கை வழிபாட்டில் காற்றையும் நீரையும் வழிபட்டால் நாட்டில் மழை பெய்து பயிர், கால்நடைகள் ஆகியவை செழிக்கும் என்ற நம்பிக்கை இருந்துவருகிறது.

வேள்வித்தீயை வழிபடுவதால் நாட்டில் நற்பலன், ஆரோக்கியம் ஏற்படும் என்ற நம்பிக்கை உள்ளது

கடலினை வழிபடுவதால் கடல் கொந்தளிப்பு ஏற்படாமல் இருக்கும் என்று நம்புகின்றனர்.

நிலமகளை வழிபடுவதால் நிலநடுக்கம் ஏற்படாது என்று நம்பி வருகின்றனர்.

தெய்வ உருவங்களை வழிபடுவதால் மனிதன் நேரடியாகக் கடவுளிடம் தனது மனச் சுமையை இறக்கிக்கொள்ள முடியும் என்று நம்புவதாகத் தெரிகிறது.

வழிபாட்டுக்கு நம்பிக்கை மிகவும் அவசியமான ஒன்று... அறிவியல் உலகிற்கு எவ்வளவு அவசியமோ அவ்வளவு நம்பிக்கை சமயத்துக்கும் அவசியம். வழிபாடு என்பது சமய வாழ்வை அடிப்படையாகக் கொண்டது.

"Faith is God'' என்பது ஆங்கிலப் பழமொழி. நம்பிக்கையே கடவுள் என்பது அதன் பொருளாகும்.

"நம்பினார் கெடுவதில்லை'' என்பது முதுமொழி.

வாழ்க்கைக்கு நம்பிக்கையும் வழிபாடும் அவசியமாகிறது.

வழிபாடு செம்மையாகவும் நிரந்தரமாகவும் அமைய இறை நம்பிக்கை அவசியமாகிறது.

குழந்தை தன் தாயை நம்புவது போன்று மனிதன் இறைவனை நம்பி வாழும்போது அவன் வாழ்வு சிறக்கிறது.

நம்பிக்கையில்லாமல் வழிபாடு அமையாது. கடவுள்மீது அசைக்கமுடியாத நம்பிக்கை ஏற்படும்போது அம் மனிதனும் நம்பத்தகுந்தவன் ஆகின்றான். பொருள்மீது வைக்கும் நம்பிக்கை அப்பொருள் இருக்கும் வரைதான் நீடிக்கும். அப் பொருள் அழியும்போது நம்பிக்கையும் அழிந்துவிடும்.

"இறைவன் அழிவில்லாதவன். எனவே இறைவன்மீது வைக்கப்படும் நம்பிக்கை அழிவற்றதாக இருந்து வளர்ந்து கொண்டே வருகிறது"[18] என்று மிழலைத் தொண்டன் கூறுகிறார்.

இவ்வாறு இறைவழிபாட்டினை மேற்கொள்ள மனிதன் நம்பிக்கை கொள்ளவேண்டியவனாக அமைகிறான். ஒவ்வொரு மனிதனும் இறைவழிபாட்டில் நம்பிக்கைகொண்டு வாழ்வானே யானால் அவன் வாழ்வு உயர்வுபெறும் என்பது இதனால் அறியப்பெறும் கருத்தாகும்.

### 1-4-4-2 நம்பிக்கையும் திருவிழாவும்

மக்களுக்கு வாழ்க்கையின் நெறிமுறையில் இயற்கைச் சக்திகளைத் தம் வசமாக்கிக்கொள்ள கடவுள் வழிபாட்டில் மந்திரங்களும், சடங்குகளும், நம்பிக்கைகளும் தோன்றி உள்ளன.

மனிதன் விழாக்களில் பங்கேற்கும்போது பல உண்மைகள் சமயநெறியைக் குறித்துத் தெரியவருகின்றன. அச் சடங்குகளின் செயல்களில் அடிப்படைக் காரணத்தைப் புரிந்துகொள்ள விழா உதவுகிறது. அதன்பேரில் மனிதனுக்கு விழாக்களின்மூலம் சமய நெறிமீது நம்பிக்கை ஏற்படுகிறது. நாளடைவில் மனிதன் திட்டவட்டமான விழாக்களின் நிகழ்ச்சிகளில் பங்கேற்கத் தகுதி அடைகிறான். பின் மனிதன் நம்பிக்கை வலுப்பெற்றுச் சமய நெறியின் மூலமாக இல்வாழ்க்கையிலும்,சமூக வாழ்க்கையிலும் பலநன்மைகளை அடைகின்றான்.

"விழாக்கள் நம்பிக்கையின் காரணமாக மனிதன் இயற்கைச் சக்திகளைத் தனக்குச் சாதகமாக்க முயன்ற நிலையில் தோன்றியனவாகவே காட்சி தருகின்றன. மனிதனது சிந்தனையைக்கொண்டு மீவியல்பு இயல்களுக்குக் காரணம் காண இயலாத நிலை ஏற்படும்போது மனம் வேறு சில செயற்பாடுகளை நிகழ்த்துவதன்வாயிலாக அவ்வாற்றல்களில் பாதிப்புகளிலிருந்து தப்பிக்க நினைக்கின்றது அந்நிலையில் மந்திரங்களும் நம்பிக்கைகளும் தோன்றிவிடுகின்றன. இவை பண்டைச் சமுதாயங்களிடையே விஞ்சியிருப்பதை சமூக வரலாறுகள் உணர்த்துகின்றன"[19] என்று க. காந்தி கூறுகிறார்.

எனவே விழாக்கள் நம்பிக்கையின் காரணமாகத்தான் தோன்றியுள்ளன. மனிதன் இயற்கைச் சக்திகளைத் தனக்குச் சாதகமாக்க முயன்றநிலையில் விழாக்கள் தோன்றினதாகவே எண்ணவேண்டும்.

### 1-4-4-3 நம்பிக்கையும் சடங்குகளும்

சடங்கு என்பது வாழ்வின் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டது. விழா என்பது சடங்குகளின் ஒன்றிணைக்கப்பட்ட கூட்டுத் தொகுதியாகும். சடங்குகளே விழாவிற்கு அடிப்படை ஆகும்.

சடங்குகள் ஒவ்வொன்றும் வரையறுக்கப்பட்ட மந்திரங் களோடு கூடிய நிகழ்ச்சிகளாகும்.

விழாக்கள் சமயத்தைச் சார்ந்த மந்திரங்களோடும்' இயற்கையோடும் கூடிய நிகழ்ச்சிகளாகும். விழாக்கள் மகிழ்ச்சியினை அடிப்படையாகக்கொண்டு சமயத்தைத் தழுவியதாக அமையும்.

சடங்குகள் செயல் முறையினை அடிப்படையாகக்கொண்ட கடினமான விதிகளை உள்ளடக்கியதாகவே இருக்கின்றன. சடங்குகள் மரபு வழிபட்ட செயல்முறைகளை அடிப்படையாகக் கொண்டு அமையக் காண்கிறோம்.

சடங்குகளோடு கூடிய விழா அனைத்தும் மனிதனின் மகிழ்ச்சிக்கும், நல்வாழ்விற்கும் சமய நெறி உருவாவதற்கும் வழிவகுக்கின்றன.

மேற்கூறிய சடங்குகளோடு கூடிய விழாக்களில் பல்வேறு நிகழ்ச்சிகள் இக்கோயிலில் நடைபெற்றுவருகின்றன.

பெருந்திருவிழாவிற்குமுன் கொடி ஏற்றுதல், பலியிடுதல், படையல் படைத்தல், எட்டுதிக்குப் பாலர்களையும், வாயிற்காவலர்களையும் அழைத்து விழாவினைச் சிறப்பித்தல், அபிடேகம் நடத்துதல், பெருமாளுக்கும் தாயாருக்கும் திருக்கல்யாணத்தில் வேள்வித் தீ வளர்த்தல், மங்கல நாண் அணிவித்தல், அம்மி மிதித்து அருந்ததியைப் பார்த்தல் முதலிய சடங்குகள் நடைபெற்றுவருகின்றன. இதனை நம்பிக்கையாக வும் கடைபிடித்து வருவதால், நம்பிக்கையும் சடங்கும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்துள்ளன.

## 1-5-0 வேண்டுதல்

மக்களுக்கு இன்னல்கள் வரும்போது இறைவனிடம் சென்று தம் இன்னல்கள் தீர வேண்டிக்கொள்வர். மனிதன் தான் நினைத்த செயலில் அல்லது செய்ய இருக்கிற பணியில்

எவ்விதச் சோதனைகளோ துன்பங்களோ வராமல் அவை நன்மையுடன் முடியவேண்டும் என்றும் அவ்வாறு நல்விதமாக முடிந்தால் நான் இன்ன இன்ன செய்வேன் என்றும் இறைவனிடம் முன்னதாக உறுதிமொழி கொடுத்தலே வேண்டுதலாகும். வேண்டிக் கேட்டுக் கொள்ளுதலே 'வேண்டுதல்' ஆயிற்று எனலாம்.

### 1-5-1 பல்வகை வேண்டுதல்களும் அவற்றை நிறைவேற்றுதலும்

இத் திருத்தலத்தில் மக்கள் பல்வேறு வகையான வேண்டுதல்களை இறைவனிடத்திலும் தாயாரிடத்திலும் வேண்டிக் கொள்கின்றனர். அவை திருமணமாகாத கன்னிப் பெண்கள் தமக்குத் திருமணம் நடைபெறவேண்டும் என்று வேண்டிக் கொள்ளுதல்.

பிள்ளைப்பேறு அடையத் தாயாரை வேண்டிக்கொள்ளுதல்.

பிணி, தம் உளநோயும் நீங்க இறைவனை வேண்டிக் கொள்ளுதல்.

கொடுத்த கடன் திரும்பி வராத நிலையில் அத் தொகை திரும்பி வந்தால் காணிக்கைச் செலுத்துகிறேன் என்று வேண்டுதல் செய்தல்.

மாணவர்கள், அரசியல்வாதிகள் ஆகியோர் முறையே தேர்விலும் தேர்தலிலும் வெற்றிபெறவேண்டுதல்.

பட்டதாரிகள்,இளைஞர்கள், பணிக்காக வேண்டுதல்.

கால் நடைகளும் வீட்டு விலங்குகளும் நன்றாக இருக்கவும், பயிர்கள் செழிக்கவும் வேண்டிக் கொள்ளுதல்.

நீதிமன்றங்களில் உள்ள வழக்குகள் வெற்றி பெறவும், விரைவில் தீர்வு காணவும் வேண்டுதல்.

தத்தம் குடும்பம் சீராக இருக்கவும், நன்கு ஒளிவீசவேண்டுமென்றும் கார்த்திகை விளக்கு விழாவன்று அகல் விளக்குகளை ஏற்றிவைத்து வேண்டிக்கொள்ளுதல்.

புத்தாண்டிலிருந்து தம் குடும்பம் நற்பயனை அடைய ஆண்டுதோறும் சித்திரைத் திங்கள் முதல் நாளன்று கோயிலுக்குச் சென்று வேண்டுதல் செய்தல்.

மேற்கூறியமுறையில் வேண்டுதல்களை மக்கள் கோயிலில் செய்து பின்பு தம் வேண்டுதல்கள் வாழ்க்கையில்

நிறைவேறியதும் அவற்றைத் திருக்கோயில் இறைவனிடம் பல்வேறுவகையில் நிறைவேற்றுவர்.

பெருமாளுக்கும், தாயாருக்கும் திருக்கல்யாணம் செய்தும், தாயாருக்குத் திருக்கல்யாணம், திருமுழுக்குச் செய்தும் திருத்தல மரத்திற்குப் பூசை செய்தும், தாயாருக்கும், பெருமாளுக்கும் புத்தாடைகள், அணிகலன்கள் அளித்தும் தம் வேண்டுதல்களை நிறைவேற்றுவர். மேலும், மலர் மாலைகள், காணிக்கை ஆகியவற்றைச் செலுத்துவர். தம் முதல் பணி சம்பளத்தைச் செலுத்தியும், தானியங்களைக் கொடுத்தும் அபிடேகத்திற்குப் பால் கொடுத்தும் தம் வேண்டுதல்களை நிறைவேற்றுவர். சிறப்புப் படையல், உற்சவம், அலங்காரம் ஆகியவற்றைச் செய்து தம் வேண்டுதல்களை மக்கள் இத் திருக் கோயிலில் நிறைவேற்றி வருகின்றனர்.

## அடிக்குறிப்பு

1. ப. அருணாசலம், வைணவசமயம், ப. 22
2. டி. சீனிவாச ரங்காச்சாரியார் (தொ. ஆ), ஸ்ரீ வெங்கடேசுவர மஹாத்மியம் (தெலு நூ) அத். 9; ப. 53.
3. மேலது அத். 9; ப. 54.
4. ரா. பி. சேதுப்பிள்ளை, ஊரும் பேரும் ப. 10.
5. இராமமூர்த்தி சர்மா, ஸ்ரீ வெங்கடேசுவர மஹாத்மியம் அத். 3; ப. 9.
6. சொ. பட்டாபிராமன், விஷ்ணுதலமஞ்சரி ப. 87-88.
   ப. முத்துப்பிள்ளை, வைணவத்தலங்கள் ப. 20-21.
   ஆர்.பஞ்சநாதப்பிள்ளை, திருமலைக்கோயில் வரலாறு ப.8-9.
   நசன், ஏழுமலை ஆண்டவன் ப. 46-51.
   ந. சுப்புரெட்டியார், திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும் ப. 167.
   T. ராகவ ஆச்சாரியார், சீனிவாசக் கல்யாணம் ப. 16-18.
   ஜெ. எம். சோமசுந்தரபிள்ளை, திருக்கோயில் அமைப்பு ப. 144-146.
   வீரராகவ அய்யங்கார், திருவேங்கடத் தலப்புராணம் ப. 47-48.
   இராதா இராமநாதன், பத்மாவதி சீனிவாசக் கல்யாணம் ப. 62-64.
   தெ. நா. ஜி. எஸ், மோகன், ஆந்திர பிரதேசத்திலோனி பிரசித்த புண்ணிய சேத்ராலு பிரதான தேவாலயமுலு (தெ.நூ.) ப. 184.

ஸ்ரீ கோபிகிருஷ்ணா, மன ஆலயமூல சரித்திர ப. 162-164.

ஆர். இராமமூர்த்தி சர்மா (மொ. பெ. ஆ), ஸ்ரீ வெங்கடேசுவர மஹாத்மியம் ப. 176

ஆந்திர பிரப நாளிதழ்- திருமலை திருப்பதி திருக்கோயில் சிறப்பிதழ் வெள்ளி 27-5-1988. ப. 1.

T. சீனிவாச ரங்காச்சாரியார் (தொ. ஆ), ஸ்ரீ வெங்கடேசுவர மஹாத்மியம் ப. 55.

B. Kameswara Rao, Selected Vijayanagara Temples in Royalaseema p. 97-98.

S. Krishnaswamy Iyengar A History of Tirupathi p. 161.

T. Krishnaswamy, History of Tirumala pp 121-122.

Madras Epigraphical Report Madras Govt. 1912. para-56.

T.T.D. Ephigraphical Report, Vol-II p-48.

N. Ramesan. The Tirumala Temple p. 44.

Sadhu. Subramanya Shastri, Tirupathi Venkateswara p. 161.

A. Chandrasekar-Cencus of India 1961 Vol II A. P. State p. 138.

Krishna Reddy. Temples in Chittoor DIST p. 176.

Kameswara Rao; Temples in and around Chittoor p. 172.

7. T. சீனிவாச ரங்காச்சாரியார், மு. நூ. அத் 9 ப. 54.
8. மேலது அத். 9 ப. 55.
9. மேலது. அத். 9. ப. 56.
10. க. காந்தி. தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் ப. 51.
11. மேலது. ப. 103.
12. மேலது. ப. 105.
13. International Encyclopaedia of the Social Sciences Vol-1 p. 455.

    "A Grown person probably has ten thousands of beliefs hundreds of altitudes, but only dozens of aptitudes."
14. தொல். சொல். நூ. 329.
15. நற்றிணை, 175 7.8.
16. மேலது. 178 6-7.
17. மாருதிதாசன், இந்து சமயக் கருத்துக்கள். ப. 204.
18. மிழலை தொண்டன், வாழ்வும் வழிபாடும் ப. 57.
19. க. காந்தி, மு-நூ ப. 53.



# அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் அமைப்பும் திருமேனிகளும்

2-0 முன்னுரை

2-1-0 சுற்றுப்புறத் திருக்கோயில்கள்

2-1-1 அருள்மிகு பராசரேசுவரர் திருக்கோயில்
2-1-2 அருள்மிகு வீரபத்திரர் திருக்கோயில்
2-1-3 அருள்மிகு சக்திவிநாயகர் திருக்கோயில்
2-1-4 அருள்மகு மீனாட்சியம்மன் திருக்கோயில்
2-1-5 அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்
2-1-6 அருள்மிகு திரௌபதியம்மன் திருக்கோயில்
2-1-7 அருள்மிகு சுரைக்காய்ச் சித்தர் திருக்கோயில்
2-1-8 அருள்மிகு நரசிம்மர் திருக்கோயில்

2-2-0 வைணத் தலச்சிறப்பு

2-2-1 வைணவத்தின் நோக்கம்
2-2-2 கல்யாண வெங்கடேசுவரர் திருக்கோயில் அமைப்பு
2-2-3 திருக்கோயில் அமைப்பின் வளர்ச்சி

2-3-0 ஆகமங்களும் திருக்கோயில்களும்

2-3-1 வைணவ ஆகமத்தின் அடிப்படையில் திருக்கோயில்கள்

2-4-0 கோபுர அமைப்பு

2-4-1 கோபுர நிலைகள்
2-4-2 கோபுர சுதைச் சிற்பங்கள்
2-4-3 நாராயணவனத் திருக்கோயில் கோபுர அமைப்பு
2-4-4 பலிபீடம்
2-4-5 கொடிமரம்
2-4-6 இரண்டாவது கோபுரம்

2-5-0 கருவறை

2-6-0 பள்ளியறை

**2-7-0 திருக்கோயில் திருமண்டபங்கள்**

2-7-1 ஊர்தித் திருமண்டபம்
2-7-2 ஊஞ்சல் திருமண்டபம்
2-7-3 கருடாழ்வார் சிற்றாலயத் திருமண்டபம்
2-7-4 மகா மண்டபம்
2-7-5 தாயார் சிற்றாலயத் திருமண்டபம்
2-7-6 சீனிவாசத் திருமணத் திருமண்டபம்
2-7-7 ஆஞ்சநேயர் சிற்றாலயத் திருமண்டபம்
2-7-8 வேதாந்த தேசிகர் சிற்றாலயத் திருமண்டபம்
2-7-9 தேர்த் திருமண்டபம்
2-7-10 பதினாறு தூண் திருமண்டபம்
2-7-11 வைகுண்ட ஏகாதசித் திருமண்டபம்
2-7-12 தெப்பக்குள நீராட்டுத் திருமண்டபம்
2-7-13 கங்கை கொண்டான் திருமண்டபம்

**2-8-0 மூலவர் அமைப்பும் உற்வசச் செப்புத்திருமேனிகளும்**

2-8-1 மூலவர்
2-8-2 போக சீனிவாச மூர்த்தி
2-8-3 உற்சவர்
2-8-4 பலிமூர்த்தி
2-8-5 ஸ்நபன் மூர்த்தி
2-8-6 உடையவர்

**2-9-0 ஆழ்வார்கள் கல்திருமேனி அமைப்பு**

2-9-1 கூரத்தாழ்வார்
2-9-2 மதுரகவியாழ்வார்
2-9-3 திருப்பாணாழ்வார்
2-9-4 தொண்டரடிப் பொடியாழ்வார்
2-9-5 பெரியாழ்வார்
2-9-6 குலசேகராழ்வார்
2-9-7 திருமழிசையாழ்வார்
2-9-8 பேயாழ்வார்
2-9-9 பூதத்தாழ்வார்
2-9-10 பொய்கையாழ்வார்
2-9-11 நம்மாழ்வார்
2-9-12 திருமங்கையாழ்வார்

# அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் அமைப்பும் திருமேனிகளும்

## 2.0 முன்னுரை

நாராயணவனத் திருத்தலப் பெருமையையடுத்து அத் திருத்தலத்தின் பெருமைக்கெல்லாம் காரணமாக இருப்பது அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில். இவ் விரண்டாவது இயல் அதன் அமைப்பு, திருமேனி பற்றி விளக்கு கிறது. இவ்வியல் திருக்கோயிலைச் சுற்றி எழுந்துள்ள பல்வேறு கோயில்களைப் பற்றி முதலில் குறிப்பிடுகின்றது. அடுத்து வைணவத்தலச் சிறப்பினைக் கூறிக் கல்யாண வெங்கடேசுவர கோயில் அமைப்பினை விளக்க முயல்கிறது. இதைத் தொடர்ந்து அவ் விளக்கத்திற்குத் துணை செய்யும் ஆகமங்கள் பற்றிக் குறிப்பிடப்படுகின்றன. பின்னர் கோபுர அமைப்பு, கருவறை, பள்ளியறை, திருக்கோயில் திருமண்டபங்கள் ஆகியன முறையாக விளக்கப்பெறுகின்றன. பின்னர் மூலவர் அமைப்பும் உற்சவச் செப்புத்திருமேனிகளும் இடம் பெறுகின்றன. அடுத்து ஆழ்வார்கள் கல்திருமேனி அமைப்புகள் கூறப்பெறுகின்றன. அங்ஙனமே கல்லில் அமைந்துள்ள அவதாரத் திருமேனிகளும் அடுத்துக் குறிக்கப்பெறுகின்றன. இறுதியாகத் திருக்கோயில் சிற்றாலயங்களும், ஊர்தித் திருப்பணிகள், அணிகள்பற்றிய செய்திகளும் இடம் பெறுகின்றன.

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா"[1] என்ற அவ்வையாரின் கருத்திற்கேற்ப இறைவன் குடிகொண்டுள்ள இடத்தில்தான் மக்களும் குடியிருக்கவேண்டுமென்ற எண்ணம் நெடுங்காலமாகவே மக்களிடையே இருந்துவருகின்றது.

மக்கள் தங்கள் வாழ்க்கையைத் திருக்கோயில்களுடன் இணைத்தே நடத்திவந்தனர், வருகின்றனர். மணியோசை கேட்கும்போதெல்லாம் இறைவனின் நினைவே அவர்களுக்கு ஏற்படுகிறது.

இறைவன் திருக்கோயில்கள் இல்லாத ஊரைத் "திருஇல் ஊர்" என்று குறிக்கிறார்[2] அப்பர் சுவாமிகள்.

திருக்கோயில் இல்லாத ஊரும், திருவெண்ணீறு அணியாத மக்கள் வாழும் ஊரும், திருமகள் இல்லாத ஊர்களாகும். திருக் கோயில் இருந்தால் மட்டும் போதாது. அங்கு வழிபாடும் திருவிழாக்களும் தொடர்ந்து நிகழ வேண்டும் என்பது ஆன்றோரின் எண்ணம்.

"கண்ணினால் அவர் நல்விழாப்பொழிவு கண்டு ஆர்தல்"[3] என்பது சேக்கிழார் வாக்கு. இக் கருத்திற்கு ஏற்பவே திருக்கோயில்களில் வழிபாடுகளும், விழாக்களும் நடைபெற்று வந்திருக்கின்றன. மேற்கூறிய கருத்துக்களால் திருக்கோயிலின் இன்றியமையாமை புலனாகும்

திருக்கோயில் வழிபாட்டால் மக்களின் வாழ்க்கை நெறி படுத்தம்படுகிறது.

"மக்கள் தொண்டே மகேசன் தொண்டு" என்ற பழமொழி இறைபக்தியையும், மக்கள் வாழ்க்கை நலனையும் இணைத்துக் காட்டுவதை அறியலாம். இதன் அடிப்படை யிலேயே நாயன்மார்களும், ஆழ்வார்களும் மக்கள் தொண்டை பெரிதாகப் போற்றினர். திருக்கோயில் வழிபாட்டால் கூட்டுறவு, ஒற்றுமையுணர்வு ஏற்படுகின்றன. இறைவன் அடியார்களை அன்பின் பொருட்டே ஆட்கொள்ளும் புராணச் செய்திகளை மக்கள் அறிவதால் அன்பு நெறி ஓங்குகிறது, இறைபக்தியினால் தீய எண்ணங்கள் விலகி ஒழுக்கம், பண்பு, சமய நம்பிக்கைகள் ஆகிய நல்லெண்ணங்கள் வளர்ச்சி யுடைகின்றன.

## 2-1-0 சுற்றுப்புறத் திருக்கோயில்கள்

நாராயணவனத்தில் பழமைவாய்ந்த கோயில்கள் பல அமைந்துள்ளன. ஊரின் நடுவில் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவரர் சுவாமியின் திருக்கோயில் பொலிவோடு விளங்குகிறது. இக் கோயிலிற்குக் கிழக்கில் பல்வேறு கோயில்கள் அமைந்துள்ளன. அவை. 1. அருள்மிகு பராசரேசுவரர் திருக்கோயில். 2. அருள்மிகு வீரபத்திரர் திருக்கோயில், 3. அருள்மிகு சக்தி விநாயகர் திருக்கோயில், 4. அருள்மிகு ஆட்டனாட்சியம்மன் திருக்கோயில். 5. அருள்மிகு அகத்தீசுவரர்

திருக்கோயில். 6. அருள்மிகு திரௌபதியம்மன் திருக்கோயில். 7. அருள்மிகு நரசிம்மர் திருக்கோயில் ஆகிய திருக்கோயில்கள் அமைந்துள்ளன. இவற்றோடு வடக்கில் சித்தர் வழியில் வந்த சுரைக்காய்ச் சித்தர் சமாதி அடைந்த திருக்கோயில் ஒன்றும் உள்ளது.

## 2-1-1 அருள்மிகு பராசரேசுவரர் திருக்கோயில்

இத் திருக்கோயில் அருணா நதிக்கரையோரத்தில் அமைந்துள்ளது. இக் கோயிலின் வாயில் மேற்கு நோக்கி அமைக்கப்பெற்றுள்ளது. அருள்மிகு பராசரேசுவரர் இலிங்க வடிவில் காட்சித் தருகிறார். அவரருகே அருள்மிகு சம்பக வள்ளியம்மனும் எழுந்தருளியுள்ளார். திருமண்டபத்தில் நவக்கோள்கள் (நவகிரகங்கள்) அமைக்கப்பெற்றுள்ளன.

உள் திருச்சுற்றில் முதலில் விநாயகர் திருச்சந்நிதியும் அதையடுத்து அருள்மிகு சண்முகர் சந்நிதியும் அமைக்கப் பெற்றுள்ளன. வடக்கில் அருள்மிகு சண்டிகேசுவரரும், காசி விசுவநாதரும், வடகிழக்கில் கால பைரவரும், கிழக்கில் சூரிய நாராயணரும் எழுந்தருளியுள்ளனர். இச் சந்நிதிக்கு எதிரில் பலிபீடமும், மகாநந்தியும் அமைக்கப்பெற்றுள்ளன.

விமானத்தைச் சுற்றி பஞ்சகோட்டம் விளங்குகிறது. அதில் ஐந்து மூர்த்திகள் காட்சி தருகின்றனர். அவர்கள் 1. கால பைரவர் 2. பிரம்மா 3. திருமால் 4. துர்க்கை 5. தென்முகக் கடவுள் ஆவர்.

இத் திருக்கோயிலின் இராச கோபுரம் மூன்று நிலைகளைக் கொண்டுள்ளது. சிவனுக்கும், அம்மனுக்கும் தனித்தனி சந்நிதி களும், கருவறை விமானங்களும் அமைக்கப்பெற்றுள்ளன.

அருள்மிகு பராசரேசுவரர் இலிங்க வடிவமாக கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். அருள்மிகு சம்பகவள்ளியம்மன் தெற்கு நோக்கி காட்சியளிக்கிறார்.

இத் திருக்கோயில் கோபுரங்கள், விமானங்கள், தூண் அமைப்புகள் அனைத்தும் பல்லவர் காலக் கட்டடக் கலையைப் பெரிதும் ஒத்துள்ளன. எனவே இத் திருக்கோயில் பல்லவர் காலத்தில் கட்டப்பெற்றிருக்க வேண்டும் எனக் கருத இடமுண்டு. இக் கருத்தை அரண் செய்ய கல்வெட்டுச் சான்றுகளோ இலக்கியச் சான்றுகளோ எதுவும் கிடைத்தில,

**2-1-2 அருள்மிகு வீரபத்திரர் திருக்கோயில்**

இத் திருக்கோயில் கீழ்கரம் என்றழைக்கப்பெறும் ஊரின் எல்லையில் ஆகாசராசனின் கோட்டை வாயிலின் முன் அமைந்துள்ளது. இங்கு அருள்மிகு வீரபத்திரர் எழுந்தருளி யுள்ளார். இத் திருக்கோயில் நாராயணவனத்திற்குத் தெற்கில் அமைந்துள்ளது.

இத் திருக்கோயிலில் தீமிதி விழாவும் விநாயகர் சதுர்த்தித் திருவிழாவும் நடத்தப்பெறுகின்றன.

இவ்வூர் மக்கள் நாள்தோறும் இக் கோயிலுக்குச் சென்று வீரபத்திரரை வழிபட்டு வருகின்றனர்.

இத் திருக்கோயிலில் சாக்த ஆகம முறையில் வழிபாடுகள் நடத்தப்பெறுகின்றன.

ஆகாசராசனின் முன்னோர்கள் இத் திருக்கோயிலைக் கட்டி வழிபட்டு வந்துள்ளனர் என்பது கர்ண பரம்பரை செய்தி யாகும்.

இத் திருக்கோயிலைத் திருமலை திருப்பதி தேவத்தானத்தார் 1927-ம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 27-ம் நாள் தம் ஆட்சியின்கீழ் ஏற்படுத்திக்கொண்டனர்.

**2-1-3 அருள்மிகு சக்திவிநாயகர் திருக்கோயில்**

இத் திருக்கோயில் அருள்மிகு வீரபத்திரர் திருக் கோயிலுக்குத் தெற்கில் ஒருகிலோ மீட்டர் தொலைவில் கொம்புலபாளையம் என்னும் கிராமத்தில் அமைந்துள்ளது இக் கோயில் ஆகாசராசனது கோட்டையின் உள்ளே அமைந் துள்ளது.

அக் காலத்தில் மன்னர்களும் மக்களும் இக்கோட்டை யிலுள்ள அருள்மிகு சக்திவிநாயகரை வணங்கிய பிறகுதான் அவரவர் பணிகளில் ஈடுபடுவர் என அறிகிறோம் இத் திருக் கோயிலும் ஆகாசராசன் ஆட்சி செய்யும்போதே அவன் கோட்டையில் இருந்ததாகக் கர்ண பரம்பரைச் செய்தி கூறுகிறது.

''ஆகாசராசன் கி.மு. முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்து வந்தான்''[6] என்று கூறப்பெறுகிறது.

இக் கோயில் மிகச் சிறிய அளவினதாக அமைந்துள்ளது.

## 2-1-4 அருள்மிகு ஆம்னாட்சியம்மன் திருக்கோயில்

இத் திருக்கோயில் அருணா நதிக்குத் தெற்கில் செம்புல பாளையத்திற்கு அருகில் அமைந்துள்ளது. இத் திருக்கோயில் மிகவும் பழமையான அமைப்பைப் பெற்றுள்ளது. "ஆம்னாட்சி யம்மனை ஆகாசராசனும் அவர் குடும்பத்தினரும் தம் குல தெய்வமாக வழிபட்டு வந்தனர் எனும் கருத்தைப் புராணச் செய்தித் தருகிறது".[7]

இத் திருக்கோயிலுக்குத் திருச்சுற்றும், பூந்தோட்டமும் அமைக்கப்பெற்றுள்ளன. அம்மனுக்கு மூன்று நிலைகளைக் கொண்ட அழகான விமானம் ஒன்று கட்டப்பெற்றுள்ளது. நுழைவு வாயிலுக்கு எதிரில் இரண்டு பெரிய தூண்கள் உள்ளன, அங்குப் பலிபீடம் ஒன்றும் உள்ளது.

நாராயணவனத்தில் ஆம்னாட்சியம்மன் கோயிலை நிறுவிய தாக அத்திகிரி மஹாத்மியம் என்ற நூலில் குறிப்பிடப் பட்டுள்ளது".[8]

பலிபீடத்திற்கு வலப்பக்கத்தில் விநாயகர் கற்சிலை அமைக்கப்பெற்றுள்ளது. அதற்கடுத்து பெரிய முகமண்டபம் ஒன்றுள்ளது. அம்மண்டபத்தில் வெள்ளிக்கிழமைதோறும் அம்மனுக்கு ஊஞ்சல்சேவை நடந்ததாகக் கூறப்பெறுகிறது.

இம் மகாமண்டபத்தின் வாயிலில் இருபுறங்களிலும் அம்மனுக்கு வாயிற் காவல் மகளிர் இருவர் நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றனர்.

முன்னொரு காலத்தில் ஆதிசங்கரர் இந்தியா முழுதும் பயணம் செய்து வரும்போது இக் கோயிலுக்கு வருகை தந்துள்ளார். அப்போது அம்மனையும் அவரின் பெருமையையும் கேட்டறிந்து இரண்டு கற்பலகைகளில் ஐம்பொன்னால் செய்யப் பெற்ற தகடுகளால், அம்மனுக்குச் சக்தி உருவேற்றப்பட்ட இயந்திரத் தகட்டை செய்துகொடுத்து அம்மனை வழிபட்டுச் சென்றார் என்பர்".[9] அவ்வியந்திரத் தகடு இன்றும் வழிபாட்டில் உள்ளது.

ஆம்னாட்சியம்மனின் கருவறை நீண்ட சதுர வடிவில் அமைந்துள்ளது. அம்மன் சிலையை 9½ அடி உயரத்தில் எழுந்தருளச் செய்துள்ளனர். அம்மனுக்கு எட்டு கைகள் அமைக்கப்பட்டுள்ளன.

வலப்புறம் உள்ள மேல் கையில் திரிசூலமும், இரண்டாவது கையில் கத்தியும், மூன்றாவது கையில் உடுக்கையும், நான்காவது கையில் மலர் மொட்டும் உள்ளன.

அம்மனின் இடப்புறம் உள்ள மேல் கையில் தீக்குடுவையும், இரண்டாவது கையில் வாள் தடுப்புக் கேடயமும், மூன்றாவது கையில் மணியும், நான்காவது கையில் அமுத பாத்திரமும் உள்ளன.

தலைமேல் தீப்பிழம்பு அமைந்துள்ளது. ஒரு காதில் சூரியன் வளையமும் இன்னொரு காதில் சந்திரன் வளையமும் அணிவிக்கப் பெற்றுள்ளன. இறைவி தன் இடது திருவடியால் அரக்கன் ஒருவனை மிதித்துக்கொண்டுள்ளது போன்று காட்சியளிக்கிறார்.

அம்மனுக்கு ஒவ்வொரு வெள்ளியன்றும் திருப்பதி தேவத்தானத்தாரால் திருமுழுக்குச் செய்யப்பெறுகிறது பின் பட்டுச்சேலை சாத்தப்பெற்றுப் பலவித மலர்களால் அழகு செய்யப்பெறுகிறது. வெள்ளியினால் செய்த முடி, சூலப்படை, கோரைகள், கண்மலர், மூக்குத்தி, புல்லாக்கு முதலியவற்றை அணிவித்து அழகு செய்கின்றனர். இவ்வழிபாட்டுக் காலத்தில் அம்மன் திருக்கோலம் அச்சம் தரும்வண்ணம் அமைந்துள்ளது.

இவ்வம்மனுக்கு ஆம்னாட்சியம்மன் என்று பெயர். "வட மொழியில் 'ஆம்' என்றால் சாந்தம் என்றும் 'அட்சி' என்றால் கண்கள் என்றும் பொருள். எனவே ஆம்னாட்சி என்றால் சாந்தமான கண்களையுடையவள். அதாவது அருட்பார்வை கொண்டவள் என்று பொருள்".[10]

இத் திருக்கோயிலில் நவராத்திரித் திருவிழா ஒன்பது நாட்களும், ஆவணித் திங்களில் வரும் அம்மன் திருவிழா மூன்று நாட்களும் நிகழ்த்தப்பெறுகின்றன. இத் திருவிழாவில் அம்மனுக்குத் திருமுழுக்கும் திரு அலங்காரமும் திருவீதியுலாவும் நடத்துகின்றனர்.

### 2-1-5 அருள்மிகு அகத்தீசுவரர் திருக்கோயில்

இத் திருக்கோயில் ஆகாசராசனது கோட்டையின் உட்புறத்தில் மேற்குநோக்கி அமைந்துள்ளது. இக் கோயிலிலுள்ள அருள்மிகு அகத்தீசுவரரை ஆகாசராசனும் அவரின் பரம்பரையினரும் வழிபட்டு வந்தனர் என்பர். "பத்மாவதிக்குத்

திருமணம் நடைபெறுவதற்கு முன்பும் திருமணம் நிச்சயித்த பின்பும் பத்மாவதி இத் திருக்கோயிலில் உள்ள சிவனை வழிபட்டு அவரின் அருளைப் பெற்றதாக ஸ்ரீவெங்கடேசுவர மஹாத்மியம் என்ற புராண நூலில் கூறப்பட்டுள்ளது''.[11]

இத் திருக்கோயிலில் அருள்மிகு விநாயகர், அருள்மிகு சண்முகர், அருள்மிகு சண்டிகேசுவரர், காசி விசுவநாதர், சூரியன், வீரபத்திரர் முதலானோரின் சந்நிதிகள் அமைந்துள்ளன.

இத் திருக்கோயிலிலுள்ள முகமண்டபத்தில் நான்கு அடி உயரத்தில் அருள்மிகு அகத்தீசுவரர் இலிங்கவடிவில் எழுந்தருளியுள்ளார். இவரருகில் அருள்மிகு அகத்தீசுவரர் உற்சவராக எழுந்தருளியுள்ளார். இவ்விலிங்கம் மிகப் பழமையானதாகும். இது, தானே (சுயம்புவாக) தோன்றியது என்று கூறப்பெறுகிறது. அதன்பின் அகத்திய முனிவர் இவ்விலிங்கத்தை அதே இடத்தில் நிறுவி கோயில்கட்டி வழிபட்டதால் இக் கோயிலுக்கு அகத்தீசுவரர் என்றுபெயரிட்டு அழைப்பதாக ஸ்ரீவெங்கடேசுவர மஹாத்மியம் என்னும் புராண நூலில் கூறப்பெறுகிறது''.[12]

இவ்விலிங்கம் கூம்பு வடிவில் அமைக்கப்பெற்றுள்ளது. இவ்விலிங்கத்தின் ஒரு புறத்தில் விநாயகரும், மற்றொரு புறத்தில் சண்முகரும் எழுந்தருளியுள்ளனர். அடுத்து அம்மன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். இத் திருக்கோயிலின் மூலவருக்கு மூன்றுகாலமும் பூசை நடைபெற்றுவருகின்றது. மாசித் திங்களில் சிவராத்திரி திருவிழா நடத்தப்பெறுகின்றது.

### 2-1-6 அருள்மிகு திரௌபதியம்மன் திருக்கோயில்

இத் திருக்கோயில் நாராயணவனத்தில் உள்ள பேருந்து நிலையத்தின் அருகிலுள்ள அருணா நதிக்கரையருகில் அமைந்துள்ளது.

இத் திருக்கோயிலின் முன் அமைந்துள்ள பதினாறு தூண் மண்டபத்தை மகாமண்டபம் என்றழைப்பர். அதனுள் கருவறை முன் உள்மண்டபம் (அந்தராள) அறையும் அதற்கடுத்துக் கருவறை சதுரவடிவில் அமைக்கப்பெற்றுள்ளன.

இக் கருவறையில் தர்மராசர் எழுந்தருளியுள்ளார். அவர் பக்கத்தில் கல்லுருவில் திரௌபதியம்மன் காட்சி தருகிறார். கீழே பஞ்சபாண்டவர்கள் சிறிய உருவத்தில் கல்திருமேனிகளாக எழுந்தருளியுள்ளனர்.

கண்ணன், அருச்சுனன், திரௌபதி முதலானோரின் திருமேனிகளை ஐம்பொன்னால் எழுந்தருளச் செய்துள்ளனர். இச் சந்நிதிக்குப் பக்கத்தில் ஊர்தி மண்டபம் அமைக்கப் பெற்றுள்ளது.

இத் திருக்கோயிலில் ஆடித்திங்களில் வரும் வரலட்சுமி நோன்பிற்கு முன் ஐந்து நாட்கள் தொடங்கி பத்து நாட்கள் திருவிழா மிகச் சிறப்பாகவும் கடைசி நாளன்று தீமிதித் திருவிழாவும் நடைபெறும்.

## 2-1-7 சுரைக்காய்ச் சித்தர் திருக்கோயில்

இச் சித்தரின் சமாதி அருணா நதிக்கரையோரத்தில் அமைக்கப்பெற்றுள்ளது. 1902ஆம் ஆண்டு ஆடித் திங்கள் 22ஆம் நாள் சமாதி ஆனார் என்று கூறப்பெறுகிறது".[13] சுரைக்காய்ச்சுவாமி என்றழைக்கப்பெறும் சித்தர் ஒருவர் அருணா நதிக்கரையோரத்தில் உள்ள ஒரு வேப்பமரத்தடியில் வாழ்ந்துவந்தார் என்றும், இவர் சுரைக்குடுக்கைகளைத் தன் இடுப்பிலேயே கட்டியிருப்பார் என்றும் கூறுவர். அதனால் அவருக்குச் சுரைக்காய்ச் சுவாமி என்ற பெயர் வழங்கலாயிற்று என்பர். இவர் ஒரு நாயைத் தன்னுடன் வளர்த்து வந்தா ரென்றும், அந்நாய் எப்போதும் இவரைப் பிரியாமல் இருந்த தென்றும் கூறுவர்.[14]

திருப்பதியின் பக்கத்தில் உள்ள ஒரு கிராமத்தில் யாதவ குலத்தில் இச் சித்தர் தோன்றி 202 ஆண்டுகள் வாழ்ந்ததாகக் கூறப்பெறுகிறது. இவருக்குத் தமிழ், தெலுங்கு ஆகிய இரு மொழிகளிலும் பேசவும் எழுதவும் படிக்கவும் தெரியும் என்றும், சந்நியாசத்தை ஏற்றுக்கொண்டு மக்கள் தரும் உணவுப் பொருட்களைப் பெற்று வாழ்ந்துவந்தார் என்றும் கூறுவர்.[15]

இவர் சித்து விளையாட்டில் சிறந்து விளங்கினார் என்றும் கூறுவர். இவருடன் நட்புகொண்டு வந்தவரின் மகன் திருகோவிந்தசெட்டி அவர்கள் கூறக்கேட்ட செய்தி, யாதெனில், "அருணா நதிக்கரையோரத்தில் அமைந்துள்ள

பகுதி முட்கள் நிரம்பியிருந்தது. அங்கு அவ்வழியில் நாள்தோறும் செல்லும் இச் சித்தர் கற்களைப் போடுவார். ஒரு நாள் சித்தரின் நண்பர் 'ஏன் இப்படி இவ்விடத்தில் கற்களைப் போடுகிறீர்கள்' என்று வினவியபோது, 'அதுதான் என் வீடு' என்றும் அவ்விடத்தைச் சுத்தம் செய்து அங்குத் தங்கவேண்டும் என்றும் கூறுவாராம். இச் செய்தியினைக் கேட்டறிந்த நண்பர்கள் சித்தர் சீவசமாதி ஆனதும் அங்கேயே அவருக்குக் கோயில்கட்டி வழிபடலாயினர்"[13] என்று கூறினார்.

இத் திருக்கோயில் வளர்ச்சிக்குக் குழு ஒன்று அமைக்கப் பெற்றுள்ளது. இக்குழு ஆண்டுதோறும் ஆவணித்திங்கள் முழுமதி நாளன்று குருபூசை என்னும் சிறப்பு வழிபாடு நடத்தி வருகின்றது. அன்று சித்தருக்குத் (மூலவர்) திருமுழுக்கும் சிறப்பு திருவலங்காரமும் செய்து மலர் மாலைகளை அணிவிப்பர். அன்று ஏழைகளுக்கு அன்னதானமும் வழங்குவர். கோயிலுக்கு வருகின்ற அனைவருக்கும் திருநீறு, குங்குமம், தெய்வப்படையல் முதலியவற்றைத் தருவர். இரவில் சிறப்பு மேளதாளங்களுடன் சித்தர் திருமேனியை அலங்காரம் செய்து, மின்விளக்குகள் அமைத்து வாணவேடிக்கைகள் செய்து திருவீதிவுலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

**2-1-3 அருள்மிகு நரசிம்மர் திருக்கோயில்**

இத் திருக்கோயில் நாராயணவனத்திற்கு வடகிழக்கில் உள்ள இருமலைகளுக்கும் இடையில் ஆறு மைல் தொலைவில் சிங்கிரி என்றழைக்கப்பெறும் அருவியின் பக்கத்தில் அமைந்துள்ளது. நாராயணவனத்தையும், திருக்காளத்தியையும் யாதவ மன்னர்கள் 12ஆம் நூற்றாண்டில் ஆண்டுவந்ததாகக் கூறப் பெறுகிறது. அவர்கள் அப்பொழுது அவ்வருவியின் வழியாக நாராயணவனத் திருக்கோயிலுக்கு வந்து வழிபட்டு சென்ற தாகக் கூறுவர்.

நாராயணவனத்தை 12ஆம் நூற்றாண்டில் ஆண்ட யாதவ மரபில் வந்த திருவீர நரசிங்கதேவ யாதவராயலு என்பவர் ப மு த டை ந் த நாராயணவனக் கல்யாண வெங்கடேசுவர கோயிலைத் திருப்பணி செய்தார் என்று 'மன ஆலயமுல சரித்திரத்தில்' கூறப்பெற்றுள்ளது.[17]

இவ்வருவியின்கீழ் அமைக்கப்பெற்றுள்ள சிறிய கோயிலில் அருள்மிகு நரசிம்மர் நின்றகோலத்தில் தன்னுடன் திருமகள்

நீலமகள் முதலானோருடன் எழுந்தருளியுள்ளார். கோயிலுக்கு முன் பெரிய திருமண்டபங்கள் அமைக்கப்பெற்றிருந்தன. அவை தற்போது பெரிதும் சிதைந்தநிலையில் உள்ளன.

மன்னர்கள் ஆட்சி நடத்திய காலத்தில் நாராயணவன வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலிலிருந்து இந் நரசிம்மர் கோயிலுக்குப் பூசை செய்ய வாரத்திற்கு ஒருநாள் பூசாரிகள் மற்றும் அவர்களுடன் பணியாளர்கள் சென்று வந்ததாகப் புராணச் செய்தி கூறுகிறது.

இவரது கல்திருமேனி 6½ அடி உயரத்தில் நீன்ற திருக்கோலத்தில் அமைக்கப்பட்டுள்ளது. இக்கோல அமைப்பு இம் மாவட்டத்தில் வேறு எங்கும் காணப்படவில்லை. இக் கோயிலுக்கு எதிரில் நூறு அடி தொலைவில் சிங்கிரி அருவி உள்ளது. இங்குக் கோடை காலத்திலும் நீர் வற்றாது பாய்ந்து கொண்டிருக்கும்.

## 2-2-0 வைணவ தலச்சிறப்பு

ஆக்கல், காத்தல், அழித்தல் இம்மூன்று தொழில்களுக்கும் தனிச் சிறப்புண்டு. மக்களின் அன்றாட வாழ்க்கைச் சிறப்பாக அமைய மக்கள் இறைவனை வேண்டிக்கொள்கின்றனர். வீடுபேறு அடையவும் விரும்புகின்றனர். காத்தல் தொழில் கடவுளான திருமாலை வழிபடுவதுதான் மக்களுக்கும் அந்த நாட்டை ஆள்கின்ற மன்னர்களுக்கும் நன்மை தரும். அதனால் இப்பிறவியில் வாழும்வரை அனைத்துப் பேறுகளுடன் வாழ்ந்து வீடுபேறு அடைவதற்காகத் திருமாலையும், திருமகளையும் மக்கள் வழிபாடு செய்துவருகின்றனர்.

உருவ வழிபாடு எளிமையாக இருப்பதாக மக்கள் நம்புகின்றனர். மேலும் "எல்லா நன்மைகளை அடையவும் வீடுபேற்றை அடையவும் இறைவனை வழிபடுகின்றனர்.

இவ்வழியில்தான் முற்காலத்திலிருந்து தேவர்கள் அரசர்கள், மக்கள் முதலானோர் வைணவத்திற்கு முதலிடம் கொடுத்து ஆலயங்களைக் கட்டி வழிபட்டுவந்தனர்.

வைணவம் எட்டுப் பேறுகளின் பலனைத் தருவதற்கு உரியதாக இருப்பதால் மன்னர்களும், மக்களும் வைணவத்

திருத்தலங்களைக் கிராமத்தின் நடுவில் அமைக்க முற்பட லாயினர். அத்திருத்தலத்தைச் சுற்றித் தெருக்கள் அமையும்படி கிராமத்தை அமைத்துக்கொண்டனர்.

"புற்றுக்கள் இல்லாத இடத்திலும், இடுகாட்டிலிருந்து தொலைவிலும், சிவந்தமண்நிலத்திலும், கரடு முரடான முட்கள் இல்லாத இடத்திலும், மண் மேடுகள் இல்லாத இடத்திலும், எலிவளைகள் இல்லாத இடத்திலும், வைணவத் திருத்தலங்கள் அமைக்க வேண்டுமென்பது விமானார்ச்சகல்பம் என்ற நூலில் கூறப்பெற்றுள்ளது''.[18] ஆலமரம் அரசமரம் ஆகிய மரங்கள் உள்ள இடத்திலும், வளமான நிலப்பகுதியிலும் நீர்வளம் மிக்க இடத்திலும், மலை, ஆறு, குளம் முதலியவற்றின் அருகிலும், பூஞ்சோலைகள் அமைந்த இடங்களிலும், துளசி வளர்ந்த இடத்திலும் வைணவத் திருக்கோயில்களை அமைப்ப தற்குகந்த இடமாகக் கருதினர் என்பர்''.[19]

மேற்கூறப்பட்ட இடங்களிலெல்லாம் திருமால் குடிகொண்டிருப்பதாகக் கருதுவதால் அவ்விடங்களிலெல்லாம் வைணவத் திருக்கேயில்களை அமைப்பர்.

வைணவத் திருத்தலங்களுள் பின்வரும் எட்டுத் திருத் தலங்களைச் சிறப்புடையனவாகக் கூறலாம். இவ்வெட்டுத் திருத்தலங்களிலும் திருமால் தானே சுயமாக எழுந்தருளி யுள்ளதாகக் கூறப்பெறுகிறது. அவைகளாவன.

1. "பத்திரிநாத்து — நாராயணன்
2. பிரயாகை — மாதவன்
3. திருமலை — வெங்கடேசபெருமாள்
4. திருவரங்கம் — திருஅரங்கநாதர்
5. திருமுட்டிணம் — வராகர்
6. நைமிசாரண்யம் — தேவராசன்
7. நாங்குனேரி — தோத்தாத்ரிநாதன்
8. புட்கரம் — விசயராகவன்

மேற்கூறிய எட்டு இடங்களில் வடக்கில் நான்கு கோயில் களும், தெற்கில் நான்கு கோயில்களும் தானாகவே தோன்றியவைகளாகும் என்பர்''.[20]

இத்திருத்தலங்களுடன் மேலும் பல வைணவத் திருத்தலங்கள் உள்ளன. அவற்றின் எண்ணிக்கை நூற்றெட்டாகும். இந்நூற்றெட்டுத் திருத்தலங்களையும் ஆழ்வார்கள் பாடிச் சிறப்பித்துள்ளனர். இவையேயன்றிப் புராணங்களால் அறியப்படும் தலங்களும், மன்னர்களால் கட்டப் பெற்ற தலங்களும் பல இள்ளன. அவை கணக்கிலடங்கா.

இவ்வைணவத் திருத்தலங்களில் திருமாலுக்கும், திருமகளுக்கும் தனித்தனிச் சந்நிதி உண்டு. இருவருக்கும் வழிபாடு, திருவிழா, திருச்சுற்றுலா, படையல் முதலியன நடத்தப்பட்டு வருகின்றன.

**2-2-1 வைணவத்தின் நோக்கம்**

வைணவத் திருத்தலங்கள் வழிபாட்டின் வழியாக மெய்யன்பர்களுக்குச் சில நெறிமுறைகளையும், பண்பாட்டினையும் மறைமுகமாகத் தெரியப்படுத்துகின்றன.

வழிபாட்டின் நோக்கம் மக்கள் இறைவனின் அருளைப் பெற்று வைணவக் கோட்பாடுகளையும், இறைவனின் கோட்பாடுகளையும் பின்பற்றவேண்டும் என்பதாகும்.

இவ்வழிபாட்டின் வழியாக மக்கள் நல்லவற்றைத் தெரிந்து கொண்டு அவற்றை வாழ்க்கையில் பின்பற்ற வேண்டியது அவர்களின் கடமையாகும். அப்பொழுதுதான் வழிபாட்டின் நோக்கம் முழுமைபெறும்.

காட்டாகக் கோயிலில் திருமால் தலைவராகத் திகழ்கிறார். அதனால் அவருக்கு முதன் முதலில் திருமுழுக்கு,பூசை,வழிபாடு, படையல் முதலியன நடத்தியபின்தான் தாயாருக்கு மேற்கூறிய வழிபாடுகள் அனைத்தும் நடைபெறும். இக் கொள்கை மக்களின் ஒவ்வொரு இல்லத்தாருக்கும் பொருந்தும்.

கணவன்—தலைவன் மனைவி—தலைவி என்பதாகும்
சிவன் திருமுழுக்கை விரும்புகிறவர்.
திருமால் அலங்காரத்தை விரும்புகிறவர்.

திருமால் அனைத்துச் சிறப்புகளுக்கும் தலைவராகத் திகழ்கிறார். ஆதலால் மக்கள் திருமாலுக்குக் கோயில் கட்டி

வழிபட்டு வருகின்றனர். ஆடை, அணிகலன்கள், மலர்கள், குடை, சாமரம், விளக்குகள், வாகனங்கள் முதலியவற்றின் துணையால் திருமாலை மக்கள் வணங்குவதால் இறைவன் மக்களின் வாழ்க்கையினை மேம்படுத்தி வருவதாக நம்பி வாழ்க்கையை நடத்திவருகின்றனர்.

## 2-2-2 கல்யாணவெங்கடேசுவரர் திருக்கோயில் அமைப்பு

கோ + இல் = கோயில். அரசன் அல்லது தலைவன் குடிகொண்டிருக்கும் இடம் கோயில். மக்களுக்கெல்லாம் தலைவனாக உள்ள இறைவன் குடிகொண்டிருப்பது கோயிலாகும்.

மிகப் பழங்காலத்தில் மரங்கள் அடியிலேயே கோயில்கள் தோன்றின என்பது ஆராய்ச்சியாளர்கள் கண்ட உண்மையாகும். "ஆலமர் கடவுள்" என்றே இறைவனை வழிபட்டனர். பின்னர் மரத்தைச் சுற்றி மதில்கள் எழுப்பப் பட்டு கோயில்கள் கட்டப்பட்டன.

செங்கல்லால் கட்டுவது, பின்னரே வரலாயிற்று. செங்கற் கோயில்கள் சிதைந்துவிட்டமையால், கருங்கற்கள் உபயோகப் படுத்தப்பட்டன. மூலக்கோயில் என்பதில் அர்த்த மண்டபம் அதனையடுத்து வாகனமண்டபம், பலிபீடம், கொடிமரம் இவைமட்டும் உண்டு. அடுத்துப் படிப்படியாக கோயில் வளர்ச்சியடைந்து வந்துள்ளதைக் காணமுடிகிறது.

## 2-2-3 திருக்கோயில் அமைப்பின் வளர்ச்சி

மரங்களின் அடியில் அமைக்கப்பெற்ற கோயில்கள், திருத்தலத் திருமரம், மரம், செங்கல் முதலியவைகளால் கட்டப் பட்ட புராணக்கோயில்களாகும். பின் குகைக்கோயில் குடவரைக் கோயில்களாயின. அடுத்து ஒரே பாறையில் செதுக்கிய கல் இரதங்கள் மாமல்லபுரத்தில் பல்லவர் காலத்தில் உருவாயின. அடுத்துக் கற்கள், சுண்ணாம்பு, மரம் இவைகளால் ஆன கோயில்கள் கட்டப்பெற்றன. இவற்றிற்கடுத்துக் கருவறை விமானங்களையே கோபுரம் போல் அமைத்துவந்தனர். இப்படிக் கோயில் அமைப்பில் படிப்படியாக வளர்ச்சி அடைந்துள்ளதை வரலாற்றுமூலமாக அறியலாம். பின் வாயிற் கோபுரங்கள் பெரிய அளவில் கட்டப்பட்டுவந்தன. அதன்பின்

15-ஆம் நூற்றாண்டில் அம்பிகைக்கும் பரிவார தேவதைக்கும் தனித்தனி சந்நிதிகள், கோயில்கள் கட்டப்பெற்றன. அதற்கடுத்துக் கோயிலைச் சுற்றித் திருச்சுற்றுக்கள், திருமண்டபங்கள் கட்டப்பெற்றுவந்தன.

கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து ஆறாம் நூற்றாண்டு வரை களப்பிரர் காலத்தில் கோயில்களைப் பற்றிய குறிப்புகள் விளக்கம் பெறவில்லை என்பர். கோயில்கள் மரம் செங்கல் இவைகளைக்கொண்டு அமைக்கப்பட்டிருந்ததால் இடைக் காலத்தில் சிதறியிருக்கலாம்.

"அதனால் கி.பி. 600 முதல் கி பி. 900 வரை பல்லவர் காலத்தில் குகைக்கோயில்களும் கற்கோயில்களும் கட்டப் பட்டன என்பர். இக்காலத்தில்தான் நாயன்மார்களில் பலரும் ஆழ்வார்கள் பலரும் தோன்றிக் கோயில்களின் வளர்ச்சிக்குப் பாடுபட்டனர் என்பது வரலாறு உணர்த்தும் உண்மையாகும்.

பல்லவர் கட்டிய கோயில்களில் தூண்கள்கூட, போதிகை இல்லாத சாதாரணத் தூண்களாகவும், அடியிலும், மேல்தளத் திலும் நாலு பட்டைகளும் இடையே எட்டுப் பட்டைகளும் உள்ள தூண்களாகவும் காணப்படுகின்றன. பல்லவர் சின்னமான சிம்மம் தூண்களைத் தாங்கி நிற்பதையும் பார்க்கலாம்''[21] என்கிறார்.

மேற்கூறிய வடிவத் தூண்கள் நாராயணவனக் கல்யாண வெங்கடேசுவர சுவாமித் திருக்கோயிலுக்குச் சம்மந்தமான திருமண்டபங்களில் காணமுடிகிறது.

"ஒன்பதாம் நூற்றாண்டிற்குப்பின்னர் தென்னிந்திய கோயிற் சிற்பத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. பல்லவப் பேரரசிற்குப் பின் எழுந்த சோழப் பேரரசின் காலமே தமிழகத்தின் பொற்காலம் என்பர். இக்காலத்தில் சோழ அரசர்கள் கட்டிய கோயில்கள் யாவும் மிகப்பெரியவை. தூண்களின் பீடங்களிலும், போதிகைகளிலும் விசித்திர வேலைப்பாடுகள் செய்யப்பட்டன''[22] கோபுரங்கள் உயர்ந்து விளங்கின.

சோழர் காலத்தில் கட்டப்பட்ட கோயில்கள் போலவே நாராயணவனத்தில் உள்ள திருமண்டபங்களின் தூண்களில்

சிலவற்றில் வேலைப்பாடுகள் நிரம்பியுள்ளதைக்காண முடிகிறது

"பன்னிரண்டு, பதின்மூன்றாம் நூற்றாண்டுகளிலும் சோழ அரசர்கள் தங்கள் கற்பணிகளைவிட்டார்கள் இல்லை.

தாமரை மலர் போலெல்லாம் தூண்களின் போதிகைகளில் செதுக்கப்பட்டன. பீடங்களில் எல்லாம் படமெடுத்த நாக உருவங்கள் இரண்டு பிணைந்து காட்சியளித்தன என்பர்''[23]

மேற்கூறிய அமைப்புகள் யாவும் நாராயணவனத் திருக்கோயில் திருமண்டபத்தில் காணப்படுகிறது.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் யாதவ மன்னர்கள் திருக்கோயில்களில் பல திருப்பணிகள் செய்துள்ளனர் என்பது கல்வெட்டு மூலமாக அறியப்பெறுகின்றன. கி.பி.1300-கி.பி1700 வரை விசயநகர மன்னர்கள் காலத்திலும், நாயக்கர் மன்னர்கள் காலத்திலும் கோயில் திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன என்பதனைக் கல்வெட்டுக்களின் வாயிலாக அறியலாம்.

இவ்வாறு திருக்கோயில் அமைப்பின் வளர்ச்சியும் திருக்கோயில்களின் வளர்ச்சியும் அமைந்துள்ளன.

இவ்வாறு வளர்ச்சியடைந்த கோயில்களை நா. ரா. முருகவேள் எட்டுவகை என்று கூறுகிறார். அவை,

1. பெருங்கோயில்—மலைகள் மீது அமைக்கப்படும்

2. மாடக்கோயில்—உயர்ந்த மேடை மீது கட்டப்பட்ட கோயில்.

3. கரகக் கோயில்—இரதங்கள் போன்ற அமைப்பில் அமைந்த கோயில்.

4. ஞாழற்கோயில்—மரங்களால் உருவாக்கப்பட்ட கோயில்.

5. கொகுடிக்கோயில்—கொடிகள் சூழ்ந்த கோயில்

6. இளங்கோயில்—கோயில்களைப் பழுது பார்க்கும் போது பாலாலயம் அமைத்தல்.

7. மணிக்கோயில்—மணிமாதிரி விமானங்கள் அமைந்த கோயில்.

8. ஆலயக்கோயில்—ஆலமரம் அடியில் உள்ள கோயில் என்பர்".[24]

சாதாரணமாகக் கோயில்கள் உடல் அமைப்பிலும், இருதய அமைப்பிலும் அமைக்கப்பெற்றுள்ளன.[35] நம் உடலிலுள்ள ஆறு ஆதாரங்களையும் கோயில் பாகங்கள் குறிக்கும். காட்டாக,

"1. கர்ப்பக்கிரகம்—மூலாதாரம்
2. அர்த்தமண்டபம்—சுவாதிஸ்டானம்
3. மகாமண்டபம்—மணிபூரகம்
4. முதல் ஆவரணம்—அன்மையகோசம்
5. இரண்டாம் ஆவரணம்—பிராணமயகோசம்
6. மூன்றாம் ஆவரணம்—மனோமயகோசம்
7. நான்காம் ஆவரணம்—விஞ்ஞானமய கோசம்
8. ஐந்தாம் ஆவரணம்—ஆனந்தமய கோசம்"[35]

மனிதன் நிற்கும் கோலத்தில் கோயில் அமைப்பு அமைந்துள்ளதெனப் பின்வருமாறு நசன் கூறுகிறார்.

"1. உபபீடம்—அடித்தலம்—பாதம்
2. அதிஸ்டானம்—அடிமுழங்கால்—முட்டி
3. பாடவர்தம்—சுவர்கள்—கைகள்
4. கும்பபஞ்சரம்—பானைபோன்றமைப்பு—வயிறு
5. பிரஸ்தாரம்—கூரை—தோள்
6. கண்டம்——கழுத்து
7. சிகரம்—விதானம்—தலை, முகம்
8. உஷ்ணீசம்—முடிந்த தலைமுடி—சிகை
9. மஹாநாளிக—சன்னல்—மூக்கு, கண்'',[36] என்பர்.



எனவே, மேற் கூறியவாறு மனித உடல் அமைப்புக்கும், கோயில் கட்டட அமைப்புக்கும் நெருங்கிய தொடர்புண்டு. அதனால்தான் மனித இருதயத்தை கருவறையாக்கி, அருபத்தில் இருக்கும் கடவுளைத் தன் மனதில் அமைத்துக் கொண்டு மானிட பூசை மூலம் ஆத்ம சக்தியை வளர்த்துக் கொண்டு நற்கதியை அடைய வேண்டும் என்பர்.

கோயில் கட்டும் கலை மிகத் தொன்மை வாய்ந்தது. கோயில் அளவுகள் வரையறுக்கப்பட்ட முறையோடு இருந்தால் தான் பலன்கள் கிடைக்கும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. கோயில் கட்டும் கலை சம்மந்தமான நுட்பங்கள் வைகானச ஆகமத்திலும் மற்றும் மரீசி, காசியப முனிவர் ஆகிய இருவரும் எழுதிய நூலிலும் கூறப்பட்டுள்ளன.

"ஆலயத்தை வலம் வருவதற்கு அமைக்கப்படும் இடம் திருச்சுற்று எனப்படும். ஒவ்வொரு கோயிலுக்கும் மூன்று அல்லது ஐந்து திருச்சுற்றுகள் அமைக்கப்படும். வெளித் திருச்சுற்றில் வாயிலுக்கு நேரே கொடிமரம், பலி பீடம் முதலியவைகளும் அமையவேண்டும் என்று தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் கூறுகிறார்''.[27]

"கோயில்களின் அமைப்புமுறை பற்றிப் பல சாத்திரங்கள் உண்டு. சில கோயில்களில் குறிப்பிட்ட நாளில் சூரியனுடைய ஒளிக்கதிர் இறைவனுடைய திருவுருவத்தில் விழுமாறு கருவறை கட்டப்பட்டிருக்கிறது. கும்பகோணம் நாகேசுவரர் கோயிலில் ஆண்டுதோறும் சித்திரைத் திங்களில் 11,12,13 ஆகிய மூன்று நாட்களிலும் விடியற்காலையில் இருபது நிமிடங்களுக்குச் சூரிய ஒளி மூலத்தானத்தில் உள்ள இறைவன் மீது படுவது குறிப்பிடத்தக்கது!![28]

பெரிய கோயில்களைக் கட்டக் காரணம் உடல்நலத்துடன் வாழ்வதற்கு நாள்தோறும் நெடுந்தொலைவு நடக்க வேண்டும். உடற்பயிற்சியும் செய்ய வேண்டும். இந்தப் பழக்கம் ஏற்படுவதற்காக நம் முன்னோர்கள் பெரிய கோயிலைக் கட்டினார்கள்.

மிகப்பெரிய கோயில்கள் பல்வேறு வகையில் உள்ளன. சிதம்பரம் நடராசர் கோயிலின் பரப்பு 40 ஏக்கர். திருவானைக்கா, தஞ்சாவூர், திருவாரூர், மதுரை, திருவண்ணாமலை, காஞ்சி ஏகாம்பரரேசுவரர் முதலிய கோயில்கள் பரப்பால் பெரிய கோயில்களாகும்.

தமிழ்நாட்டுக்குச் சிறப்புத் தருவது கோயில்கள்தாம் என்று சொன்னால் மிகையாகாது. தமிழக மாநில அரசாங்கம் அதன் சின்னமாகக் கோயில் கோபுரத்தைப் பொறித்துக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. கோயில்களைச் சிறப்பாக உடையது தென்னிந்தியா எனினும் அதனுள் தனித்து விளங்குவது தமிழ்நாடு என்பது பொருந்தும்.

உடலே தேவாலயம் என்னும் தெளிவு ஏற்படத் தொடங்கிய நாளிலிருந்து உள்ளத்தைக்கோயிலாகவும் உடலை இறைவன் எழுந்தருளியுள்ள ஆலயமாகவும் வாயைக் கோபுர வாயிலாகவும், உயிரைச் சிவலிங்கமாகவும், புலன்களை விளக்கு களாகவும் கருதிவருகின்றனர்.

திருமூலர் திருமந்திரத்தில் இக்கருத்தமைந்த முறையில் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

> "உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு, ஆலயம்,
> வள்ளல், பிரானார்க்கு, வாய்கோ புரவாசல்
> தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
> கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே"[29]

சில இடங்களில் ஓம்கார அமைப்பில் கருவறை கொண்ட வட்டவடிவமான கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. இவ் வமைப்பில் அமைந்த கோயிலுக்கு எடுத்துக்காட்டாகக் காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயிலுக்கு அருகேயுள்ள ஜுர ஹரேச்சுரர் கோயிலைக் குறிப்பிடலாம். கோயம்புத்தூருக்கு அருகே உள்ள ஜுர ஹரேசுரர் கோயிலும் பேரூர்ப் பட்டீசுவரர் கோயிலும் இவ்வமைப்பில் கட்டப்பெற்றவையாகும்.

கோயிலைக் கட்டும் பெரிய பொறுப்பு முக்கியமாக நான்கு பேரைச் சேர்ந்துள்ளது. அவர்கள் 1. ஸ்தபதி (தலைமைச் சிற்பி) 2. சூத்திரதாரன் (நூலினால் அளவை பார்ப்பவர்) 3. தட்சகன் (கற்களை வெட்டி செதுக்குபவன்) 4. வர்த்தகி (வண்ணம் பூசுபவர்) மற்றும் பலர் முன்னிருந்து கட்டடத்தைக் கட்டுகின்றனர்.

கோயில் கட்டடம் அமைப்பைப் பார்த்தவுடனே மனதில் பக்தி ஏற்படும் முறையில் கோயில் அமைப்பு இருக்கவேண்டும். அதன்மூலம் பக்தியை வளர்க்கவேண்டும். கோபுரம், கொடி மரம் விமானம் இம்மூன்றும் சிற்ப நூற்படி சரியான

அமைப்பைப் பெற்றிருந்தால் மக்களின் முதல் பார்வையிலேயே அவர்களுக்குப் பக்தி ஏற்படும் என்பர்.

## கோபுரம்

'கோபுர தரிசனம் வரம பாவனம்' கோபுரத்தைப் பார்த்தாலே புண்ணியம் கிடைக்கும் என்று ஆகமம் அறிவுறுத்து கிறது.

இவ்வறிவுரைப்படி ஒருவன் கோபுர வாயிற்குள்ளே சென்று கொடிமரம், திருச்சுற்று, விமானம், வாயிற் காவலர்கள், மணி முதலியவற்றைக் கண்டு கருவறையில் மூர்த்தியைத் தொழுது வலம்வந்து வாயிற் காவலர்களை நெருங்கும் முன்பே அவனுக்குத் தூய்மையான எண்ணமும், தெய்வ ஈடுபாடும் தோன்றும் என்று ஆகமங்கள் கூறுகின்றன.

ஆகையால் இராச கோபுரங்கள், திருச்சுற்றுக்கள், கொடி மரம், பலிபீடம், மண்டபங்கள், கருவறை விமானங்கள் வாயிற் காவலர்கள், மூலமூர்த்தி முதலிய அமைப்புகள் ஆகமமுறைப்படி அமைக்கப்பெறும். சிற்ப நூலில் கூறிய 'அளவுகளில் கோயில் கட்டடங்கள் அமைந்தால் அவற்றிற்கேற்ப கோயில் வளர்ச்சியும் மெய்யன்பர்களின் வருகையும் பெருகும்.

## 2-3-0 ஆகமங்களும் திருக்கோயில்களும்

ஆகமம் என்ற வடமொழிச் சொல்லின் பொருள் தொன்றுதொட்டு வரும் அறிவு என்பதாகும்.

ஆகமா - என்பதில் ஆ - பாசத்தையும், க - பசுவாகிய ஆன்மாவையும், மா - பதியையும் குறிப்பிடுகின்றன. ஆகமங்கள் இறைவனை வணங்கும் வழிமுறைகளைப் போதிக்கின்றன என்கிறார்".[30]

## ஆகம விளக்கம்

ஆகமங்கள் திருக்கோயில் அமைப்பையும், வழிபாடுகளை யும், திருவிழாக்களையும் நெறிபடுத்தியது. பல்லவர்காலம் முதல் ஆகமத்தின் அடிப்படையிலேயே திருக்கோயில்கள் எழுப்பப்பட்டன.

ஆகமம் திருக்கோயிலில் அமைந்திருக்கின்ற ஒவ்வொரு சந்நிதி, மூர்த்தங்கள் எங்கே எப்படி அமையவேண்டுமென்பதை வரையறுத்துள்ளது.

"வேதங்களும், ஆகமங்களும் நாராயணனால் அருளப் பெற்றவை எனக் கொள்வதோடு, வேதங்களின் விரிவை விளங்கிக்கொள்ள ; முடியாதவர்களுக்கு அவற்றின் சாரமாகக் கூறப்பட்டவை ஆகமங்கள் என்பர்.[31]

**ஆகம வகைகள்**

வழிபடும் கடவுளின் பெயராலேயே ஆகமங்கள் எழுதப் பட்டுள்ளன. சிவனுடைய வழிபாட்டைப்பற்றிக் கூறுவது "சிவாகமம்".

"திருமாலின் வழிபாட்டைப் பற்றிக் கூறுவது வைணவ ஆகமம்".

சக்தியின் வழிபாட்டைப் பற்றிக் கூறுவது "சாக்தேய ஆகமம்". மேலும் கோயில் நிலையைப் பற்றியும் ஐந்து பருவ விழாக்காலத் திருமேனிகளைப் பற்றியும் ஆகமங்கள் கூறுகின்றன. இவற்றோடு பெருந்திருவிழா, மூர்த்திகளின் சிற்பவடிவங்கள், வாகனங்கள், தேர்களின் அமைப்பு முதலிய வற்றைப் பற்றியும் ஆகமங்கள் விரிவாகக் கூறுகின்றன.

வைணவ ஆகமங்கள் இரண்டு வகைப்படும்.

1. பாஞ்சராத்ரம் 2. வைகாணசம்

பாஞ்சராத்ரம் என்றால் பிரம்மம், முக்தி, போகம், யோகம், பிரபஞ்சம் ஆகிய இவ்வைந்து தத்துவங்களின் 'ராத்ரம்' (அறிவு) ஏற்பட வழிகாட்டுவதாகும் என்பர்.[32]

வேதங்களை மீட்ட இறைவன் அவ் வேதமுறையில் தன்னை யாரும் வழிபடாமல் எல்லோரும் பாஞ்சராத்ர முறையிலேயே வழிபடக் கண்டார். திருமறை வழியில் யாவரும் வழிபட முன்வரவில்லை.

அப்போது இறைவன் தானே விகனஸ் என்ற முனிவரின் உருவமெடுத்து திருமறை முறையைப் பின்பற்றி இறைவனை வழிபட்டார். எனவே விகனஸ் என்ற முனிவரால் பின்பற்றப் பட்ட இம்முறைக்கு வைகாணசம் எனப் பெயர் ஏற்பட்டது இது மந்திரமுறையிலான வழிபாடாகும் என்பார்.[33]

## 2-3.1 வைணவ ஆகமத்தின் அடிப்படையில் திருக்கோயில்கள்

ஆகம விதிப்படி கட்டப்படும் கோயில்களில் பல பிரிவுகள் காணப்பெறும். அவை கருவறை, முகமண்டபம், திருச்சுற்று மண்டபம், விமானம், கோபுரம், கொடிமரம், பலிபீடம் முதலியனவாகும்.[34]

வைணவத் திருத்தலக் கோயில்கள் வைணவ ஆகமங்களின்படி கட்டப்பட வேண்டும். அந்தந்தக் கட்டங்கள் மனையடி நூலில் குறிப்பிட்ட அளவுகளின் முறையில் கட்டப்பட வேண்டும். அப்பொழுதுதான் முழுப் பலன் கிடைக்கும். இம்முறையில்தான் நாராயணவனத் திருக்கோயிலும் கட்டப்பட்டுள்ளது.

கோயிலின் நுழைவு வாயிலான இராசகோபுரமும் அதையடுத்துக் கொடிமரம், பலிபீடம் பெரிய திருவடி ஆகியன அமையவேண்டும்.

இரண்டாவது திருச்சுற்றின் தென்கிழக்கில் அக்னி மூலையில் மடப்பள்ளியை அமைக்கவேண்டும். முகமண்டபம், மகாமண்டபம், அம் மண்டபத்தினுள் வாயிற் காவலர்கள், இவர்களையடுத்து அந்தரானம் அமையவேண்டும். கிழக்கே மூலவர் அமையவேண்டும்.

இரண்டாவது திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் கிழக்கு நோக்கி தாயார் சந்நிதி அமைக்கவேண்டும். வைணவக் குரவர்களுக்குண்டான திருமேனிகளின் சந்நிதியை முறைப்படி மூலவருக்கு தெற்கு நோக்கி அமைக்கவேண்டும். கிழக்கில் திருமண மண்டபம், வடக்கில் வைகுண்டவாசல் அமைக்கவேண்டும் என்பர்.

கொடி மரத்திற்குத் தெற்கில் ஊர்தி மண்டபமும், வடக்கில் ஊஞ்சல் மண்டபமும் அமையவேண்டும்.

"இராச கோபுரத்திற்கு நேர் எதிரில் இறைவன் திரும்புதல் மண்டபமும், அதையடுத்து எதிரில் சிறிய திருவடியான அநுமன் சந்நிதியும் அமைக்கவேண்டும் என்று ஆகமம் கூறுகிறது."[35]

மேற்கூறிய ஆகமமுறையில் இத் திருக்கோயிலில் மூலவர் திருமேனி, மடப்பள்ளி, சந்நிதிகள், திருமண்டபங்கள்,

கொடிமரம், பலிபீடம், திருச்சுற்றுக்கள், வாகன, ஊஞ்சல் மண்டபங்கள் ஆகியன அமைந்துள்ளன.

## ஆகமத்தின்படி கோயில் அமைப்பின் தத்துவங்கள்

கோபுரம் கம்பீரத்தையும், கொடிமரம் ஒருமையுடன் கூடிய குணத்தையும், பலிபீடம் தன் மனதில் உள்ள கொடிய எண்ணங்களைப் பலியிடவும் அமைக்கப்பட்டுள்ளன என்பர்.

திருச்சுற்றுகள் பக்தியை வளர்க்கும் சாதனங்களை அடைவதற்கு வேண்டிய வழிகளைக் கற்பிக்கின்றன.

கோயிலிலுள்ள சிற்பங்கள் பக்தியின் வலிமையைக் காட்டுகின்றன. மேலும் சிற்பங்களும், மண்டபங்களும் மனிதனின் உள்ளத்தில் இறைவன் உறைவதற்குரிய வழிகளைக் காட்டுகின்றன.

"கொடி மரத்தை வணங்கித் தன் மனதை ஒருமுகப் படுத்தாத மெய்யன்பனை எச்சரிக்கை செய்பவர்கள் வாயிற் காவலர்களாவர். மனித ஒருமைப்பாட்டிற்கு இவர்களை வணங்கிப் பின் கருவறைக்குச் செல்ல இவர்களிடம் இசைவு பெறுதல் வேண்டும் என்பர்."[36]

### 2-4-0 கோபுர அமைப்பு

கோபுர அமைப்பில், கோபுர நிலைகள், பலிபீடம், கொடிமரம், இரண்டாவது கோபுரம் முதலியன அடங்கியுள்ளன.

### 2-4-1 கோபுர நிலைகள்

கோபுரம் இறைவனின் திருவடியைக் குறிப்பதால் கோபுரம் இல்லாத கோயிலுக்குப் பெருமையில்லை. இக் கோபுரங்கள் மக்களுக்கு இறைவனை நினைவுப்படுத்திக் கொண்டிருக்கும் நிலையில் பல மைல்களுக்கு அப்பால் உள்ள மக்களுக்கும் தெரியும்படி உயரமாகக் கட்டப்படவேண்டும்.

கோபுரத்தைக் கண்டதும் மக்கள் எப்பணியில் இருந்தாலும் அவர்கள் மனதில் பக்தி ஏற்படவேண்டும்.

இராச கோபுர வாயிலின்மேல் பல நிலைகள் அமைந்த வாயில்கள் ஒற்றைப்படை இலக்கில் இருக்கவேண்டும். அவை பல தத்துவங்களைக் கூறுகின்றன.

மூன்று வாயில்கள் — விழிப்புணர்வு, கனவு, ஒருமைப் படுத்துதல்.

ஐந்து வாயில்கள் — ஐம்பொறிகளைக் குறிக்கும்.

ஏழுவாயில்கள் — ஐம்பொறிகளுடன் மனம், அறிவு ஆகிய இரண்டும் சேரும்.

ஒன்பது வாயில்கள் — மேற்கண்ட ஏழுடன் அகங்காரம், சித்து ஆகிய இரண்டும் சேரும்.

இத்தனை வாயில்கள் இருந்தும் உள்ளே செல்ல நிலவடியி லுள்ள (தரை மட்டத்திலுள்ள) வாயில்தான் பயன்படுகிறது.

புறக்கருவிகளும், அகக்கருவிகளும் பல நம்மிடையே இருந்தாலும், கடவுளின்மீது நாட்டம் கொள்ளும்போது மனம் என்னும் ஒரு கருவிதான் நமக்குப் பயன்படுகிறது. இக் கருவிகளை உள்ளபடி வைத்துவிட்டு மனம் இறைவனை நாடி உட்புறமாகச் செல்லவேண்டும் என்பதைக் கோபுரமும் அதில் உள்ள நிலைகளும் உணர்த்துகின்றன.

### 2.4-2 சுதைச் சிற்பங்கள்

கோபுரத்தில் சுதைச் சிற்பங்களை விருப்பப்படி அமைக்கக் கூடாது. சுதைச் சிற்பங்களைக் குறிப்பிட்ட அளவுகளில் அமைக்கவேண்டும். கோபுர நிலைகளில் உள்ள மாடங்களில் தேவதைகள், முனிவர்கள், மெய்யன்பர்கள், பூதகணங்கள் ஆகிய உருவங்களை அமைக்கவேண்டும்.

கோபுரத்தில் கீழ் நிலைகளில் எட்டுத்திசை தேவதைகளை யும், பிரம்மா, மற்றும் தேவர்களின் சிற்பங்களையும் அமைக்க வேண்டும். அதற்கு மேல் நிலைகளில் ஆகமம் கூறும் இடங்களில் சைவம் அல்லது வைணவ புராணச் சிற்பங்களை அமைக்க வேண்டும். ஒவ்வொரு நிலை வாயிலிலும் வாயிற் காவலர்களை யும் கோபுரம் தாங்கச் சிற்பங்களையும் அமைக்கவேண்டும்.

### கோபுர வேறுபாடு சைவம்-வைணம்

வைணவ ஆலயக் கோபுரங்களுக்கும், சைவ ஆலயக் கோபுரங்களுக்கும் இடையே சில வேறுபாடுகள் காணப்

படுகின்றன. வைணவ ஆலயக் கோபுர நிலைகளின் மேற் புறத்தில் கருடன் சிற்பமும், யானையும் இருக்கும். அதோடு இக்கோயில் நிலைகளில் அமைந்த சிற்பங்களின் முகத்தோற்றம் அமைதியாகவும், கருணையுள்ளம் கொண்டதாகவும் கண்மலர் முழுவதும் திறந்த நிலையிலும் அமைந்திருக்கும்.

சைவக்கோயில் கோபுர நிலைகளில் மேற்புறத்தில் நந்தியும் மயிலும் அமைக்கப்பெற்றிருக்கும். சிற்பங்களின் முகத்தோற்றம் வீரமுடையதாகவும், கன்னம் எடுப்பாகவும், கண்மலர் பாதி திறந்த நிலையிலும் அமைந்திருக்கும்.

கோபுரத்தில் அமைக்கப்பெறும் நிலைகளின் எண்ணிக்கை எல்லா ஆகமங்களிலும் சமமாகக் கூறப்பட்டுள்ளது.

## 2-4-3 நாராயணவனத் திருக்கோயில் கோபுர அமைப்பு

நாராயணவனத்தில் அமைந்த இராசகோபுரம் ஏழுநிலை களால் கட்டப்பெற்றதாகும். கோபுரத்தின் மேல்நிலையில் ஒன்பது கலசங்கள் வைக்கப்பெற்றுள்ளன. அவை செம்பினால் செய்யப்பெற்றுத் தங்க முலாம் பூசப்பெற்றவை. ஒவ்வொரு கலசமும் ஆறடி உயரமும், மூன்றடி விட்டமும் கொண்டுள்ளது. 1981ஆம் ஆண்டு அவற்றைத் திருமலை திருப்பதி தேவத் தானத்தார் வைத்தனர்.

இக்கோயில் மூன்று நிலைகளில் வளர்ச்சியடைந்தது. கடைசி நிலையில்தான் இராசகோபுரம் கட்டப்பெற்றது. இக் கோபுரம் 1500ஆம் ஆண்டிலிருந்து 1540க்குள் கட்டப்பட்டது என்று கல்வெட்டின் வழி அறியலாம்''.[37]

''இக்கோபுரம் கிருட்டிண தேவராயர் காலத்தில் கட்டப் பட்டுள்ளதாக அவரின் கல்வெட்டின்மூலம் தெரிகிறது. கருங்கல்லில் அவ்வரசரின் சின்னமான பன்றியும் அதனருகில் அரசு வாளும் பொறிக்கப்பட்டுள்ளன".[38]

"இவருக்குப் பின்வந்த யாதவ மன்னர்கள் இக் கோயில் கோபுரத்தைச் செம்மையாக்கினர். இக்கோயில் கோபுரக் குடமுழுக்கு விழாநடந்தகாலத்தில் கோயில் நிர்வாகத் தினருக்கும் கோயில் (ஊழியர்கள்) பணியாளர்களுக்கும் மன்னர்கள் பாராட்டு இதழ்களையும், பரிசுகளையும் வழங்கி யுள்ளனர்".[39]

"கார்வேட்டி நகர மன்னர்களின் ஆட்சி எல்லைக்குட்பட்டு இந் நாராயணவனம் கோயில் அமைந்திருந்தது. இம்மன்னர்கள் காலத்தில்தான் பல திருப்பணிகளும் நடந்தன. பல திருவிழாக் களும் நடந்தன''[40]

1967ஆம் ஆண்டு திருப்பதி தேவத்தானம் இக்கோயிலைத் தம் நிர்வாகத்திற்கு உட்படுத்திக்கொண்டது. தேவத்தானத் தார் இக்கோபுரத்தை 1981ஆம் ஆண்டு செம்மையாக்கினர். இக்கோயில் கோபுரத்தின் மேல் அமைந்த செம்புக் கலசத் திற்குத் தங்க முலாம் பூசியவர்கள் இவர்களேயாவர்.

பின் 1981ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் முதல் நாள் குடமுழுக்கு விழா தேவத்தான நிர்வாகத்தாரால் சிறப்பாக நடத்தப்பெற்றது. (புதுக்கல்வெட்டு ஆங்கிலத்தில் உள்ளது.)

இக்கோபுரத்தில் ஏழுநிலைகள் அமைந்துள்ளன. இவ்வேழு நிலைகளிலும் நான்கு பக்கங்களின் மாடங்களிலும் தெய்வ உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இராசகோபுரத்தினுள் சென்று இடது பக்கமாகத் திரும்பினால் பெரிய திருச்சுற்று ஒன்று அமைந்துள்ளது. இதனை வசந்தத்—திருச்சுற்று என்றும் மலர்த்தோட்டத் திருச்சுற்று என்றும் அழைப்பர்.

கோபுரத்தின் உள் வாயிலிலிருந்து இடது புறமாகச் சென்றால் திருச்சுற்றின் துவக்கத்திலேயே ஒருமாமரமும், அதன் அருகில் பாதிரி மரமும் உள்ளன. மேலும் வாழை மரங்களும், அலரி, சம்பங்கி, சாமந்தி ஆகிய மலர்ச் செடிகளும் வளர்க்கப் பெற்றிருக்கின்றன.

மேற்கிலிருந்து கிழக்காக வலம் வரும் இடங்களில் மல்லிகைத் தோட்டமும் அமைந்துள்ளது. அங்கு அலரி, துளசி ஆகிய செடிகளும் வளர்க்கப்பெறுகின்றன. இவை தவிர மகிழம்பூ மரம் ஒன்றும் நடப்பெற்றுள்ளது. இம் மகிழமரத்தின் மலர்களைக் கொய்து பெண் மெய்யன்பர்கள் பத்மாவதித் தாயாருக்கு மாலைகளாகக் கட்டிக் கொடுப்பர். இம்மலர் உலர்ந்தாலும் மணம் தரும்.

**2-1-4 பலிபீடம்**

கோயிலின் உள்ளே செல்வதற்குமுன் பெரிய பலிபீடமும், அதன்முன் பிரம்மா, இந்திரன் முதலானோர்கள் அமைந்த

பலிபீடமும் சிறிய ஏழு பலிபீடங்களும் அமைக்கப்பட்டுள்ளன. மற்றும் உள்திருச்சுற்றில் எட்டுத் திசை தேவர்களுக்கு எட்டுச் சிறிய பலிபீடங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இறைவனுக்குப் படையல் ஆனவுடன் இப் பலிபீடங்களுக்கு வெறுஞ்சோற்றுடன் மலர், புதிய நீர் முதலியவற்றுடன் பலி சாய்ப்பர். இதைச் சாத்விக பலி என்பர்.

கிராம தேவதைகளுக்கு விலங்குகளைப் பலியிடும் முறை சாத்தேயம் என்னும் ஆகமத்தில் கூறப்பட்டுள்ளது.

ஆனால் வைணவ, சைவ முறைகளில் சாத்விக முறையில் இறைவனை வழிபடுவதால் சைவப்படையலையே படைக் கின்றனர். இப்பலி பீடங்கள் கருங்கல்லினால் அமைக்கப்பட வேண்டும். நாராயணவனத்திலும் அவ்வாறே அமைக்கப் பட்டுள்ளது. பெரிய பலிபீடம் ஆறடி உயரத்தில் அமைக்கப் பட்டுள்ளது. சிறிய பரிவார பலி பீடங்கள் இரண்டடி உயரத் தில் அமைக்கப்பட்டுள்ளன.

"இராச கோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றதும் நம் காட்சியில் விழுவது பலிபீடம். அதனருகில் சென்று வீழ்ந்து வணங்குதல் மரபு. வீழ்ந்து வணங்கும்பொழுது மனிதன் தன் கீழான இயல்புகளையெல்லாம் அந்த இடத்தில் பலி கொடுக்க வேண்டும். இனி அவை தலையெடுப்பதற்குச் சந்தர்ப்பம் இல்லையென்று ஆழ்ந்து எண்ணுதல் வேண்டும். மேன்மையும் மேலான எண்ணமும் எஞ்சியுள்ளன என்னும் எண்ணத்துடன் எழுந்திருத்தல் வேண்டும்"[41] என்பர்.

### 2-4-5 கொடிமரம்

பெரிய பலிபீடத்திற்குப்பின் கொடி மரம் அமைந்துள்ளது. இக் கொடிமரம் மூலவர் விமானத்தின்மேல் உள்ள கலசத்திற்கு சமமாக கொடிமரத்தின் உச்சியில் கலசத்தை அமைக்க வேண்டும். இவ்வாறே இத் திருத்தலத்திலும் அமைக்கப் பட்டுள்ளது.

இக் கொடிமரம் சுமார் 60 அடி உயரத்தால் ஆனது. கொடி மரத்தைச் சாதாரணமாகக் கருங்காலி, தேக்கு, சிவப்புச் சந்தனம் ஆகிய மரங்களால் அமைக்கவேண்டும் என்பர். இக் கோயிலிலுள்ள கொடிமரமும் தேக்கு மரத்தால் செய்யப் பட்டுள்ளது.

கொடி மரத்தை அமைக்கும்போது மரத்தின்கீழ் நவதானியங்கள், நவரத்தினங்கள், உலோகங்கள் முதலியவை புதைக்கப்படவேண்டும். நாராயணவனம் கோயிலில் உள்ள கொடிமரத்தின்கீழ் இவை புதைக்கப்பட்டுள்ளன என்பர். இக் கொடி மரத்திற்குச் செம்பாலான கலசங்கள் அமைக்கப் பட்டுள்ளன.

கொடி மரத்திற்குக் கருங்கல்லினாலான பீடம் அமைக்கப் பட்டுள்ளது. பீடத்தின்மேல் அமைந்துள்ள கொடி மரப் பகுதி சதுர வடிவத்தில் உள்ளது. கொடிமரத்தின் கிழக்கில் ஆஞ்சநேயர் உருவமும், தெற்கில் சக்கரமும், மேற்கில் கருடனும், வடக்கிப் சங்கும் பொறிக்கப்பட்டுள்ளன.

பெருந் திருவிழாக்காலங்களில் கொடியேற்றும் சமயத்தில் கருடனுக்கு மட்டும் திருமுழுக்குச் செய்யப்பெற்று புத்தாடை யும், மலர்மாலையும் அணிவிக்கப்பெற்று காப்பும் கட்டப் படுகிறது.

கொடி மரத்தின் உச்சியில் மூன்று தட்டுகள் கொண்ட சட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அதில் 16 மணிகள் அமைந் துள்ளன. மேல் தட்டில் 3 கலசங்கள் அமைக்கப்பட்டுள்ளன. கொடிமரம் கீழ்த்திசை நோக்கியிருக்கும்.

திருவிழாவின்போது அங்குரார்ப்பணம் செய்வித்த மறுநாள் காலை வைணவ ஆலயத்தில் கருடனும், சிவாலயத்தில் நந்தியும் முருகர் ஆலயத்தில் மயிலும் கொடித்துணியில் வரையப்பெற்று அவற்றிற்கு மாலை, சந்தனம், மஞ்சளரிசி, குங்குமம் ஆகியவை அணிவிக்கப்பெற்று தூபதீப ஆராதனைகளுடன் கொடியேற்றப் பெறும். இந் நிகழ்ச்சிக்குக் கொடியேற்றம் என்று பெயர். புதிய கொடி மரம் 1976ஆம் ஆண்டு நிறுவப்பட்டது.

அக் கொடியிலுள்ள உருவங்கள் திருவிழாவின் கடவுள் செயல்களைச் செய்வதற்குச் சேவகர்களாகச் செயல் புரிவதாக ஆகமம் கூறுகிறது.

## 2-4 6 இரண்டாவது கோபுரம்

கொடி மரத்தைக் கடந்து உள்ளே சென்றால் மேற்கில் கருடாழ்வார் சந்நிதி (சிற்றாலயம்) அமைக்கப்பெற்றுள்ளதைக் காணலாம். இச் சிற்றாலயத்திற்குமேல் மண்டபமும் அமைந் துள்ளது. இம் மண்டபத்தின் அருகில் இரண்டாவது கோபுரம்

மூன்று நிலைகளைப்பெற்று அமைந்துள்ளது. இக் கோபுரத்தின் மேல் தங்க முலாம் பூசப்பெற்ற ஐந்து கலசங்கள் வைக்கப் பெற்றுள்ளன.

கோபுரத்தின் கிழக்கில் மூன்று நிலைகளிலும் கடவுளின் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

தெற்கில் கீழ் நிலையில் திருமகள், நரசிம்மர், பிரம்மா, வாமனர், உலகளந்த பெருமாள் ஆகியோர் உருவங்களுடன் இரண்டு உக்கிர நரசிம்மர் உருவங்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

இக் கோபுர நுழைவு வாயிலின்கீழ் மண்டபத்தில் பூசை நேரங்களில் இசை முழங்கப்பெறும். மேலும் இக் கோபுரத்தின் கீழ் இரு பக்கங்களிலும் அமைந்த அறைகளுள் இடப்பக்கமுள்ள அறையில் மின்சாரம், இசைத்தட்டுக்கருவிகள், ஒலி, ஒளி அமைப்புக்கருவிகள் ஆகியன வைக்கப்பெற்றுள்ளன. வலப் புறமுள்ள அறையில் கோயிலுக்குரிய பழைய பொருட்கள் வைக்கப்பெற்றுள்ளன.

இக் கோபுரம் 12ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த மட்ல பேரரசர் வழிமுறையில் வந்தவர்களால் புதுப்பிக்கப்பெற்றதாக இங்குள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது''.[42]

இவர்கள் பெயரைக் கொண்ட ''மட்ல வீதி'' என்னும் தெரு கோயிலுக்குப் பின்புறத்தில் அமைந்துள்ளது.

தற்போதுள்ள உயர்நிலைப் பள்ளியில்தான் அம் மன்னர் களின் கோட்டை அமைந்திருந்ததாகக் கூறப்படுகிறது".[43] இதற்குச் சான்று அவர்களின் காலத்துக் கட்டப்பட்ட கட்டடங்களேயாகும். அவை மண்ணில் புதைந்துள்ளன.

இரண்டாவது கோபுரம் வழியாக உள்ளே சென்றால் மகாமண்டபத்தை அடையலாம். இம் மண்டபம் 16 தூண்களால் அமைந்துள்ளது.

இம் மகாமண்டபத்தின் நடுவில் இறைவன் சந்நிதிக்கு எதிரில் உற்சவ தரை பீடம் அமைந்துள்ளது. கூரையின் உட்பகுதியில் ஊஞ்சல் பொருத்துவதற்காக இரும்பு வளையங்கள் பொருத்தப்பட்டுள்ளன. இம் மண்டபத்தில் தேவத்தானத்தார் உண்டியல் ஒன்று வைத்துள்ளனர். இறைவனுக்கு நடைபெறும் அனைத்துத் திருவிழாக்களிலும்,

உற்சவ பீடத்தின் மீது கேடயத்தை வைத்து உற்சவரை அழகு செய்து எழுந்தருளச் செய்வர். உற்சவர் இம் மண்டபத்திலிருந்து தான் புறப்படுவார்.

வெள்ளியன்று நடைபெறும் தாயாரின் உற்சவத்தின்போது இம் மண்டபத்தில் மூலவருக்கு எதிரில் தாயாரை நிற்கச் செய்வர். பின் அவரைப் புதிய நீரால் திருமுழுக்குச் செய்து மலர்மாலை அணிவித்துத் தீபம் வழிபாடு காட்டுவர்.

இம் மண்டபத்திலிருந்து இடது புறமாக வந்தால் தென் கிழக்கில் வரதராசப் பெருமாள் சிற்றலாயம் உள்ளது. இவரது சிலை பீடத்துடன் சேர்ந்து ஏழடி உயரம் உள்ளது. இவர் நல்ல சிற்பக் கலையுடனும் முகப்பொலிவுடனும் காட்சியளிக்கிறார். இவருக்கு ஒரு நாளைக்கு இரண்டு முறை படையல் படைப்பர். இரண்டு முறை பூசையும் நிகழ்த்துவர்.

இச் சிற்றாலயத்தையொட்டி இறைவன் படையலுக்காக உணவுசமைக்கப்பெறும் இடமான மடப்பள்ளி அமைந்துள்ளது. இம் மடப்பள்ளியின் வாயில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. இதனுள்ளே சென்றால் இடப்புறமாகக் கிணறு ஒன்றுள்ளது. இக்கிணற்று நீரைத்தான் இறைவனின் திருமுழுக்கிற்கும் புனித நீருக்கும் படையல் செய்யவும் பயன்படுத்துவர்.

இக் கிணற்றைக் கடந்து உள்ளே சென்றால் முன் அறையில் பாத்திரங்கள் உள்ளன. அதைக் கடந்து சென்றால் பெரிய மண்டபம் உள்ளது. அம் மண்டபத்தின் நடுவில் சமையல் செய்யப்பெற்ற உணவுப் பொருட்களை வைக்கும் மேடை ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

இம் மண்டபத்தின் வடமேற்கில் மடப்பள்ளி நாச்சியார் என்றழைக்கப்பெறும் திருமகள், சிலை வடிவமாக எழுந்தருளி உள்ளார். இவருக்கு நாள்தோறும் மூன்று வேளையும் பூசை செய்து படையல் படைப்பர். கோயிலில் இறைவனுக்காகச் செய்யப்பெறும் படையலை மடப்பள்ளி நாச்சியார் முன்னின்று செய்து படைப்பதாக ஆகமம் கூறுகிறது.

இறைவனுக்குப் படைக்கப் பெறும் படையலுக்குத் தேவையான உணவுப் பொருட்கள் திருமலை, திருப்பதி தேவத் தானத்தாரால் திங்களுக்கொருமுறை வழங்கப்பெறுகின்றது.

## 2-5 கருவறை

மடப்பள்ளியிலிருந்து வந்தபின்னும் இறைவனின் அருள் பெறும் முன்னும் விமான வலம் செய்யவேண்டும். மறுபடியும் மகா மண்டபத்திற்கு வர வேண்டும். அங்கிருந்து கருவறைக்குச் செல்வதற்கு அமைக்கப்பெற்றுள்ள படிகளில் ஏறிச் சென்றால் முகமண்டபத்தை அடையலாம். இம் முக மண்டபத்தில்தான் உற்சவமூர்த்திகளுக்குத் திருமுழுக்குகள் நடத்தப்பெறுகின்றன. கருவறைக்குப் போகும் வழியிலுள்ள இம்மண்டபத்தில் இரண்டு வாயிற் காவலர்கள் நின்றவண்ணமிருப்பர்.

இடது புறத்தில் அமைந்துள்ள வாயிற் காவலரின் அருகில் உபயநாச்சியார்களுடன் அமைந்த பிரசன்ன பெருமாள் மூன்றடி உயரத்தில் சிலைவடிவில் எழுந்தருளியுள்ளார்.

வாயிற் காவலரை அடுத்துள்ள அந்தராளம், கருவறை மூலவரின் விமானம் ஆகியன ஆகாசமகாராசாவால் கட்டப் பெற்றதாகும். அக் காலத்தில் ஆகாசராசாவால் கட்டப்பெற்ற பகுதி வாயிற் காவலர்கள் நின்றிருக்கும் இடம் வரையேயாம் என்பர்."[44]

வாயிற் காவலர்களின் அனுமதி பெற்றே முறைப்படி கருவறையிலுள்ள மூலவரிடம் செல்ல வேண்டும். அப்படிச் செல்லும்போது அங்கு அந்தராளம் உள்ளது. இது கருவறைக்கு முன் உள்ள இடமாகும்.

"அந்தரத்தில் (மனதில்) இறைவனை வேண்டி அந்த இடத்தில் மெய்யன்பர்கள் நின்றுக் கொண்டிருப்பதால் அந்தராளம் எனப் பெயர் பெற்றது"[45] என்பர்.

இப்பகுதியையடுத்துள்ள அறைதான் கருவறையாகும். இக் கருவறைக்கு மெய்யன்பர்கள் யாரும் செல்லக்கூடாது.

கருவறையை ஆகமம் கூறியபடிதான் அமைக்க வேண்டும். சக்தி கோயில்களில் உள்ள கருவறையை நீண்ட சதுர வடிவத்தில் அமைக்கவேண்டும். சிவன் கோயில்களில் சதுர வடிவத்தில் அமைத்து மூலவரை நடுப்பகுதிக்கு முன் வைப்பர். வைணவ ஆலய கருவறை சதுர வடிவில் அமைந்திருக்கும். அறையின் நடுவில் மூலவரை வைப்பர். இவ்வாலயங்களில் "பள்ளி" கொண்டுள்ள மூலவரானால் நீண்ட சதுரத்தில் அமைப்பர்.

"கருவறை அல்லது கர்ப்பக்கிருகம் ஆலயத்தின் மற்றைய பகுதிகளைவிட மிகச் சிறியதாகவும், ஒரே ஒரு வாயிலை மட்டும் உடையதாகவும் இருத்தல் வேண்டும். கர்ப்பக் கிருகத்திற்கு முன்பக்கம் அமைக்கப்படுவது அர்த்த மண்டபம். இதற்கு இரண்டு வாயில்கள் உள. இது கர்ப்பக்கிருகத்தை விடச் சற்று விசாலமானதாகும். இங்கு நின்றே அர்ச்சகர் தீபம் ஏற்றி தீபாராதனை செய்வார். மெய்யன்பர்கள் அர்த்த மண்டபத்திற்கு வெளியே நின்று தரிசனம் செய்வர்."[16] கருவறையில் எந்த மூர்த்தி அமைக்கப்பட்டுள்ளதோ அம் மூர்த்திகளின் சக்திக்கு ஏற்ப சக்தியை நிறுவுவதற்குத் தகுந்தபடி சில விமானங்கள் எட்டு கோணங்களிலும் இன்னும் சில ஆறு கோணங்களிலும் அமைக்கப்பெறும். சில விமானங்கள் அந்தந்த மூர்த்திகளின் குணத்திற்குகந்தவாறு (சாத்வீக) அமைதியான முறையில் அமைக்கப்பெற்றிருக்கும். பெரும் பாலான விமானங்கள் தாமரை மலர் வடிவத்தில் அமைக்கப் பட்டுள்ளன. அடியிற் கண்ட தலங்களில் அமைந்துள்ள விமானங்கள் பல்வேறு வடிவத்தில் உள்ளன.

1. திருவரங்கம்—இரங்க விமானம்
2. திருக்கோட்டியூர்—அட்டாங்க விமானம்
3. திருவில்லிப்புத்தூர்—விமலா குருதி விமானம்
4. தஞ்சை பெரியகோயில்—தென் திசை மேரு விமானம்
5. திருவல்லிக்கேணி—ஆனந்த விமானம்

நாராயணவனத்திலும் திருமலையிலும் ஆனந்த நிலைய விமானம் அமைந்துள்ளது. இவ் விமானம் அமைதியைக் கொடுக்கும் தன்மையைப் பெற்றுள்ளது.

இவ் விமானம் மூன்று நிலைகளைக் கொண்டுள்ளன. ஒவ்வொரு நிலையிலும் நான்கு புறங்களிலும் நான்கு சிங்கங்கள் அமர்ந்து காவல் காக்கும் நிலையில் அமைக்கப்பெற்றுள்ளன. இவ் விமானத்தில் இறைவனின் பல்வேறு உருவங்களைக் கொண்ட சிற்பங்களும், இயற்கைக் காட்சிகளைக் கொண்டுள்ள சிற்பங்களும் அமைக்கப்பெற்றுள்ளன.

இக்கோயிலின் கருவறை 12 அடி சதுர அளவில் அமைக்கப் பெற்றுள்ளது. பீடத்தின் மேல் ஏழடி உயரமுள்ள மூலவர் நான்கு கைகளுடன் எழுந்தருளியுள்ளார். அவரது இடது தோளில் சங்கும் வலது தோளில் சக்கரமும் விளங்குகின்றன.

மேலும் இடது கையை அருள் தரும்நிலையிலும் வலக்கையைத் தொடை மீதும் வைத்துள்ளார். இடுப்பின் இடது புறத்தில் ஒரு சிறிய கத்தி செருகப்பட்டுள்ளது. மார்பில் திருமகளின் திருவுருவத்தைப் பெற்றுள்ளார். மற்றும் முடி, காதணிகள், மணிகள், முப்புரி நூல், ஆடை அணிகலன்கள் ஆகியவை இறைவனின் உடலில் அணிந்துள்ளவாறு கற்சிலை வடிக்கப்பெற்றுள்ளது.




**ஆனந்த நிலைய விமானம் விளக்கம்**

ஒவ்வொரு திருத்தலத்திலும் ஒவ்வொரு அமைப்பிலான விமானங்கள் உள்ளன. அத் திருத்தலங்களின் திருவுருவங் களையும் அவற்றின் தன்மையைப் பொருத்தும் கட்டப்பெற வேண்டும். திருமலையிலும், நாராயணவனத்திலும் ஒரே பெயரில் அமைந்த மூர்த்தி உள்ளதால் அத் திருத்தலங்களிலும் ஆனந்த நிலைய விமானம் அமைக்கப்பெற்றுள்ளது.

"ஆனந்த நிலைய விமான அமைப்பு மூன்று நிலைகளில் சதுர வடிவில் அமையும். மூன்றாவது நிலையின் மேல் எட்டு முகங்களாகக் கழுத்து போன்ற உருவம் அமைத்து அதன் உச்சியில் கலசம் அமைக்கவேண்டும்.

இவ்விமானத்தின் நான்கு பக்கங்களிலும் ஒவ்வொரு நிலையின் நடுவிலும் சிறிய விமான மாடமும் அதன் நடுவில்

திருமாலின் திருக்கோலங்களும் இருக்கவேண்டும். அம் மாடங்களின் இருபுறமும் சிறிய மாடமும் அதன் நடுவில் முனிவர்கள் பக்தி நிலையில் நின்றும் அமர்ந்தும் எழுந்தருளி யிருப்பர்.

மூன்றாவது நிலையின்மேல் நான்கு புறமும் எட்டுச் சிங்கங்கள் படுத்த நிலையில் காவல் காக்கும் தன்மையுடன் அமைக்கவேண்டும் என்று கூறப்பெறுகிறது."[47]

## 2-6 பள்ளியறை

பொதுவாக எல்லாக் கோயில்களிலும் ஐந்து கால பூசைகள் முடிந்தவுடன் நள்ளிரவுப் பூசையான பள்ளியறை பூசை நடத்தப்பெறுகிறது. இக் கோயிலிலும் அருள்மிகு கல்யாண வெங்கடேச பெருமாளுக்குப் பள்ளியறை பூசை நடத்தப் பெறுகின்றது.

சைவக்கோயில்களில் பள்ளியறை என்று தனியாக ஓர் அறை கட்டப்பெற்றிருக்கும். ஆனால் வைணவ கோயில்களில் மட்டும் கருவறைக்கு முன் உள்ள அந்தராளத்தில் பள்ளியறைக் குரிய வசதிகள் அமைக்கப்பெற்று அங்கேயே பள்ளியறை பூசை நடத்தப்பெறுகின்றது.

மூலவருக்குச் செய்யப்பெறும் பூசைகளும் படையல்களும் மூர்த்திக்கும் செய்யப்பெறுகின்றன.

மூலவருக்கும் பதிலாக மூலவரின் முழுச் சக்தியையும் கொண்டுள்ள போக சீனிவாச மூர்த்திக்குப் பள்ளியறை வழிபாடு நடத்தப்பெறுகிறது. இவர் அந்தராளத்தை கடந்து வரக் கூடாது என்பதால் இவருக்கு அங்கேயே அனைத்து வசதி களுடனும் பள்ளியறை பூசை நடத்தப்பெறுகின்றது.

## 2-7-0 திருக்கோயில் திருமண்டபங்கள்

இத் திருக்கோயிலில் பல மண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. அவை பல்வேறு பணிகளுக்காகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

மூலக் கோயிலைக் கட்டிய பிறகு துணைக்கட்டடங்களான அர்த்த மண்டபம், மகா மண்டபம், நூறு தூண் மண்டபம், ஆயிரம் தூண் மண்டபம் முதலியவைகள் அமைக்கப்பட வேண்டும்.

### 7-2-1 ஊர்தித் திருமண்டபம்

நுழைவு வாயிலுக்குச் சற்று உள்ளே இடது பக்கத்தில் வடக்குநோக்கியவாறு ஊர்தி மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. இம் மண்டபத்தை மட்ல மரபு வழியாக வந்த சிற்றரசர்கள் கட்டியுள்ளனர்.

இம் மண்டபம் 25 அடி அகலமும் 30 அடி நீளமும் கொண்டுள்ளது. இதற்கு வெளியில் நான்கு தூண்களும் உள்ளே நான்கு தூண்களும், அமைக்கப்பட்டுள்ளன. இவ்வெட்டுத் தூண்களிலும் அழகிய சிற்பங்கள் செதுக்கப்பெற்றுள்ளன.

மண்டபத்தின் நுழைவு வாயிலில் இரண்டு கற்றூண்களின் மேல் சிங்கத்தின் கற்சிலைகள் அமர்ந்த நிலையில் வைக்கப் பெற்றுள்ளன. சிங்கங்களின் மேல் மனிதர்கள் அமர்ந்து அவற்றை அடக்கும் நிலையில் காட்சியளிக்கின்றனர். இம் மண்டபத்தின்மேல் தற்போது சிமெண்டால் சித்திர வேலைபாடு கள் பல செய்யப்பட்டுள்ளன. மண்டபத்தின் மேல் நடுவில் கருடசேவையும், அதன் வலது புறம் வெண்குதிரை அவதார மும், இடதுபுறம் நரசிம்ம அவதாரமும் நின்ற நிலையில் அமைக்கப்பட்டுள்ளன.

இம்மூன்று சிற்பங்களுக்கு இரு புறங்களிலும் கருடனின் சிலைகள் கைகூப்பிய நிலையில் அமைக்கப்பெற்றுள்ளன. இதே வரிசையில் வலது மூலையில் கருடனும், அதற்கு முன் பக்கம் உபயநாச்சியார்கள், சீனிவாசர் ஆகியோரும் காட்சி யளிக்கின்றனர். இடது முனையில் கருடனும் அதற்கு முன் வைகுண்டநாதன் அமர்ந்த நிலையிலும் உபய நாச்சியார் களுடன் காட்சியளிக்கின்றனர்.

இம்மண்டபத்தினுள் இடையில் ஒரு கல் வாயிற்படி அமைக்கப்பட்டுள்ளது. இவ்வாயிற்படியை முன்பு அரசாண்ட மன்னர்களும் பின்பு வந்த காடுவெட்டி நகர மரபு வழி அரசர் களும் பயன்படுத்திவந்தனர்.

இளவரசிகள் சாரட்டு வண்டியில் வந்து கோயிலுக்குச் செல்லத் தெற்குமாட வீதியில் இம்மண்டபத்திற்குத் தனிவழி இருந்தது. இவர்கள் இவ்வழியாகக் கோயிலுக்குள் சென்று இறைவனை வழிபட்டுப் பின்பு இதே வழியில் திரும்பிச் செல்வர்.

இளவரசியை யாரும் பார்க்கக்கூடாது என்பதற்காக இச் சிறப்புத் தனி வழி அமைக்கப்பெற்றது. அர்ச்சகர்களின் மனைவியர் மட்டும் கருவறையில் இருந்து இறைவனை இராணிக்குக் காட்டுவர். இப்பொழுது இவ்வாயில் அடைக்கப் பட்டுள்ளது.

பெருந்திருவிழா காலத்தில் பத்து நாட்களும் வைகுண்ட ஏகாதசி, இரதசப்தமி ஆகிய திருவிழாக்களின்போதும் இவ்வூர்தி மண்டபத்தை, இறைவனை அழகு செய்வதற்குப் பயன்படுத்துகின்றனர். எல்லா ஊர்திகளும் இம் மண்டபத்தில் வைக்கப்பெற்றுள்ளன.

### 2-7-2 ஊஞ்சல் திருமண்டபம்

ஊர்தி மண்டபத்திற்கு நேர் எதிரில் தெற்கு நோக்கி ஊஞ்சல் மண்டபம் ஒன்று அமைந்துள்ளது. இது 25 அடி நீளமும் 15 அடி அகலமும் கொண்டதாகும். இம்மண்டபத் திற்கு முன் வெளியில் நான்கு தூண்களும் உள்ளே ஆறு தூண்களும் நிறுத்தப்பட்டுள்ளன. இம்மண்டபம் கிருட்டிண தேவராயரால் கட்டப்பட்டதாகும்.

மண்டபத்தின் நடுவில் மேற்பகுதியில் ஊஞ்சல் வளையங் கள் பொறுத்தப்பட்டுள்ளன. இம்மண்டபம் பெருந் திருவிழாவின்போது இரவு நேரங்களில் இறைவனை ஊஞ்சாலாட்டப் பயன்படுத்தப்பெறுகிறது.

மண்டபத்தின் மேல்பாகத்தில் சிமெண்டைப் பயன்படுத்தி பல அழகிய சிற்பங்களைச் செய்துள்ளனர். நடுவில் விமானமும் அமைக்கப்பெற்று, அதற்குக் கீழே உபயநாச்சியார்களுடன் பெருமாளும் காட்சித்தருகின்றார்.

இச்சிற்பத்திற்கு இருபுறங்களிலும் விமானமும் விமானத் திற்குக்கீழே வலப்புறம் அநுமனும், இடப்புறம் கருடாழ்வாரும் காட்சிதருகின்றனர். வலது இடது மூலைகளிலும் கருடாழ்வார் அமர்ந்த நிலையில் காட்சியளிக்கின்றார்.

### 2-7-3 கருடாழ்வார் சிற்றாலயத் திருமண்டபம்

கொடி மரத்திற்குப் பக்கத்தில் கருடாழ்வார் சிற்றாலயம் அமைந்துள்ளது. இச்சிற்றாலயத்திற்கு மேல் 12 தூண்கள் கொண்ட கல் மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது.

இம்மண்டபத்தின்முன் கொடிமரம் விளங்குகிறது. கொடிமரத்திற்குப் பின்புறம் வளைந்த சிற்ப வேலைகள் செய்யப் பட்டுள்ளன. இச் சிற்பங்களுள் நடுப்பகுதியில் சீனிவாசர், பத்மாவதித் தாயாருடன் திருமணக்கோலத்தில் அவரது கையைப் பற்றியவண்ணம் நின்ற கோலத்தில் காட்சித் தருகின்றார்.

இவர்களுக்கு இடையில் ஆகாசமகாராசர் தம் மகளைக் கன்னியாதானம் செய்து தரும் முறையில் நின்றுள்ளார். சீனிவாசருக்குப் பக்கத்தில் சிவனும், சிவன் பக்கத்தில் பிரம்மாவும், பிரம்மா பக்கத்தில் சுகமகா முனிவரும் நின்றுள்ளனர்.

இடதுபுறம் பத்மாவதித் த்யாரும் அவரது பக்கத்தில் பார்வதியும், வகுளமகாதேவியும், கலைமகளும், நாரதரும் நின்றுள்ளனர். இவர்களுக்கு இருபுறமும் கீழ்ப்பாகத்தில் திருமண், சங்கு சக்கரம் குறிக்கப்பட்டுள்ளன. இரு மூலைகளில் கருடாழ்வார் அமர்ந்துள்ளார் இம்மண்டபத்தை ஆகாசராசன் கட்டினான் என்பர்.

**2.7-4 மகாமண்டபம்**

இரண்டாவது கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால் இம் மண்டபத்தை அடையலாம். இம் மண்டபம் 16 கற்றூண் களைக் கொண்டு 30 அடி உயரத்தில் உள்ளது. இம் மண்டபத்தில் சீனிவாசருக்கு நடத்தப்பெறும் உற்சவங்களில் அவரை உற்சவ மேடையில் வைப்பர். பின்பு இம் மேடையிலிருந்து உலாவிற்கு எடுத்துச்செல்வர்.

**2 7-5 தாயார் சிற்றாலயத் திருமண்டபம்**

தாயார் சிற்றாலயத்திற்கு முன் இம் மண்டபம் 12 கற்றூண் களால் அமைககப்பெற்றுள்ளது. இம் மண்டபத்தின்கீழ் நடுவில் உற்சவ மேடை அமைந்துள்ளது. மண்டபத்தில் நடுவில் ஊஞ்சல் வளையங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. இம் மண்டபத்தில் வெள்ளிக்கிழமைதோறும் மாலை நேரங்களில் ஊஞ்சல் வழிபாடு நடத்தப்பெறுகிறது. இம் மண்டபம் இரண்டாவது கோபுரம் கட்டியபோது கட்டப்பட்டதாகும்.

**2-7-6 சீனிவாசத் திருமணத்திருமண்டபம்**

இம் மண்டபம் தாயார் சிற்றாலயத்திற்குப் பக்கத்தில் அமைந்துள்ளது. இம்மண்டபம் 25 கற்றூண்களால் கட்டப்

பெற்றுள்ளது. இம் மண்டபத்திற்கு நடுவில் பத்தடி சதுரத்தில் அறை ஒன்றமைந்துள்ளது. இவ்வறையில் பெருந்திருவிழாவின் போது உற்சவ சீனிவாசரை எழுந்தருளச் செய்கின்றனர்.

இவ்வறையில் பெரிய கட்டில் ஒன்றும் கண்ணாடி ஒன்றும் அமைக்கப்பெற்றுள்ளன. இவ்வறைக்குக் கண்ணாடி அறை என்ற பெயருமுண்டு. இவ்வறைக்குமுன் உள்ள மண்டபப் பகுதியில் மெய்யன்பர்கள் திருமணத் திருவிழாவை நடத்துவர்.

**2.7-7 அநுமன் சிற்றாலயத் திருமண்டபம்**

இச் சிற்றாலய மண்டபம் பெரிய கோபுரத்திற்கு எதிரில் கோயில் தெருவின் (சந்நிதித்தெரு) முனையில் அமைந்துள்ளது. இச் சிற்றாலயத்தில் இருப்பது அநுமன் ஆகும். இவர் கோயிலிலுள்ள வெங்கடேசுவர பெருமாளுக்கு நேர் எதிரில் அவரது திருவடிக்குச் சமமாகக் கைகூப்பியவண்ணம் நின்ற நிலையில் உள்ளார். இச் சிலையின் உயரம் 4½ அடியாகும். இவர் பக்த அநுமன் ஆவார். கோயிலில் நடைபெறும் காலை பூசைக்காக இவ்வனுமன் சிற்றாலயத்திலிருந்து புதிய நீரினை மேள இசையுடன், தீவட்டி, குடை ஆகிய உபசாரங்களுடன் அர்ச்சகரின் உதவியாளர் மூலம் எடுத்துச்செல்வர்.

முதன்முதலில் இத் திருமண்டபத்தை ஆகாசராசன் கட்டினான் என்றும் பின் பல மன்னர்கள் திருப்பணி செய்தனர் என்றும் கூறுவர்.

இச் சிற்றாலயத்திலுள்ள பக்த அநுமனின் திருமேனி, பஞ்ச உலோகத்தால் 2½ அடி உயரத்தில் செய்யப்பெற்றது. இவருக்கு அனைத்துப் பூசைகளும், வழிபாடுகளும் செய்து வருகின்றனர். இச் சிற்றாலயத்திற்கு முன் எட்டுத் தூண்கள் கொண்ட மண்டபம் ஒன்றும் உள்ளது.

இம் மண்டபத்தின் மேற்புறத்தின் நடுப்பகுதியில் எட்டு இதழ்கொண்ட தாமரை மலர் மிக அழகாக பொறிக்கப் பட்டுள்ளது. இம் மண்டபத்திலுள்ள தூண்களில் பலவகையான மலர்ச் சிற்பங்கள் செதுக்கப்பெற்றுள்ளன.

மண்டபத்தைக் கடந்து உள்ளே சென்றால் அந்தராளம் உள்ளது. அதையடுத்து கருவறை உள்ளது. இச் சிற்றாலயம் 40 அடி அகலமும் 50 அடி நீளமும் கொண்டு விளங்குகிறது.

இச் சிற்றாலய மண்டபத்தின் முன் மேற்கில் சிமெண்டா லான விமானங்கள் கட்டப்பட்டுள்ளன. இவ்வரிசையின் நடுப் பகுதியில் நின்ற நிலையில் அநுமன் காட்சித் தருகிறார்.

## 2-7-3 வேதாந்த தேசிகர் சிற்றாலயத் திருமண்டபம்

இச் சிற்றாலயம் இராச கோபுரத்திற்கு வெளியே வலது புறத்தில் வடக்கு திசையை நோக்கி அமைந்துள்ளது. இது கருவறைக்கு முன் நீண்ட சதுரத்தில் எட்டு தூண்களால் ஆன பெரிய மண்டபம் ஆகும். கருவறையில் தேசிகர் அமர்ந்த நிலையில் இடது கையில் புத்தகம் ஒன்றையும் வலது கைவிரல்களை ஞான நிலையிலும் வைத்துள்ளார்.

வெங்கடேசுவர சுவாமி கோயில் வடகலை வழிமுறையைப் பின்பற்றி வருவதால் இக் கோயிலில் தேசிகருக்குக் கோயில் அமைத்துப் பூசை செய்யப் பெறுகிறது. தேசிகருக்கு ஐம்பொன்னாலான உலாத் திருமேனிச் (உற்சவர்) செய்யப் பெற்றுள்ளது. இவருக்கு நாள்தோறும் இரண்டு வேளையும் பூசை செய்யப்பெற்று படையல் படைக்கப்பெறுகின்றது.

உலா வரும்போதெல்லாம் பெருமாளை தேசிகர் சிற்றா லயத்திற்கு முன் நேர்எதிரில் நிறுத்துகின்றனர். அப்பொழுது மூர்த்தியிடமிருந்து மலர்மாலை, சடாரி ஆகியவற்றை இச் சிற்றாலயத்திற்குக் கொண்டுவந்து மரியாதைச் செய்வர்.

இச் சிற்றாலயத்தில் மலர்மாலை, சடாரி ஆகியனை திருமறை விற்பன்னர்களுக்குத் தரப்படும்.

இச் சிற்றாலயத்தில் இறைவனுக்கு மரியாதை தந்த பிறகே மெய்யன்பர்கள் தரும் தீபாராதனைத் தட்டுக்களின் ஆரத்தி இறைவனுக்குக் காட்டப்பெறும்.

புரட்டாசித் திங்களில் திருமலையில் வெங்கடேசப் பெருமாளுக்குப் பத்து நாட்கள் பெருந்திருவிழா நடைபெற்று வருகிறது. அப் பத்து நாட்களிலும் இக் கோயிலில் உள்ள தேசிகருக்குத் தேசிகர் சாற்றுமுறை என்னும் திருவிழா நடத்தப் பெறுகின்றது. இத் திருமண்டபத்தை 8ஆம் நூற்றாண்டில் கார்வேடிநகர் மன்னர்கள் கட்டினார்கள் என்பர்.

## 2-7-3 தேர்மண்டபம்

அநுமன் சிற்றாலயத்திற்கு வலது பக்கத்தின் எதிரில் தேர்மண்டபம் அமைந்திருக்கிறது. இம் மண்டபத்திற்கு இடது

புறம் தெற்கு நோக்கியவாறு மண்டபத்திற்குப் பக்கத்தில் தேர், நிறுத்தப்பெற்றுள்ளது.

தேருக்காகப் பயன் படுத்தப்பெறும் துணியாலான பொம்மைகள், தேரை அழகு செய்யும் குதிரைகள், வண்ண ஆடைகள், வடம் முதலியவை இம் மண்டபத்தின் கீழ்ப்பகுதியி லுள்ள மண்டப அறையில் வைக்கப்பட்டிருக்கும்.

இத்தேர் மண்டபத்திற்குத் தென்திசையை நோக்கிப் படிகள் உள்ளன. படியைக் கடந்தால் நான்கு கற்றூண்கள் கொண்ட மண்டபம் ஒன்று உள்ளது. அதன்கீழே உற்சவ மேடை ஒன்றுள்ளது. இவை யாவும் கருங்கற்களால் அமைக்கப் பெற்றவை. இம் மண்டபத்தின்மேல் விமானம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இவ்விமானத்தில் தென்புறம் நரசிம்மரும் மேற்கில் திருமாலும், திருமாலுக்குக் கிழக்கில் உபய நாச்சியாருடன் சீனிவாசப்பெருமாளும், வடக்கில் வராகர் அவதார நிலையிலும், திருமகளும் சிற்பங்களாகக் காட்சி தருகின்றனர். நான்கு மூலைகளிலும் கருடர் கைக்கூப்பிய நிலையில் அமர்ந்துள்ளார். 1856ஆம் ஆண்டு வெங்கடேச ஐயர் என்பவர் மெய்யன்பர்களிடம் பணம் வசூல் செய்து தேர் மண்டபத்தைக் கட்டி, தேரைச் செய்தார் என்று அங்குள்ள கல்வெட்டு கூறுகிறது.

தேர்த்திருவிழா அன்று உற்சவரை இம் மண்டபத்திற்குக் கொண்டுவந்ததும் இம் மண்டபத்தில் இறைவனை எழுந்தருள செய்வர். இங்குப் புண்ணியாவசனம் செய்தபிறகு 'அர்ச்சகருக்கு யாத்ராதானம் தரப்படும். பொதுவாக திருமறை ஓத இசைக் கருவிகள் முழங்க இறைவனை நன்னாளில் தேரில் எழுந்தருளச் செய்வர். இம் மண்டபத்தைத் தேர்த்திருவிழாவன்று மட்டும் பயன்படுத்துவர்.

**2-7-10 பதினாறு தூண் திருமண்டபம்**

இம் மண்டபம் இராச கோபுரத்திற்கு எதிரில் அமைந் துள்ளது. இம் மண்டபத்திற்குத் திரும்புகால் மண்டபம் என்ற பெயரும் உண்டு. கோயிலிலிருந்து புறப்படும் அனைத்துத் திருவீதிவுலாக்களும் இம் மண்டபத்தில் நுழைந்து, பிறகுதான் மாடவீதிவுலா, பெரிய வீதிவுலா ஆகியவற்றிற்குச் செல்லும். உலா முடிந்து கோயிலுக்குத் திரும்பும் முன் இறைவன் திருமேனியை இம் மண்டபத்திற்குக் கொண்டுவருவர்.

இம் மண்டபத்தில் கிருட்டிண ஜெயந்தியன்று உரியடி விழாவும், மரம் ஏறும் விழாவும் நிகழ்த்தப்பெறும்.

இம் மண்டபம் 16 தூண்களைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு தூணிலும் சிற்ப வேலைப்பாடுகள் நிரம்பியுள்ளன. பிணைந்த பாம்பு, மயில், சக்கரம், தாமரை, சங்கு முதலிய சிற்பங்களும் பல்வேறு இயற்கைக் காட்சிகளும் செதுக்கப் பெற்றுள்ளன. இதில் போதிகைக்கொண்ட தூண்களும் சாதாரணமாக அமைக்கப்பெற்றுள்ளன. அடியிலும், மேல் தளத்திலும் நாலு பட்டைகளும் இடையே எட்டுப் பட்டை களும் செதுக்கப்பெற்ற தூண்களும் உள்ளன. சிங்கங்கள் தூண்களைத் தாங்கி நிற்கின்றன. சிங்கம், கலசம், தாடி, கும்பம், பலகை, போதிகைகள் ஆகியவை தூண்களில் அமைந்து உள்ளன.

## 2.7-11 வைகுண்ட ஏகாதசித் திருமண்டபம்

இம் மண்டபம் தேசிகர் சிற்றாலயத்தின் எதிரில் 16 கற்றூண்களைக் கொண்டுள்ளது. மண்டபத்தின் நுழைவு வாயிலின்மேல் சீனிவாசமூர்த்தியின் சிலை பொறிக்கப்பட்டு உள்ளது. மண்டபத்திற்கு வெளியே அலங்கார வளைவுகள் இரண்டு தூண்களுக்குமேல் அமைந்துள்ளன. வளைவில் மூன்று சிறிய விமானங்கள் கட்டப்பட்டுள்ளன. அவற்றின் நடுவில் வைகுண்ட நாதர் சங்கு சக்கரத்துடனும் அருள்தரும் கைகளுடனும் அமர்ந்த நிலையில் உபய நாச்சியார்கள் ஆகியோருடன் காட்சியளிக்கிறார்.

இம் மண்டபத்தை ஆண்டிற்கு ஒருமுறை பயன்படுத்துவர். ஏகாதசியன்றும் துவாதசியன்றும் உற்சவரை இம் மண்டபத்தில் எழுந்தருளச் செய்வர். பின்பு திருவீதி உலா இம் மண்டபத் திலிருந்து புறப்படும்.

## 2-7-12 தெப்பக்குள நீராட்டுத் திருமண்டபம்

இத் திருத்தலத்தில் புனித நீர்க்குளம் ஒன்று உள்ளது. இத் திருத்தலத்தில் ஆகாச மகாராசர் பிள்ளைப் பேறு அடைவதற்கு வேள்வி ஒன்றினை நடத்த முனைந்தார். அவ்வேள்விக்குப் புதிய நீர் தேவைப்பட்டதால் குளம் ஒன்றை வெட்டி அக் குளத்திலிருந்து புதிய நீர் கொண்டுவந்து வேள்வியை நடத்தினார். வேள்வி நடத்தும்பொருட்டு நிலத்தை

உழுகின்றபோது ஏர்க்கலப்பையில் பெட்டி ஒன்று சிக்கியது. அப் பெட்டியில் இருந்த தாமரை மலரில் பெண் மகவு ஒன்று இருந்தது. தாமரை மலரில் மகவு கிடைத்ததால் அப் பெண்மகவுக்குப் பத்மாவதி என்று பெயர் சூட்டப்பெற்றது. (வடமொழியில் பத்மம் என்றால் தாமரை) இக் காரணத்தால் இக்குளத்திற்கும் தாமரைக்குளம் என்று பெயர் சூட்டப் பெற்றுள்ளது.

தற்பொழுது இத் திருக்குளப்படிகள் பழுதடைந்துள்ளன என்றாலும் தெப்பத் திருவிழா நடத்தப்பெறுகின்றது. இக் குளம் கோயிலுக்கு மேற்கில் 500 மீட்டர் தூரத்தில் பத்து ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. நடுவில் திருநீராட்டு மண்டபம் ஒன்று அமைந்துள்ளது. இம்மண்டபம் நான்கு கற்றூண்களால் அமைக்கப்பெற்றுள்ளது. விமானங்களும், சிற்பங்களும் பழுதடைந்துள்ளன. மன்னர்கள் காலத்திலும் இக்குளத்தில் தெப்பத் திருவிழா நடத்தப்பட்டதாகக் கூறப் படுகிறது.

இக் குளக்கரையில் மற்றொரு நீராட்டு மண்டபம் உள்ளது. இதுவும் 16 கற்றூண்களால் அமைந்துள்ளது. இம்மண்டபத் தில் மார்கழித் திங்களில் நீராட்டுத் திருவிழா பத்து நாட்கள் நடைபெறும். ஆண்டாள் உற்சவ உலாவும் இம்மண்டபத்திற்குக் கொண்டு செல்வர். இம்மண்டபத்தில் திருக்குள நீரால் ஆண்டாளுக்குத் திருமுழுக்குச் செய்து படையல் படைக்கப் பெறுகிறது. பின்பு இம்மண்டபத்திலிருந்து உலா புறப்பட்டுக் கோயிலை வந்தடையும்.

ஆனால் தற்போது இம்மண்டபங்கள் பழுதடைந்துள்ள மையால் உற்சவ உலா அங்குச் செல்வதில்லை. திருக்குளத்திற்கு திருப்பணிகள் செய்ய வேண்டியிருப்பதால் தெப்போற்சவம் மட்டும் நடைபெற்றுவருகின்றது.

### 2-7-13 கங்கை கொண்டான் திருமண்டபம்

இம்மண்டபம் நாராயணவனத்திற்கு வடமேற்கில் உள்ள சாலியர் வீதியில் அமைந்துள்ளது. இம்மண்டபம் 30×40 அடி நீண்ட சதுரம் கொண்டு விளங்குகிறது. இது கருங்கல்லால் ஆனது. இம்மண்டபத்தில் மன்னர் காலத்தில் பிரசன்ன வெங்கடேசுவரர் உபநாச்சியார்களுடன் எழுந்தருளினாராம்.

அவருக்குப் பூசைகள் நடத்தப்பட்டு வந்தன. பின்பு அம் மூர்த்தியைப் பெரிய கோயிலுக்கு எழுந்தருளச் செய்துள்ளனர்.

பெருந்திருவிழாவின்போது 10 நாட்களில் இரண்டு வேளையும் இறைவன் ஊர்தி உலா இம்மண்டபத்தில் எழுந்தருளச் செய்யப்பெறும். உலா கோயிலிலிருந்து அனைத்து உபசாரங்களுடன் இம்மண்டபத்திற்குக் கொண்டுவரப்பெறும். மண்டபத்தில் கடவுளுக்குப் படையலைப்படைப்பர். பின் இறைவனின் திருமேனியைக் கோயிலுக்கு எடுத்துச் செல்வர். இதேபோன்று இரதசப்தமியன்று ஒருநாள் மட்டும் இம் மண்டபத்தில் உலா சற்று நேரம் இருந்து மரியாதை பெற்றுப் பின் கோயிலைச் சென்றடையும்.

1-3-1981ஆம் ஆண்டு கீழ்கண்ட மண்டபங்களுக்குத் திருப்பணி தேவத்தானத்தாரால் நடத்தப்பெற்றது. 1. பெரிய கோபுரம் 2. இரண்டாவது கோபுரம், 3. தாயார் சந்நிதி விமானம் 4. ஆண்டாள் சந்நிதி முதலியனவாகும்.

## 2-8-0 மூலவர் அமைப்பும் உற்சவ செப்புத் திருமேனிகளும்

மூலவரின் சங்கு சக்கரம் ஆகியவற்றிற்குக் கவசங்கள் அணிவிக்கப்பெற்றுள்ளன. முடி, திருமார்புக் கவசங்கள், திருப்பாதங்கள், ஒட்டியானம் ஆகியவையும் இறைவனுக்கு அணிவிக்கப்பெற்றுள்ளன. இவரது வெள்ளிக் கழுத்தணியின் வலப்புறம் திருமகளின் உருவம் தொங்கிய நிலையில் அமைக்கப் பெற்றுள்ளது.

இறைவனுக்குக் கற்பதித்த திருமண் சாத்தப்பட்டுள்ளது. வேட்டைக்கு வந்தபோது எடுத்துவந்த கத்தியை இடப்புறக் கையில் ஏந்தியவாறு காட்சியளிக்கிறார். இவருக்கு இங்குத் திருமணம் நடைபெற்றதால் திருமணக்கோலத்தின் நினைவாக மஞ்சள்நிற பட்டு வேட்டி இவர் இடுப்பில் எப்போதும் நீங்கா திருக்கும். மூலவருக்குப் பிரபையும் அமைக்கப்பட்டுள்ளது.

வைகாணச ஆகமத்தின்படி இவருக்குப் பஞ்சபேர பூசை நடைபெறவேண்டும் என்பர்.

பஞ்சபேரம் என்றால் ஐந்து மூர்த்திகளை வைத்துப் பூசை செய்தலாகும்.

நாராயணவனத்திலும் இப் பஞ்சபேர பூசை நடைபெறு கிறது. ஐந்து மூர்த்திகளாவோர்,

"1. துருவமூர்த்தி என்றழைக்கப்பெறும் மூலவர்
2. மூலவருக்குப் பாதத்தின் கீழ் உள்ள கௌதிக மூர்த்தி அல்லது போக சீனிவாசர்
3. உற்சவ மூர்த்தி
4. பலிமூர்த்தி
5. ஸ்நபனமூர்த்தி"[48]

## 2.8-1 மூலவர்

கோயிலில் நடக்கும் அனைத்து வழிபாடுகளும், திருவிழாக்களும் இவரை முன்னிட்டுத்தான் நடக்கும். இவருக்கு மூன்று வேளையும் பூசை நடத்தப்பெறும். இவருக்கு அனைத்துப் பூசைகளும் நடைபெற்ற பிறகே மற்றவர்களுக்குப் பூசை நடைபெறும்.

## 2.8-2 போக சீனிவாச மூர்த்தி

வைணவ ஆலயங்களில் நாள்தோறும் மூலவருக்கு திருமுழுக்கு நடைபெறாது. எனவே மூலவருக்குத் நடைபெற வேண்டிய அன்றாடத் திருமுழுக்கு, பள்ளியறைச் சேவை, முதலியவை கௌதிக மூர்த்தி என்றழைக்கப்படும் போக சீனிவாச மூர்த்திக்குத்தான் நடைபெறும்.

இம் மூர்த்தி எப்பொழுதும் மூலவர் திருப்பாதத்தின் கீழ் தான் வீற்றிருப்பார். எக்காரணத்தைக் கொண்டும் வெளியே வரமாட்டார். பள்ளியறைக்குச் செல்லும் முன்பு மூலவரின் சக்தியைக் கௌதிக மூர்த்தியின் மேல் உருவேற்றிக் கொண்டு செல்வர்.

மறுநாள் காலையில் அச்சக்தியை மூலவருக்கு உருவேற்றம் செய்வர். அதனால் மூலவரும் இவரும் ஒரே சக்தியைப். பெற்றுள்ளனர் என்பர்.

## 2.8-3 உற்சவர்

மூலவருக்கு இடப்புறத்தில் உற்சவர் உபயநாச்சியார் களுடன் எழுந்தருளியுள்ளார். இவருக்குத் திங்கள் ஒருமுறை அவர் பிறந்த கோளன்றும், அமாவாசை, முழுமதிநாள், வெள்ளிக்கிழமை, துவாதசி ஆகிய நாட்களிலும் திருமுழுக்கு

நடைபெறும். மேலும் மூன்று வேளையும் பூசை செய்யப் பெற்றுப் படையல் படைக்கப்பெறும்.

### 2-3.4 பலிமூர்த்தி

பஞ்ச உலோகத்தால் செய்யப்பெற்ற மூர்த்தியாவார். இவர் பலி தேவதைகளுக்கெல்லாம் முதன்மையான தேவதை. இவரை முன்னிட்டுத்தான் பலி தேவதைகளுக்குத் திருவமுது படைக்கப்பெறுகிறது.

### 2-3.5 ஸ்நபன மூர்த்தி

இவருக்குக் காலையில் மூலவரின் பூசைக்கு முன்னும் தோமாலை சேவைக்குப் பின்னும் முக மண்டபத்தில் கொலு எனப்படும் பஞ்சாங்க ஸ்ரவணம் நடத்தப்பெறும். இவரை வெள்ளி சிம்மாசனத்தில் அமர்த்துவர். இச் சமயத்தில் இவர் முன்னிலையில் புண்ணியாவசனம் செய்யப்பெற்ற பின்னரே மூலவருக்குத் திருமுழுக்குச் செய்யப்பெறும்.

கொலு நடக்கும் சமயத்தில் இவருக்கு எள்ளுப்பொடியும், யாத்ராதானம் என்றழைக்கப்பெறும் அரிசியும் படைக்கப் பெறும். பின் யாத்ராதான அரிசியை அர்ச்சகருக்கு வழங்குவர்.

பஞ்சாங்க ஸ்ரவணம் என்றழைக்கப்பெறும் அன்றைய ஓரை, கிழமை, கோள், யோகம், கரணம், பலன்கள் முதலியவற்றை இறைவன் முன் படிப்பர். அரசாட்சியில் உள்ளவர்களுக்கும் அவ்வூர் மக்களுக்கும், நலன் தரும் போற்றிகள் செய்வர். பின்பு ஆரத்தி காட்டி அம் மண்டபத் திலிருந்து மூர்த்தியைக் கருவறைக்கு எழுந்தருளச் செய்வர். அதன்பின் மூலவருக்குத் திருமுழுக்கு, படையல் போற்றிகள் முதலியன நடைபெறும்.

இக் கருவறையிலேயே இறைவனுக்கு வலப்புறம் கீழ் பீடத்தில் கண்ணனும், சக்கரத்தாழ்வாரும் பஞ்ச உலோக வடிவத்தில் வீற்றிருக்கிறார்கள். வெள்ளிக்கிழமைதோறும் உற்சவருக்கும் திருமுழுக்கு நடத்தப்படுகிறது.

### 2-3-6 உடையவர்

இறைவன் சந்நிதியிலிருந்து வெளிப்புறமாக வந்தால் முகமண்டபத்தின் இடப்புறத்தில் உடையவர் சிற்றாலயம் அமைந்துள்ளது. இங்கு இவர் மூலவராகவும், உற்சவராகவும்

எழுந்தருளியுள்ளார். இவர் கைகூப்பி வணங்கியவராய் அமர்ந்த நிலையிலுள்ளார். கைக்கிடையில் திரிதண்டத்தை ஏந்தியுள்ளார். தலையில் முடி அணிவிக்கப்பெற்றுள்ளது.

வைகாணச ஆகமத்தில் விகனச முனிவர் இத் திரிதண்டப் பருவ முறையைத் தம் விசிஸ்டாத்வைத சித்தாந்தம் எனும் பகுதியில் குறிபபிட்டுள்ளார்.

இம் முறையைப் பின்பற்றித்தான் இக் கோயிலிலுள்ள உடையவர் திரிதண்டத்தை ஏந்தியபடி காட்சியளிக்கிறார்.

வெளிச் சுற்றிலமைந்த சிற்றாலயங்களில் சரியான பாதுகாப்பு இல்லாத காரணத்தினால் உடையவர் சிற்றாலயத்திலேயே ஆழ்வார்கள் சிலரின் உற்சவ மூர்த்திகளை எழுந்தருள செய்துள்ளனர்.

அவர்கள்

1. திருமங்கையாழ்வார், 2. நம்மாழ்வார்,
3. பெரியாழ்வார், 4. தொண்டரடிப்பொடியாழ்வார்,
5. திருமழிசையாழ்வார் ஆகியோர்.

உடையவர் சிற்றாலயத்திலிருந்து முகமண்டபத்திற்கு வந்தால் அம் மண்டபத்திற்குத் தென்திசையின் வலப்புறமாக வாயில் ஒன்று அமைக்கப்பெற்றுள்ளது. இவ்வாயிலின் வலப்புறத்தில் திருக்கோயிலின் அணிகலன்கள், கலசங்கள். வெள்ளிப் பாத்திரங்கள் ஆகியவற்றை வைத்துப் பாதுகாக்கப் பாதுகாப்பு பெட்டக அறை ஒன்று கட்டப்பெற்றுள்ளது.

## 2-9-0 ஆழ்வார்கள் கல் திருமேனியமைப்பு

ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். அவர்களைப் பெருமாளின் அருட்கடலில் அழுந்தித் திளைத்தவர்கள் என்பர். அவர்கள் 1. பொய்கையாழ்வார், 2. பேயாழ்வார், 3. பூதத்தாழ்வார், 4. திருமழிசையாழ்வார், 5. பெரியாழ்வார், 6. ஆண்டாள் 7. தொண்டரடிபபொடியாழ்வார், 8. குலசேகராழ்வார், 9. திருப்பாணாழ்வார், 10. திருமங்கையாழ்வார், 11. நம்மாழ்வார், 12. மதுரகவியாழ்வார் ஆவர்.

அவர்களைக் குறிப்பிடும்போது இறைவன் திருவருளால் இறைவனிடம் அன்பும், மெய்யுணர்வும், மதிநலமும் அருளப் பெற்றவர்கள் என்பர்.

முதலாழ்வார் மூவர் அவர்கள் 1. பொய்கையாழ்வார், 2. பூதத்தாழ்வார், 3. பேயாழ்வார் ஆகியோர். இம்முறையில் இத் திருக்கோயிலில் இவர்களின் திருமேனிகளை அமைக்க வில்லை.

இத் திருக்கோயிலில் பதினொரு ஆழ்வார்களின் திருமேனிகளை வரிசையாக எழுந்தருளச் செய்துள்ளனர். ஆண்டாள் அம்மையாருக்குத் தனியாக ஒரு சந்நிதி அமைத் துள்ளனர்.

இத் திருக்கோயிலில் ஆழ்வார்கள் எழுந்தருளியுள்ள வரிசை முறைப்படி இங்கு விளக்கப்பெறுகிறது.

## 2-9-1 கூரத்தாழ்வார்

கூரத்தாழ்வார் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரில்லை யென்றாலும் இத் திருக்கோயிலில் அவரைத்தான் முதன்மை யாக எழுந்தருளச் செய்துள்ளனர்.

இவர் ஒரு பீடத்தின் மேல் கைகூப்பியவாறு அமர்ந்த நிலையில் காட்சியளிக்கிறார். இவர் திருமேனியின் உயரம் இரண்டடியாகும். இவர் கூரம் என்ற ஊரில் சதயக் கோளில் தோன்றியவராவார்.

## 2-9-2 மதுரகவியாழ்வார்

இவர் தாளம் வாசிக்கும் நிலையில் அமர்ந்து காட்சியளிக் கிறார். இவர் திருமேனியின் உயரம் (1½) ஒன்றரை அடியாகும். இவர் நெல்லை மாவட்டத்திலுள்ள திருக்கோளூரில் சித்திரைத் திங்களில் சித்திரைக் கோளில் பிறந்தார். திருமால் பக்தியில் சிறந்து நின்ற இப் பெரியார் தலப்பயணம் மேற்கொண்டு நம்மாழ்வாரை வந்தடைந்து உபதேசம் பெற்றார் என்பர். இவர் "கண்ணினுண் சிறுத்தாம்பு" என்னும் பாசுரத்தைப் பாடியருளினார்.

## 2-9-3 திருப்பாணாழ்வார்

இவர் கைகூப்பியவாறு திரிதண்டத்தை ஏந்திய நிலையில் காட்சியளிக்கிறார். இவரின் திருமேனியின் உயரம் ஒன்றரை (1½) அடியாகும். இவர் சோழ நாட்டு உறையூரில் பாணர் வகுப்பில் கார்த்திகைத் திங்களில் உரோகிணிக் கோளில் பிறந்தார். இவர் காவிரிக் கரையில் நின்றவாறு திருவரங்கத்தை

நோக்கித் தொழுதுவந்தாராம். இவர் பிரபந்தத்தில் "அமலனாதி பிரான்" என்னும் பாசுரத்தைப் பாடியருளினார்.

2-9.4 தொண்டரடிப் பொடியாழ்வார்

இவர் கைகூப்பிய நிலையில் எழுந்தருளியுள்ளார். இவரது திருமேனியின் உயரம் இரண்டடியாகும். இவர் திருமண்டங்குடி என்னும் பதியில் மார்கழித் திங்களில் கேட்டயக் கோளில் தோன்றினார். விப்பிரநாராயணன் என்பது இவரது இயற் பெயர். இவர் திருவரங்கத்தில் நந்தவனம் அமைத்து மலர்த் தொண்டு செய்துவந்தவர். தொண்டர்களிடம் கொண்ட பேரன்பால் தன்மையும் "தொண்டரடிப்பொடி" எனப் பிறர் வழங்குமாறு வாழ்ந்தார். இவர் 'திருமாலை', 'திருப்பள்ளி யெழுச்சி' ஆகிய பிரபந்தங்களைப் பாடியுள்ளார்.

2-9-5 பெரியாழ்வார்

பெரியாழ்வார் கைகூப்பிய நிலையில் காட்சியளிக்கிறார். இவரின் திருமேனி ஒன்றரை (1½) அடி உயரமாகும். இவர் திருவில்லிப்புத்தூரில் ஆனித் திங்களில் திருச்சுவாதிக் கோளில் தோன்றினார். இவரது இயற்பெயர் விஷ்ணுசித்தன் என்ப தாகும். இவர் ஆண்டாளின் வளர்ப்புத் தந்தையாவார். திருநந்தனவம் அமைத்து மாலை தொடுத்துப் பெருமாளுக்குச் சூட்டுவதையே தம் கடமையாக எண்ணி வாழ்ந்துவந்தார். பலருக்கும் நிலையான பேரின்பம் தரும் பெருமாளுக்கே "பல்லாண்டு" பாடியமையான் இவரைப் பெரியாழ்வார் என வழங்கலாயினர் என்பர். இவர் 1. திருப்பல்லாண்டு, 2. பெரியாழ்வார் திருமொழி ஆகிய பாசுரங்களைப் பாடி யருளினார்.

2-9-6 குலசேகராழ்வார்

இவர் தலையில் முடியணிந்து கைகூப்பிய நிலையில் தன் கையில் கத்தி ஏந்தியவண்ணம் காட்சியளிக்கிறார். இவர்தம் திருமேனி ஒன்றரை (1½) அடி உயரமாகும். இவர் கொல்லி நகர் என்னும் ஊரில் மாசித் திங்களில் புனர்ப்பூசக் கோளில் சேரர் மரபில் தோன்றினார். குலசேகரன் என்பது இவர் இயற் பெயர். இவர் செந்தமிழ் வடமொழி ஆகிய மொழிகளை நன்குக் கற்று இரு மொழிகளிலும் கவிபாட வல்லவராகத்

திகழ்ந்தார். இவர் திருமாலின்மீது அளவு கடந்த பக்தி செலுத்தி திருமாலை நேரில் கண்டு, அவரிடம் தான் ஏதாவது ஒரு வழியில் அவர் அருகாமையிலேயே இருக்கவேண்டும் என்று வரம் ஒன்று கேட்டதாகக் கூறப்பெறுகிறது.

அப்பொழுது திருமால், குலசேகராழ்வாரின் வேண்டுதலை ஏற்று வைணவத்திருத்தலங்களில் உள்ள கருவறையில் வாயிற் படியிலேயே அவரை இருக்கவைத்தார் என்பர். ஆதலால் அவ் வாயிற்படிக்குக் 'குலசேகராழ்வார்படி'யென்ற பெயரே வழங்கி வருகின்றது. இவ்வாழ்வார் திருமாலின் அருகிலேயே இருந்து வழிபட்டு வருகிறார். இன்றும் வைணவ மெய்யன்பர் அப்படியே வணங்கிவருகின்றனர். இவர் பெருமாள் திருமொழி என்ற பாசுரத்தைப் பாடியருளினார்.

### 2-9-7 திருமழிசையாழ்வார்

திருமழிசையாழ்வார் கொண்டை அமைத்துக்கொண்டு ஜபமாலையுடன் கைகூப்பிய நிலையில் பீடத்தின் மேலமர்ந்து காட்சியளிக்கிறார். இவர்தம் திருமேனியின் உயரம் ஒன்றரை அடியாகும். இவர் காஞ்சிபுரத்தின் அருகேயுள்ள திருமழிசை என்னும் ஊரில் தைத்திங்களில் மகக்கோளில் தோன்றினார். திருமாலின் பக்தராகத் திகழ்ந்தார். பேயாழ்வாரைக் குருவாக ஏற்று பல உண்மை நெறிகளை உணர்ந்தார் என்றும் கூறுவர். இவர் நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் ஆகிய பாசுரங்களைப் பாடியுளளார்.

### 2-9-8 பேயாழ்வார்

இவர் தன் கையில் பசனைக் கட்டையை ஏந்திக் கைகூப்பிய நிலையில் காட்சியளிக்கிறார். இவர் மைலாப்பூரில் ஐப்பசித் திங்களில், சதயக் கோளில் தோன்றினார். இவரின் திருமேனி யின் உயரம் இரண்டடியாகும். இவர் இளமையிலேயே இறை யருளால் கவரப்பட்டு திருமாலின் பெருமையைப் பாடி வரலானார். இவருக்குத் திருமால் காட்சியளித்ததாகக் கூறப் பெறுகிறது. இவர் முதல் திருவந்தாதி, பாசுரங்களைப் பாடியுள்ளார்.

### 2-9-9 பூதத்தாழ்வார்

பூதத்தாழ்வார் கச்சிக்கிடந்தவனூர் என்னும் ஊரில் ஐப்பசித் திங்களில் அவிட்டக் கோளில் பிறந்தார். இவர் ஜப

மாலையுடன கைகூப்பியவண்ணம் ஒரு பீடத்தின்மீது அமர்ந்து காட்சியளிக்கிறார். இவர்தம் திருமேனியின் உயரம் ஒன்றரை அடியாகும். இளமையிலேயே திருமாலிடம் பேரன்பும் பக்தியும் கொண்டு விளங்கினார். திருமாலின்மீது பக்திப் பாடல்களைப் பாடினார். இவர் இரண்டாம் திருவந்தாதியைப் பாடியருளினார்.

## 2-9-10 பொய்கையாழ்வார்

பொய்கையாழ்வார் காஞ்சியில் ஐப்பசித்திங்களில் திருவோணக்கோளில் தோன்றினார். கைகூப்பிய நிலையில் ஒரு பீடத்தின் மேல் அமர்ந்து காட்சியளிக்கிறார். இவர் திருமேனியின் உயரம் ஒன்றரை ($1\frac{1}{2}$) அடியாகத் திகழ்கிறது. இயல்பிலேயே உலகியல் நாட்டமற்றுத் திருமாலிடம் பேரன்பு கொண்டு வாழ்ந்தார் என்றும் கூறுவர். இவர் முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி ஆகிய பாசுரங்களைப் பாடியருளினார்.

## 2-9-11 நம்மாழ்வார்

நம்மாழ்வார் திருக்குருகூர் என்னும் ஊரில் வைகாசித் திங்களில் விசாகைக் கோளில் தோன்றினார். இவர் கொண்டை அணிந்தவராகவும், கையில் ஜபமாலை ஏந்தியவராகவும், இடது உள்ளங்கையை மேல் நோக்கியவாறு வயிற்றில் வைத்துக் கொண்டும் தியானம் செய்கின்ற நிலையிலும் ஒரு பீடத்தின் மேல் அமர்ந்துள்ளார். இவரது திருமேனியின் உயரம் இரண்டடியாகும். இவரது இயற்பெயர் மாறன் என்பதாகும். இவர் இளமையிலிருந்தே திருமாலிடம் நாட்டம் கொண்டு பக்தியினைப் பெற்றுத் திகழ்ந்தார். இளமையிலிருந்தே திருமாலின் மேல் பாடல்கள் பல பாடினார். மதுரகவியாழ்வார் என்பவர் நம்மாழ்வாரைக் குருவாக ஏற்றார்.

பொதுவாக ஆழ்வார்கள் அனைவரும் வைணவர்களால் பாராட்டப்பெறினும், அவர்களுள்ளும் நம்மாழ்வாரே சிறப்பாகப் பாராட்டப்பெறுகிறார். இவர் பெரிய திருவந்தாதி, திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்மொழி ஆகிய பாசுரங் களைப் பாடியருளினார்.

### 2-9-12 திருமங்கையாழ்வார்

திருமங்கையாழ்வார் திருக்குறையலூர் என்னும் ஊரில் கார்த்திகைத் திங்களில் கார்த்திகைக் கோளில் தோன்றினார். இவர் இடது கையில் கேடயமும், வலது கையில் கத்தியும் கொண்டு மகுடம் சூடி நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். இவர் திருமேனியின் உயரம் மூன்றடியாகும். இவர் திருமாலின் மீது அளவு கடந்த பக்தி கொண்டிருந்தார் என்பர். திருமாலின் அடியார்களை வழிபடுவதிலேயே தம் செல்வத்தை எல்லாம் செலவிட்டாராம். இவ்வாழ்வார் திருவரங்கம் பெரிய கோயிலுக்குச் சுற்றுத்திருமதில் எழுப்பியவர் என்பர். இவர் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந் தாண்டகம், பெரிய திருமடல், சிறிய திருமடல், திருவெழுக் கூற்றிருக்கை ஆகிய பாசுரங்களைப் பாடியருளினார்.

## 2-10-0 திருமாலின் திரு அவதாரங்கள்

திருஅவதாரம் என்றால் அறத்தையழித்து அதர்மம் தலைதூக்கும்போது இறைவன் தான் உகந்த வடிவத்திலே கீழ் இறங்கித் தாழ வந்து தீமையை ஒழித்து நன்மையை நிலைநிறுத்துகிறான் என்பர்.

### 2-10-1 திருஅவதார வைப்புமுறை

நாராயணவனம் கல்யாண வெங்கடேசுவர திருக்கோயில் கருவறைக்குத் தெற்கில் மடப்பள்ளிக்குப் பக்கத்தில் திருமாலின் பத்து அவதாரங்கள் கல் திருமேனிகளாக எழுந்தருளச் செய்யப்பட்டுள்ளன. பத்துத் திருஅவதாரங்களும் வைப்பு முறையோடு அமைக்கப் பெற்றுள்ளது. அவை,

1. மீன் திருஅவதாரம் (மச்சாவதாரம்)
2. ஆமைத் திரு அவதாரம் (கூர்மாவதாரம்)
3. வெண்பன்றித் திருஅவதாரம் (வராகவதாரம்)
4. நரசிம்மத் திருஅவதாரம் (நரசிம்மவதாரம்)
5. சிறுவடிவுத் திருஅவதாரம் (வாமனாவதாரம்)
6. பரசுராமர் திரு அவதாரம் (பரசுராமவதாரம்)
7. தசரதராமர் திருஅவதாரம் (தசரதராமவதாரம்)
8. பலராமர் திருஅவதாரம் (பலராமவதாரம்)
9. கிருட்டிணன் திருஅவதாரம் (கிருட்டிணவதாரம்)
10. கல்கித் திருஅவதாரம் (கல்கியவதாரம்)

**2-10-2 மீன் திரு அவதாரம்** (மச்சாவதாரம்)

திருமால் இத்திருஅவதாரத்தில் மீனாகத் தோன்றினார். வேதத்தைக் கவர்ந்துகொண்டு கடலுக்குள் மறைந்துபோன ஹயக்கிரீவன் என்ற அசுரனைத் திருமால் மீன் திருஅவதாரம் கொண்டு அவனைத் தேடிப்பிடித்து வதைத்து வேதத்தை மீட்டுத்தந்தார் என்பது புராண வரலாறு. இத் திருக் கோயிலில் இத் திருஅவதாரத்தில் திருமாலின் இடுப்பிற்குக் கீழ்ப் பகுதி மீன்வடிவத்தைக் கொண்டுள்ளது. இவர் நின்ற கோலத்தில் மேற்புறமுள்ள வலக்கையில் சக்கரத்தையும், இடக் கையில் சங்கினையும் ஏந்தியுள்ளார். கீழ்நோக்கியுள்ள இவரது வலக்கை அருள்தரும் நிலையிலும், தலையில் முடிசூடி யுள்ளார்.

**2-10-3 ஆமைத் திரு அவதாரம்** (கூர்மாவதாரம்)

திருமால் இத் திருஅவதாரத்தில் ஆமையாகத் தோன்றினார். துருவாசர் சாபத்தால் தேவலோகத்தின் செல்வங்கள் யாவும் கடலிலே வீழ்ந்து மறைந்துவிடவே, இழந்த செல்வத்தையும், அமிழ்தத்தையும் பெறுவதற்கு அமரர்கள் மந்திர மலையை மத்தாகவும், நாகத்தைக் கடைகயிறாகவும் கொண்டு கடலைக் கடைந்தபோது திருமால் திறன்கொள் ஆமையாய் வடிவெடுத்து முதுகினில் மந்தரம் திரிய உதவினார் என்பது புராண வரலாறு.

இவ்வாமைத் திருஅவதாரம் இத் திருக்கோயிலில் கல்திரு மேனியாக அமைந்துள்ளது. இவரது திருமேனி இரண்டடி உயரம் ஆகும். ஆமையின் உடல் மானிடன் தலையோடு திருமால் இனங்காணுமாறு தோன்றியுள்ளார். கருநிறம் வாய்ந்தவர். நான்கு கரம் வாய்ந்த இவர் மேலிரு கரங்களிலும் சங்குச் சக்கரம், கீழிருகரங்களிலும் வர அபய முத்திரைகள் தந்திருக்கிறார். தலையில் முடிசூடியுள்ளார்.

**2-10-4 வெண்பன்றித் திரு அவதாரம்** (வராகவதாரம்)

திருமால் இத் திருஅவதாரத்தில் வெண்பன்றித் திருக்கோலம் பூண்டு இரணியன், இரணியாட்சகன் என்ற அசுரர்களின் (உடன்பிறந்தோர்) கொடுமையைக் களைந்தார். இரணியாட்சகன் பூமியைப் படிப்படியாக ஒழிப்பதற்குக்

காலதாமதம் ஆகும் என்று எண்ணி அதைப் பாயாகச் சுருட்டிக் கடலுக்கு அடியிலேயே ஒளித்து வைத்துவிட்டான்.

திருமால் பன்றியின் பேருருவங்கொண்டு, அச்சந்தரும் கோரைப் பற்களுடன் உறுமிக்கொண்டு, கடலிலே தாவிக் குதித்து அதன் அடியிலே புதைத்திருந்த பூமியை எடுத்து வந்தார். இஃது இத் திருஅவதாரத்தின் நோக்கமாகும். இவரது திருமேனி ஒன்றரை அடி உயரத்தில் நான்கு கைகளுடன் எழுந்தருள செய்யப்பட்டுள்ளது. மேலிரு கைகளில் சங்குச் சக்கரம், கீழிரு கைகளில் வரம், அபய முத்திரைகள் பதிந்துள்ளன. பன்றி முகம் அமைந்து முடி அணிந்துள்ளார். இத் திருஅவதாரம் கிருதயுகத்தில் எடுத்ததாகும் என்று புராணம் கூறுகிறது.

**2-10-5 நரசிம்மர் திருஅவதாரம்** (நரசிம்மவதாரம்)

திருமால் இத் திருஅவதாரத்தில் சிங்க வடிவில் தோன்றி. இரணியனின் கொற்றத்தை அழித்ததாக புராண வரலாற்று கூற்றாகும். இரணியனின் கொற்றம் அவனது மகன் பிரகலாதன், நாராயணின் பெருமைகளைக் கூறிய பின்பும் மாறவில்லை. அதனால் அவனது கொற்றத்தை அடக்க திருமால் சிங்க அவதாரம் பூண்டார். இவ்அவதாரம் கிருத யுகத்தில் திருமால் எடுத்ததாகக் கூறப்பெறுகிறது. இக்கோயிலில் இத் திருஅவதாரத்தில் திருமால் பீடத்தில் அமர்ந்தநிலையில் காட்சியளிக்கிறார். இவரது திருமேனியின் உயரம் இரண்டடி யாகும். மேலிரு கைகளில் சங்குச்சக்கரத்தையும் கீழிரு கைகளில் தாமரை மொட்டுக்களையும் ஏந்தியவாறு காட்சியளிக்கிறார். சிங்க முகத்துடன் தோன்றி தலையில் முடியணிந்து எழுந்தருளி யுள்ளார்.

**2-10-6 சிறுவடிவத் திருஅவதாரம்** (வாமனாவதாரம்)

திருமால் இத் திருஅவதாரத்தில் சிறுவடிவம் கொண்டு மாவிலியின் கொட்டத்தையடக்கினான் என்பது புராண வரலாறு. பிரகலாதனின் பேரன் பலிச்சக்ரவர்த்தி ஆவான். இவனை மாவிலி என்பர். இவன் பேராற்றல் வாய்ந்தவன். மாவிலி வானத்தையும், வையகத்தையும் வலிந்து கைப்பற்றி யிருந்தான். இதனைத் திரும்பப் பெற திருமால் (குள்ள) சிறிய வடிவம் எடுத்தார். மாவிலியிடம் மூன்றடி மண் மட்டும்

தரும்படி வரம் கேட்டார். மாவிலி வரம் கொடுத்துவிட்டான். குள்ளனாகிய வாமனனும் பார்த்த இடமெங்கும் நீக்கமற நிறைந்து விக்கிரமனாக வளர்ந்துவிட்டார். ஒரு கையில் சக்கரம், மற்றொரு கையில் வில், வேறொரு கையில் கதை எஞ்சிய கையில் வாள் தாங்கி நின்றார். விண்ணெல்லாம் பரவி வேறிடம் இல்லை என மாறிவிட்டது. மாவிலியின் செருக்கை ஒழித்து அவனை ஆட்கொண்டதாம் உலகளந்த திருவடி. இதுவே இத்திருஅவதாரத்தின் நோக்கமாகும்.

திருமால் இத் திருக்கோயிலில் நின்ற நிலையில் காட்சியளிக்கிறார். இவரது திருமேனி ஒன்றரை அடி உயரமாகும். மேலிரு கரங்களில் சங்குச் சக்கரத்தையும் கீழிரு கரங்களில் குடையையும் திருக்காவிரி பாத்திரத்தையும் ஏந்திக் காட்சியளிக்கிறார்.

## 2-10-7 பரசுராமர் திருஅவதாரம்

திருமால் பரசுராமர் திருஅவதாரம் பூண்டார். கார்த்த விரியன், அருச்சனன் என்ற அரசனைக் கொன்றதால் ஏற்பட்ட போரில் நிலப்பகுதியை இரண்டுமுறை வலம்வந்து அரசர் பலரைக் கொன்று மக்களை இன்னலிலிருந்து காப்பாற்றி அருள் புரிந்தார் என்பர். இவர் கிருதயுகத்தின் இறுதியில் தோன்றினார் என்று புராணச் செய்தி கூறுகிறது.

இத் திருக்கோயிலில் இவர் (பரசுராமர்) $2\frac{1}{2}$ அடி உயரத்தில் நின்ற நிலையில் இருந்து காட்சித்தருகிறார். மேலிரு கைகளில் சங்குச் சக்கரமும் கீழிரு கரங்களில் கோடாரியும், வில்லும் அம்பும் ஏந்தியுள்ளார். தலையில் முடியணிந்துள்ளார்.

## 2-10-8 தசரதராமர் திருஅவதாரம் (இராமவதாரம்)

திருமால் தசரதராமர் திருஅவதாரம் கொண்டு மக்களின் வாழ்க்கையோடு கலந்து அவர்தம் பண்பாட்டை உருவாக்கி இலட்சிய மனிதனாக வளர்ந்து திருஅவதார மூர்த்தியாய் மலர்ந்திருக்கிறார்.

இராவணனின் கொட்டத்தையடக்கி, சீதையை மீட்டார் என்று புராணச் செய்தி கூறுகிறது. தந்தையின் வாக்கினை மேற்கொண்டு 14 வருடம் காட்டில் வாழ்ந்தார். இவர் திரேத யுகத்தில் அயோத்தியில் தோன்றினார் என்று கூறப்பெறுகிறது.

இத் திருக்கோயிலில் தசரதராமர் நின்ற நிலையில் இரண்டடி உயரத்தில் காட்சியளிக்கிறார். மேலிரு கைகளில் சங்குச் சக்கரத்தையும் கீழிரு கைகளில் வில், அம்பு ஆகிய ஆயுதங்களையும் ஏந்தியுள்ளார்.

## 2-10-9 பலராமர் திருஅவதாரம்

இத் திருஅவதாரத்தில் திருமால் ஏர் கலப்பையைக் கையில் ஏந்தியவாறு காட்சியளிக்கிறார். வேளாண்மை மக்களின் தெய்வமாகத் திருமால் விளங்குகிறார் என்று புராணம் கூறுகிறது. இவர் கலப்பையை ஆயுதமாக உடையவர். சங்கு போல் வெண்ணிறம் வாய்ந்தவர். இருள்போலும் கரிய ஆடையைத் தரித்தவர். ஒற்றைக் காதணி அணிந்தவர். இப் பலராமனின் தம்பியே கண்ணபிரான் ஆவார்.

இத் திருக்கோயிலிலும் பலராமன் திருஅவதாரகல் திருமேனி அமைக்கப் பெற்றுள்ளது. இத்திரு அவதாரத்தில் திருமாலின் திருமேனி இரண்டடி உயரத்தில் எழுப்பப்பட்டுள்ளது. மேலிரு கைகளில் சங்குச் சக்கரம் கீழிரு கைகளில் ஏர்கலப்பையும், கதையையும் ஏந்தியிருக்கிறார். தலையில் முடியணிந்துள்ளார். இவர் துவாபர யுகத்தில் கண்ணனுக்குத் தமையனாகப் பிறந்தார். இவரே திருப்பாற்கடலிலுள்ள திருமாலின் படுக்கையான ஆதிசேசன் ஆவார்.

## 2 10-10 கிருட்டிண திருஅவதாரம்

துவாபரயுகத்தில் திருமால் கண்ணனாகத் தோன்றினார். இவர் சிறிய வயதிலிருந்தே விளையாட்டில் அதிகமாக நாட்டம் இருந்ததாகக் கூறப்பெறுகிறது. கோபியர்களிடம் விளையாடுவார். அருச்சுனனுக்கு உபதேசம் செய்து கீதையை ஏற்படுத்தினார் என்பது புராணம். இவர் துவாபர யுகத்தில் தோன்றினார் என்பர்.

இவர் குழந்தைப்பருவத்தில் கொண்டையுடையவராய் காட்சித் தந்தருள்கிறார். மேலிரு கைகளில் நாவற்பழமும், வெண்ணெயும் கீழிரு கரங்களைக் கீழே தொங்கவிட்ட வண்ணமும் காட்சி தருகிறார். வலது காலை நடனம் ஆடுகின்ற நிலையில் காலை மேலாக வளைத்துக்கொண்டு நின்ற நிலையில் உள்ளார்.

### 2-10-11 கல்கித் திருஅவதாரம்

திருமால் இத் திருஅவதாரத்தில் குதிரை முகத்துடன் தலையில் முடியணிந்தவராய் காட்சியளிக்கிறார். இவரது திருமேனி இரண்டடி உயரம் அமைந்துள்ளது. மேலிரு கைகளில் சங்குச் சக்கரத்தையும் கீழிரு கைகள் வரம், அபய முத்திரைகளைப் பெற்று அமைக்கப்பெற்றுள்ளன.

கலியுக முடிவில் அரசர்கள் குடிமக்களை வருத்தி வதைக்கும் போது திருமால் கல்கியாய்த் தோன்றி வையகத்தைப் பாதுகாப்பார் என்று புராணம் கூறுகிறது. திருமால் பரி ஊர்ந்து ஆவேசமாய் வருவார் என்பர்.

## 2-11-0 திருக்கோயில் சிற்றாலயங்கள்

இத் திருக்கோயிலில் பல சிற்றாலயங்கள் உள்ளன. அவற்றைப்பற்றிக் கீழே விவரமாக விவரிக்கப்பெறுகிறது.

### 2-11-1 தாயார் சிற்றாலயம்

தசாவதாரச் சிற்றாலயத்திலிருந்து மேற்கில் அருள்மிகு பத்மாவதித் தாயார் சிற்றாலயம் அமைந்துள்ளது. இச்சிற்றால யத்திற்கு முன் பதினாறு தூண் மண்டபம் ஒன்றமைந்துள்ளது. இம் மண்டபத்தையும், பத்மாவதித் தாயார் சிற்றாலயத்தையும் ஆகாசராசன் கட்டினான் என்பர். இம் மண்டபத்தின் நடுவில் உற்சவ மேடை கருங்கல்லால் கட்டப்பெற்றுள்ளது. இதன் மேற்புறத்தில் தாயார் ஊஞ்சலாடுவதற்கு வெண்கலத்தில் வளையமும், சங்கிலியும் அமைக்கப்பட்டுள்ளன. மண்டபத்தைக் கடந்து உள்ளே சென்றால் திருச்சுற்றுடன் அமைந்த தாயார் சிற்றாலயம் அமைந்துள்ளது. இச் சிற்றாலயத்தின் முன் சங்கநிதி, பத்மநிதி என்ற இரண்டு வாயிற் காவல் மகளிர் வீற்றிருக்கிறார்கள்.

வாயிற் காவல் மகளிரை வணங்கிய பின்பு உள்ளே சென்றால் அந்தராலயமும் அதையடுத்துக் கருவறையும் அமைந்துள்ளது. இக் கருவறை பத்தடி சதுர வடிவில் அமைந் துள்ளது.

தாயார் கருவறையின் நடுவில் சிம்மாசனத்தின் மேல் உள்ள பத்ம பீடத்தில் மூன்றடி உயரத்தில் அமர்ந்து காட்சி யளிக்கிறார். இவர் நான்கு கைகளுடன் வீற்றிருக்கிறார்.

மேற்புறமுள்ள கைகளில் தாமரை மொட்டினை ஏந்தியுள்ளார். கீழ்புற வலக்கை அருள் தருவதாகவும் இடக்கை கீழ்நோக்கி அபயகரம் தருவதாகவும் அமைந்துள்ளன.

இச் சிற்றாலயத்திற்கு மேற்கில் மூன்று நிலைகள் கொண்ட விமானம் கட்டப்பட்டுள்ளது இந்த விமானத்தின் உச்சியில் உள்ள ஐந்து செம்புக் கலசங்களுக்குத் தங்க முலாம் பூசப் பட்டுள்ளது. இவ்விமானத்தில் திருமகளின் திருவிளையாடல் சிற்பங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. இவ்விமானத் திருப்பணி 1981ஆம் ஆண்டு திருமலை திருப்பதி தேவத்தானத்தாரால் ஏப்ரல் 4ஆம் நாள் நடைபெற்றது.

இத்தாயாரின் தோற்றம் மிக அமைதியாகவும் புன்னகை யுடனும், மெய்யன்பர்களுக்குப் பக்தி ஏற்படும் நிலையிலும் அமைந்துள்ளது.

தாயாரின் நான்கு கைகளுக்கும் கவசங்கள் சாத்தப் பெற்றுள்ளன. இக் கவசங்கள் செம்பினால் செய்யப்பெற்றுத் தங்க முலாம் பூசப்பெற்றவை. தலையிலுள்ள முடியும் தங்க மூலாம் பூசப்பெற்றதாகும். நெற்றியில் தங்கத்தில் செய்து கற்கள் பதித்த திலகமும், கழுத்தில் திருமங்கல நாணும் மூக்கில் மூக்குத்தியும், புல்லாக்கும் அணிவிக்கப்பெற்றுள்ளன. செம்புமீது பொன் முலாம் பூசப்பெற்ற பிரபையும் தாயாரை அணிசெய் கின்றது.

ஐம்பொன்னாலான தாயார் உற்சவமூர்த்தி இதே இடத்தில் எழுந்தருளியுள்ளார். இவரும் தாயாரைப் போலவே அமர்ந்த நிலையில் இரண்டடி உயரத்தில் காட்சிதருகிறார். இவருக்கும் தாயாருக்கு அணிவிக்கப் பெற்றிருப்பதைப் போன்றே நான்கு கைகளுக்கும் தங்க முலாம் பூசப்பெற்ற கவசங்களும், தலைக்கு வெள்ளியிலான முடியும் காதிற்கு வைரக்கல் பதித்த காதணியும் நெற்றிக்குக் கற்பதித்தத் திலகமும், கழுத்திற்கு மங்கல நாணும், காசுமாலையும் அணிவிக்கப்பெற்றுள்ளன.

தாயார் உற்சவருக்கும், தாயார் மூலவருக்கும் வெள்ளிக் கிழமைதோறும் திருமுழுக்கு நடத்தப்பெறுகின்றது. இருவருக் கும் எப்பொழுதும் பட்டு ஆடைகளையே உடுத்துகின்றனர்.

வெள்ளிக்கிழமைதோறும் மாலையில் உற்சவத் தாயாரை அழகுசெய்து, கேடயத்தில் அமர்த்தித் திருச்சுற்று உற்சவம் நடத்துவர். உற்சவத்தின் இறுதியில் தாயாரை ஊஞ்சலில்

அமர்த்தி ஊஞ்சலை ஆட்டுவர். பங்குனி உத்திரத் திருவிழா அன்று தாயாருக்கும், பெருமாளுக்கும் சேர்க்கை உற்சவம் நடத்துவர்.

அருள்மிகு பத்மாவதித் தாயாரை வெங்கடேசுவரர் இத் திருத்தலத்தில்தான் திருமணம் செய்துகொண்டார் என்று மேலே கூறினோம். ஆகையால் இக்கோயிலில் வந்து வழிபடும் திருமணமாகாத பெண்கள் தாயாரை வேண்டிக் கொள் வாராயின் அவர்களுக்குத் திருமணம் விரைவில் நிகழும் என்ற நம்பிக்கை இருந்துவருகின்றது. இக் கோயிலுக்குச் சிறப்பைத் தருவது இவ்விறையருள் நம்பிக்கையேயாகும்.

தாயார் சிற்றாலயத்தில் பூசைக்குப் பயன்படுத்தும் ஐம்பாத்திரங்கள் வெள்ளியால் செய்யப்பெற்றனவாகும். இங்கு அகண்ட விளக்கு ஒன்றும், குத்துவிளக்கு ஒன்றும் எப்பொழுதும் எரிந்துகொண்டேயிருக்கும். இங்குள்ள மணி, தீபாராதனைத் தட்டுக்கள், குங்குமக்கிண்ணம், குங்குமத் தட்டு, சடாரி ஆகிய அனைத்தும் வெள்ளியால் செய்யப்பெற்றவையாகும். இங்கு ஆலவட்டம் ஒன்றும் உள்ளது. புனிதநீர் கொடுக்க உத்தரணி என்னும் சிறிய கரண்டியும் உள்ளது.

தாயார் சிற்றாலயத்திலிருந்து வெளியே வந்தால் வலப்புறம் உள்ள வாயிற் காவல் மகளிருக்குச் சற்று மேற்பகுதியில் கல்வெட்டொன்று தெலுங்கில் செதுக்கப்பெற்றுள்ளது.

தமிழில் அதன்பொருள் வருமாறு

**திருவருள் நல்லருள் நன்மையருள்**

நன்மையான வெற்றிவாகை சூடிய சாலிவாகன நூற்றாண்டில் சக ஆண்டு 8ஆம் மாதம் 1685ஆன இன்று கர ஆண்டு கார்த்திகைத் திங்கள் முழுமதி நாள் பஞ்சமி ஓரை புதனன்று பூசக்கோளில் பிரம்மநாமயோகத்தில் தைத்துல கரணம் அன்று ஸ்ரீமத் அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகி ஆன ஸ்ரீ பத்மவள்ளி நாச்சியார் அவர்களுக்கு, ஸ்ரீமன் மகா மண்டலேசுவர கத்தி சாள்வ மகாராசர் மகன் காவேரி அரசர் அவர்களின் தர்மபத்தினி இல்லத்தாள் ஆன ஸ்ரீமான் மகா மண்டலேசுவர பொப்ப ராசா அவர்களின் மகன் நரசிப் மாராசா அவர்களின் மகளான ராஜஸ்ரீ திருமலை கொண்ட (மலை) ரத்னகர்ப சூக்தி முக்தாமணியான ராஜஸ்ரீ கங்கமாம்பா

அவர்களால் செய்யப்பெற்ற நிரந்தரமான விமான திருப்பணி (கருவறை கோபுரத்தின் திருப்பணி) தர்மம் செய்யப்பட்டது.

கல்வெட்டின் கீழே கற்பகத் தரு ஒன்றையும் வண்ணத்தால் தீட்டியுள்ளனர். வலப்புறம் உள்ள வாயிற்காவல் மகளிர்க்குச் சற்று மேற்புறத்தில் காமதேனுவையும் முனிவர்களையும் வண்ணங்களில் தீட்டியுள்ளனர். தாயார் சிற்றாலயத்திற்கு எதிரில் உண்டியல் ஒன்று பொருத்தப்பெற்றுள்ளது. தவிர மண்டபத்திறகு எதிரிலுள்ள ஊஞ்சல் சங்கிலிக்கு மேற்புறத்தில் சதுர வடிவில் எட்டு இதழ் கொண்ட அழகான தாமரை மலர் ஒன்று கருங்கல்லால் செதுக்கப்பெற்றுள்ளது.

இம்மண்டபத்திற்கு இடப்புறமாக அருள்மிகு பத்மாவதித் தாயாரின் திருமண நிகழ்ச்சிக்கு வேண்டிய அரிசி, மஞ்சள் முதலியவற்றை அரைக்கும் இயந்திரம் ஒன்று கருங்கல்லில் ஐந்தடி விட்டத்தில் அமைக்கப்பெற்றுள்ளது. இதன் அருகிலேயே சந்தனம் இழைக்கும் பலகைகள் இரண்டு, மூன்றடி விட்டத்தில் செய்யப்பெற்றுள்ளன.

**2-11-2 ஆண்டாள் சிற்றாலயம்**

தாயார் சிற்றாலயத்திற்கு நேராக உள்ள பெருமாள் விமானத்தின் பின்புறம் கிழக்குத் திசையை நோக்கியவாறு அழகிய அமைப்புடன் ஆண்டாள் சிற்றாலயம் அமைந்துள்ளது. இவ்வாலயத்தில் காணப்பெறும் சுவர்களும் அவற்றின் கீழ் அமைந்துள்ள பீட அமைப்புக்களும் பல்லவர் காலத்து அமைப்பு முறையில் உள்ளன. மண்டபத்தின்மீது அழகிய சிங்க உருவங்கள் வைக்கப்பெற்றுள்ளன. ஆண்டாள் சிற்றாலயத்தின் முன் முகமண்டபம் ஒன்றுள்ளது. இம்மண்டபத்தின் நடுவே நான்கு தூண்கள் உள்ளன.

முகமண்டபத்தையடுத்து அந்தராலயம் உள்ளது. அதற்குச் சற்று உட்புறமாக அமைந்துள்ள இடந்தான் ஆண்டாள் சிற்றாலயத்தின் கருவறையாகும். இக் கருவறை பன்னிரண்டு அடி சதுர அளவில் கட்டப்பெற்றுள்ளது. கருவறையின் நடுவில் இரண்டடி உயர பீடத்தில் ஆண்டாள் நின்ற கோலத்தில் காட்சி தருகிறாள். இச் சிலையின் உயரம் நான்கடியாகும்.

ஆண்டாள் இரண்டு கைகளுடன் காட்சியளிக்கிறார். வலக்கையில் தாமரை மொட்டும், அதன் மேற்புறத்தில் கிளி ஒன்றும் உள்ளது. இடக்கை கீழ்நோக்கி அமைந்துள்ளது. அவர் கொண்டையுடன் காட்சியளிக்கிறார் ஆண்டாள் தாயாரின் உற்சவர் சிலை இரண்டரை அடி உயரத்தில் ஐம்பொன்னால் வார்க்கப் பெற்றுள்ளது.

அருள்மிகு பத்மாவதித் தாயாருக்கும் ஆண்டாளுக்கும் இரண்டு வேளையும் பூசைகள் நடத்தப்பெறுகின்றன. ஆண்டாளுக்கென திருவாடிபூரத்தில் திருவிழாவும், மார்கழித் திங்களில் நீராட்டு உற்சவமும் நடத்தப்பெறுகின்றன. மேலும் ஏகாதசிதோறும் பெருமாள் உற்சவ உலாவிற்குப்பின் உள்திருச் சுற்றில் வலமாக வரும்போது ஆண்டாள் சிற்றாலயத்திற்கு நேர் எதிரில் அவரது கேடயத்தை நிறுத்தி, குடை சாமரம், தீவட்டி முதலிய மரியாதைகளுடன் ஆண்டாளுக்கு மாலை மாற்றி ஆரத்தி காட்டப்பெறுகிறது.

இச் சிற்றாலயத்தின்மேல் மூன்று நிலைகளைக் கொண்ட விமானம் கட்டப்பெற்றுள்ளது. இவ் விமானத்தில் நான்கு பக்கங்களிலும் திருமகளின் திருவிளையாடல்களைக் குறிக்கும் சிற்பங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. விமானத்தின் மேற்புறம் தங்க முலாம் பூசப்பெற்ற ஐந்து கலசங்கள் வைக்கப் பெற்றுள்ளன. "இச் சிற்றாலயத்திற்கு 1981ஆம் ஆண்டு திருப்பணி செய்யப்பெற்றுள்ளது இஃது ஆகாச ராசாவிற்குப் பின் அரசு புரிந்த மன்னர்களால் கட்டப்பெற்றதாகும்!" 1-3-1981ஆம் ஆண்டு திரு. பி. வி. ஆர். கே. பிரசாத் ஐ.ஏ.எஸ்., இ. ஒ. T.T.D திருப்பதி, அவர்களால் திருப்பணி செய்து புதிய கல்வெட்டு ஆங்கிலத்தில் செதுக்கப்பட்டுள்ளது."[49]

"சிவன் கோயில்களைப் போலவே பெருமாள் கோயில் களிலும் பத்தாம் நூற்றாண்டிற்கு முன்பு தாயார் சிற்றாலயம் இருந்ததில்லை"[50] என்பது இங்குக் குறிப்பிடவேண்டிய செய்தியாகும்.

"பெருமாள் கோயில்களில் ஆண்டாளுக்கு மட்டும் தனிச் சிற்றாலயம் ஏற்படுவானேன்? ஆம் விசய நகர மன்னரான கிருட்டிண தேவராயர் ஆண்டாளிடம் மிகுந்த பக்தி கொண் டிருந்தார். அவரது கைங்கரியமே இந்த ஆண்டாளுக்குத் தனிச் சிற்றாலயம்"[51] என்று தொண்டைமான் கூறுவர்.

ஆண்டாள்மீது கிருட்டிண தேவராயர் பக்தி கொண்டிருந்தமையால் தெலுங்கில் 'ஆமுக்த மால்யத' என்ற காவியத்தையும் படைத்துள்ளமையை அறியலாம். இக் காவியம் சூடிக் கொடுத்த ஆண்டாளின் கதையைக் கூறுகிறது. 'ஆமுக்த மால்யதா என்றால் 'சூடிக் கொடுத்தாள்' என்று பொருள். எனவே இவரது அரசாட்சியின் காலத்தில்தான் பெருமாள் கோயில்களில் ஆண்டாளின் திருமேனி வைக்கப்பெற்றது எனக் கருதலாம்.

### 2-11-3 இராமர் சிற்றாலயம்

இச் சிற்றாலயம் வேள்விச் சாலைக்கு முன்னும் மகா மண்டபத்திற்கு இடதுபுறமும் அமைந்துள்ளது. இவ்வாலயத்தின் முன் சிறிய மண்டபம் ஒன்று அமைந்துள்ளது. இம் மண்டபத்திற்குள் மூன்று சிற்றாலயங்கள் கட்டப்பெற்றுள்ளன. முதலாவதாக இராமர் சிற்றாலயமும் அடுத்து அரங்கநாதர் சிற்றாலயமும், அதையடுத்து இராசமன்னார் சிற்றாலயமும் அமைந்துள்ளது.

இராமர் சிற்றாலயத்தில் மூலவர்களான இராமர் இலக்குமணர், சீதை முதலானோரின் கற்சிலைகள் ஒவ்வொன்றும் நான்கடி உயரமுடையனவாய் காணப்படுகின்றன. இங்குள்ள இராமருக்குக் கோதண்டராமர் என்று பெயர். இச்சிலைகளுக்குக் கீழ்ப்புறம் உள்ள மேடையில் இராமர், இலக்குமணர், சீதை, அநுமன் ஆகியோரின் உற்சவ மூர்த்திகள் வைக்கப்பெற்றுள்ளனர். இம்மூர்த்திகளை ஐம்பொன்னால் செய்துள்ளனர்.

இவ்வற்சவ மூர்த்திகள் ஆகாச ராசாவின் கோட்டையில் வைக்கப்பெற்று அவர்களின் முன்னோர்களால் வழிபடப்பெற்று வந்தவர்களாவர். இத்திருமேனிகள் கோட்டையிலுள்ள மன்னரின் அறையில் வைக்கப்பெற்று வழிபடப் பெற்றவை. ஆகாசராசரின் மகள் பத்மாவதி தனக்கும், வெங்கடேசுவரருக்கும் திருமணம் நடைபெற வேண்டுமென்று வேண்டி இந் நால்வர் திருமேனிகளையும் வழிபட்டுவந்துள்ளார் என்று வரலாறு கூறுகின்றது.

இவ்வுற்சவர்களை அரணீய இராமலக்குமணர் என்று அழைக்கின்றனர். இவர்களின் தலையிலுள்ள சடைகள்

முடிகளாகப் பின்னப்பட்டுள்ளன. திருமார்பில் மணிமாலைகளும், முப்புரி நூலும் பொறிக்கப்பட்டுள்ளன. சிறிய கச்சமும் (வேடர் அணிவது போன்ற ஆடை) இவர்களது இடுப்பில் விளங்குகிறது. இதுவும் பஞ்சலோகத்தால் செய்யப்பெற்றதேயாகும்.

இராமரின் கையில் வில்லும் அம்பும் விளங்குகின்றன. பீடத்தில் கிரந்த எழுத்தில் நாராயணவனம் என்று பொறிக்கப்பட்டுள்ளது. இவரின் திருமேனியைப் போலவே இலக்குமணன் சீதை, அநுமன் ஆகியோரின் திருமேனிகளும் அமைக்கப்பெற்றுள்ளன. இராமர், இலக்குமணன், சீதை ஆகியோரின் திருமேனிகள் மும்மூன்று அடி உயரத்திலும் அநுமன் திருமேனி ஒன்றரை அடி உயரத்திலும் செய்யப்பெற்றுள்ளன.

இச்செப்புத் திருமேனிகளை ஆகாசராசர் அரண்மனை சிதைந்த பின்பு அங்கிருந்து இக் கோயிலுக்குக் கொண்டுவந்து வைத்துள்ளனர். இராமருக்குச் சித்திரைத் திங்களில் இராமர் பிறந்த நவமி ஓரையில் ஸ்ரீராமநவமி சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது. இவ்விழா 9 நாட்கள் நடைபெறுகின்றது.

### 2-11-4 அரங்கநாதர் சிற்றாலயம்

இராமர் சிற்றாலயத்திற்குப் பக்கத்தில் அரங்கநாதர் சிற்றாலயம் அமைந்துள்ளது இச்சிற்றாலயம் நீண்ட சதுர வடிவில் கட்டப்பட்டுள்ளது. இவ்வாலயத்தில் அரங்கநாதர் பாம்பணைமீது தன்வலதுபக்கமேனி இருக்குமாறும் தலை பாம்புப் படத்தின் கீழ் இருக்குமாறும் கிழக்குத் திசையை நோக்கியவாறு பள்ளிகொண்டுள்ளார்.

அவர் திருவடிகளுக்கு அருகில் திருமகளும் நில மகளும் வீற்றிருக்கிறார்கள். அரங்கநாதருக்கு ரேவதிக்கோளில் திருமுழுக்குச் செய்யப்பெற்று, சிறப்புப் படையல் படைக்கப் பெறுகிறது. நாள்தோறும் இரண்டு வேளையும் வழிபாடு செய்யப்பெற்றுப் படையல் படைக்கப்பெறுகிறது. வைகுண்ட ஏகாதசியன்று மெய்யன்பர்கள் இவருக்குச்சிறப்புத் திருமுழுக்குச் செய்கின்றனர்.

### 2-11-5 இராசமன்னார் சிற்றாலயம்

அரங்கநாதர் சிற்றாலயத்திற்கருகே இச்சிற்றாலயம் அமைந்துள்ளது. இச்சிற்றாலயத்தில் இராசமன்னார்

என்றழைக்கப்பெறும் கண்ணன் நின்ற கோலத்தில் நாலரை அடி உயரத்தில் மூலவராகக் காட்சியளிக்கிறார். இவருக்கு நாள்தோறும் இரண்டு வேளையும் பூசை செய்யப்பெற்று படையல் படைக்கப்பெறுகின்றது.

மேற்கூறிய மூன்று சிற்றாலயங்களும் தெற்கு நோக்கி அமைந்துள்ளன. ஸ்ரீராமநவமி, இராமர் தெப்பத்திருவிழா ஆகிய சிறப்பு நாட்களில் இராசமன்னார் சிற்றாலயத்தின் முன்னுள்ள மண்டபத்தை உற்சவரை அழகு செய்வதற்காகப் பயன்படுத்துவர்.

**2-11_6 பிரயாகை மாதவர் சிற்றாலயம்**

இச் சிற்றாலயம் இராமர் சிற்றாலயத்திற்கு முன்னுள்ள மண்டபத்திற்கு மேற்கில் அமைந்துள்ளது. இச்சிற்றாலயத்தில் உள்ள பத்ம பீடத்தில் ஐந்தரை அடி உயரத்தில் மூலவராகப் பிரயாகை மாதவர் எழுந்தருளியுள்ளார்.

திருமால் பூனாவிற்கு அருகேயுள்ள பிரயாகை என்னும் புனித இடத்தில் மாதவர் என்ற பெயரில் தோன்றினார். இப் பெயரிலேயே மற்ற வைணவத் திருத்தலங்களிலும் இவரின் திருமேனியை எழுந்தருளச்செய்து வழிபட்டுவருகின்றனர்.

மேற்புறமுள்ள இவர் வலக்கையில் சக்கரமும், இடக்கையில் சங்கும் உள்ளன. கீழ்ப்புறமுள்ள வலக்கை அருள் தருவதாகவும், இடக்கை கீழ்நோக்கியும் அமைந்துள்ளன. இவருக்கு நாள்தோறும் இரண்டு வேளையிலும்பூசை செய்யப்பெறுகிறது.

**2-11-7 வரதராசர் சிற்றாலயம்**

இவ்வரதராச சிற்றாலயம் மடப்பள்ளியை ஒட்டியவாறு அமைந்துள்ளது. காஞ்சி வரதராசப்பெருமாளின் நினைவாக இங்கே இவருக்குச் சிற்றாலயம் எழுப்பப்பட்டுள்ளது. பீடத்தோடு சேர்ந்து ஏழடி உயரத்தில் இவர் காட்சியளிக்கிறார்.

மேற்புறமுள்ள வலக்கையில் சக்கரமும் இடக்கையில் சங்கும் ஏந்தியவராக இவர் விளங்குகிறார். கீழ்ப்புற வலக்கை அருள் தருவதாகவும், இடக்கை கதையுடையதாகவும் உள்ளன. இவரின் திருமேனி மிக அழகாக உள்ளது. இச்சிற்றாலயம் மேற்கு திசையை நோக்கியமைந்துள்ளது. இவருக்கு நாள்தோறும் இரண்டு வேளையும் பூசை செய்யப்பெறுகிறது.

## 2-11-8 வைகுண்ட வாசல்

ஆண்டாள் சிற்றாலயத்திற்கு முன்பு இடப்பக்கத்தில் "வைகுண்ட வாசல்" என்ற வாயில் ஒன்று அமைந்துள்ளது. இவ் வாசல் விமானத்திற்கும், திருச் சுற்றிற்கும், இடையில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. இவ் வைகுண்டவாசலுக்குக் கதவு களும் அமைக்கப்பெற்றுள்ளன.

மார்கழித் திங்களில் வரும் ஏகாதசியன்று, வைகுண்ட ஏகாதசி என்றழைக்கப்பெறும் உற்சவம் நடைபெறும்.

அன்று மாடவீதிவுலாவரும் பெருமாளை இவ் வைகுண்ட வாசல் வழியாக எழுந்தருளச் செய்வர். மெய்யன்பர்கள் அவ் வாசல் வழியாக நுழைந்து இறைவனின் அருளைப் பெறுவர். மெய்யன்பர்கள் அவ்வாறு சென்றுவந்தால் வைகுண்ட இன்பம் கிடைக்குமென்று நம்புகின்றனர். இவ்வாசல் ஆண்டிற்கு ஒரு முறை (வைகுண்ட ஏகாதசியன்று) தான் திறக்கப்பெறுகிறது. வைகுண்ட வாசல் குறித்து அ. சண்முகம்பிள்ளை "ஆகமங்களில் மகாவிஷ்ணுவின் மாத உற்சவங்கள் செய்ய விதித்திருக்கும் பஞ்ச பருவங்களில் ஏகாதசியும் ஒன்றாகக் குறிக்கப்பட்டுள்ளது. பதினைந்து திதிகளில் பதினோராவது திதியான இந்த ஏகாதசி மாதம் இருமுறை வரும். ஏகாதசி என்பது ஒரு சக்தி. அவன் விஷ்ணுவின் திருமேனியில் விளங்குகிறான். அசுர சக்தியை அழிப்பது இந்த விஷ்ணு சக்திதான். இச்சக்தி விஷ்ணுவிடம் ஏகாதசியன்று தங்களை நினைத்து உண்மை மனத்துடனும், திடமான சித்தத்துடனும் விரதம் இருப்பவர்களைக் காத்தருள வேண்டும், என்று வரம் கேட்டதாம். அன்று முதல் ஏகாதசி விரதத்தை எல்லோரும் கைக்கொண்டனர் என்று பதும புராணத்தின் உத்தர காண்டப் பகுதி குறிப்பிடுகிறது என்கிறார்"[52]

## 2-11-9 வேள்விச்சாலை

வேள்விச்சாலையைப் பெருந்திருவிழாவின்போது பத்து நாட்கள் பயன்படுத்துவர். இவ்வறையில் திருக்குடம் அமைப்பு மேடை கிழக்கு நோக்கிக் கட்டப்பட்டுள்ளது. மேடைக்கு முன்புறம் வேள்விக்குழி கிழக்குத்திசை நோக்கியவாறு அமைக்கப்பட்டுள்ளது. இக்குழிக்கு வடக்கும் இடப்புறமுள்ள ஒரு நீளமான மேடையில் சேனை முதலியாரையும் திருமங்கை

யாழ்வாரையும் மணவாள மாமுனியையும் மூலவர் வடிவத்தில் எழுந்தருளச் செய்வர்.

இவ் வேள்விச்சாலையைப் பயன்படுத்தும்போது முதன் முதலில் அங்குரார்பணம் எனும் வழிபாடு நடத்தப்படுகின்றது. புற்று மண்ணைச் சேகரித்து, அதனைக் கொணர்ந்து வேள்விச் சாலையிலுள்ள பாலிகைகளில் வைத்து அதனுடன் நவதானியத்தை விதைப்பர். திருக்குடத்தை வைத்து மஞ்சளரிசி, மஞ்சள் வைப்பர். மற்றும் எட்டுப் பரிவாரக்குடங்களும் வைப்பர். இக்குடங்களில் புதிய நீருடன் இலவங்கம், ஏலக்காய்,ஜாதிபத்ரி, வெட்டிவேர், பச்சைக்கற்பூரம், சந்தனம், சீரகம், குங்குமப்பூ முதலியவற்றைப் பொடிச் செய்து வைப்பர். அக் குடங்களுக்கு முன் நாள்தோறும் தீ வளர்ப்பர். அத்தீயில் உள்ள தெய்வச்சக்தி தினமும் இரண்டு வேளையும் மந்திரத்தின் மூலமாக அக் குடங்களுக்குள் உருவேற்றப்படுகிறது.

மூர்த்தி என்பது ஸ்தூலமான இலிங்க வடிவம் அல்ல அதில் அமைந்துள்ள உணர்வுக்கும், யோகத்துக்கும், புலப்படுகின்ற மந்திர வடிவமாகும். ஆகவே நாம் அந்த மந்திர மூர்த்தியை வேறு இடத்தில் கொண்டுவந்து வைக்கவேண்டியிருககிறது. இதற்காக ஏற்பட்டதே வேள்விச்சாலை.

கோயிலில் எத்தனை பிரதான மூர்த்திகளை வழிபடுகின்றனரோ அத்தனை மூர்த்திகளுக்கும், தனித்தனி வேள்விச் சாலைகள் அமைக்கப்படும். ஒவ்வொரு வேள்விச்சாலையிலும் ஒரு கும்பத்தில் அந்தந்த மூர்த்தியை உருவேற்றம் செய்து மூர்த்திகளிடத்திலுள்ள மந்திர சொருபத்தை இந்தக் கும்பத்தில் சேமித்து (கிரகித்து) வைப்பர்.

ஒவ்வொரு கோயிலிலும் வேள்விச்சாலை அமைத்து வழிபடுவது வழக்கமாக இருந்துவருகிறது. பெருந்திருவிழா தொடங்குவதற்கு முன்பு இவ் வேள்விச்சாலை அமைத்துப் பத்துநாட்கள் வழிபாடு செய்வர். மறை விற்பன்னர்கள் பலரின் உதவியால் வேள்விச்சாலையில் திருமறை ஓதப்பெறும்.

மன்னர்கள் அரசாட்சி செய்த காலத்தில் பல வேள்விகள் செய்ததாக வரலாறு கூறுகிறது. அம் மன்னர்கள் நாட்டில் மழைவளம் குன்றியபோது வேள்வி நடத்தி மழையைப் பெற்றதாக அறிகிறோம்.

மேலும் ஊர்மக்கள் அனைத்து வளங்களைப் பெறவும் பிணிகள் இன்றி வாழவும் கோயில்களில் வேள்விகளை நடத்தி வருகின்றனர்.

## 2-11-10 திருத்தலத் திருமரம்

ஒவ்வொரு திருக்கோயிலிலும் ஒவ்வொரு புனிதமரம் திருத்தலத் திருமரமாக விளங்குகிறது. இம்மரம் கோயில் கட்டிய நாள்முதல் வளர்க்கப்படவேண்டும் இந்து மதத்தில் விலங்குகளையும், மரங்களையும், கற்சிலைகளையும், கடவுளாக நினைத்து வழிபட்டுவருகின்றனர். இறைவனின் உருவங்களை படங்களாக ஓவியம் தீட்டியும் வழிபட்டு வருகிறார்கள். கோயில் கட்டி குடமுழுக்குச் செய்து வழிபட்டுவருவதும் வழிபாட்டு முறையுள் ஒன்றாக விளங்குகிறது. எனவே இறைவனுக்குப் பயன்படுத்தப்பெறும் மலர் மரங்களை அல்லது செடிகளைக் கோயில்களில் வைத்து வளர்த்துப் பூசை செய்வர். அதுவே அக் கோயிலின் தலத்திருமரமாக விளங்கும்.

நாராயணவனத்தில் உள்ள இறைவனுக்கு விருப்பமுள்ள மலராக பவழமல்லி விளங்குகிறது. இம்மரத்தைக் இக்கோயிலின் திருத்தலத் திருமரமாக வளர்த்துவருகின்றனர்.

மெய்யன்பர்கள் குறிப்பாகப் பெண்கள், வரலட்சுமி நோன்பு, கௌரி நோன்பு, நாகலம்மாள் நோன்பு முதலிய நோன்புகளின்போது இம்மரத்திற்கு மஞ்சள், குங்குமம் இட்டு, மலர் வைத்து கற்பூர ஆரத்தி காட்டி வழிபடுகின்றனர்.

இத் திருத்தலமரத்தை வலம் வந்தால் தமது எண்ணம் நிறைவேறும் என்று மக்கள் நம்புகின்றனர்.

மகப்பேறு இல்லாமல் இருக்கும் பெண்கள் இம்மரத்தின் கிளையில் தாம் உடுத்தியிருக்கும் சேலையின் முந்தானையில் ஒரு பகுதியைக் கிழித்து ஊஞ்சல்போல் கட்டி அதில் ஒரு சிறு கல்லை வைத்து மூன்று முறை ஆட்டுவர் இவ்வாறு செய்பவர்களுக்கு அடுத்துவரும் ஆண்டிற்குள் பிள்ளைப்பேறு கிடைக்கும் என்ற நம்பிக்கை உள்ளது.

## 2-12-0 ஊர்தித் திருப்பணிகள்

இக்கோயிலில் பல்வேறு திருவிழா நாட்களில் இறைவனை அழகு செய்து திருவீதிவுலா செல்வதற்கென்று ஆகம முறையில் அமைக்கப்பெற்ற ஊர்திகள் பல உள்ளன.

இவ்வூர்திகள் திருவிழா நாட்களில் பயன்படுத்தப் பெறுகின்றன கார்வேட்டி நகர மன்னர்கள ஊர்தித் திருப்பணியைச் செய்தனர் என்பர். அவற்றுள் பல ஊர்திகள் பழுதடைந்துவிட்டன. அதனால் பழுதடைந்தவற்றைத் திருமலை திருப்பதி தேவத்தானத்தார் புதுப்பித்துள்ளனர்.

மன்னர்களால் வழங்கப்பட்ட கருடஊர்தி மட்டும் இன்றும் பழுதடையாமல் உள்ளது. மன்னர்கள் இவ்வூர்திக்குச் செப்புத் தகட்டின்மேல் தங்கமுலாம் பூசியுள்ளனர். ஆனால் தற்போது இவ்வூர்திக்கு மார்பு வரையில் மட்டும் கவசம் உள்ளது. தங்க முலாம் பூச்சு இல்லை. பலவண்ணப்பூச்சு மட்டும் தற்போது உள்ளது.

### 2-12.1 இக்கோயிலிலுள்ள ஊர்தி

1. பெரிய பாம்பு ஊர்தி, 2. சிறிய பாம்பு ஊர்தி, 3. அன்ன ஊர்தி, 4. சிங்க ஊர்தி, 5. முத்துப் பந்தல், 6. கற்பகத் தரு, 7. சர்வ பூபாள ஊர்தி, 8. பல்லக்கு 9. கருட ஊர்தி, 10. அநுமன் ஊர்தி, 11. யானை ஊர்தி 12. சூரிய பிரபை, 13. சந்திர பிரபை, 14. தேர், 15. குதிரை ஊர்தி, 16. பூப்பல்லக்கு, 17. சக்கரத்தாழ்வார் பல்லக்கு, 18. உற்சவர் கேடயம், 19. தாயார் கேடயம், 20. இராமர் கேடயம் முதலியனவாகும்.

## 2-13-0 அணிகளும் திருப்பணிகளும்

இக்கோயில் மூர்த்திகளுக்காகப் பல்வேறு வகை அணிகலன் கள் திருமலை திருப்பதி தேவத்தான நிர்வாகத்தாராலும், மன்னர்களாலும், மெய்யன்பர்களாலும் செய்விக்கப் பெற்றுள் ளன. அவை,

1. கழுத்து மாலை (சந்திர ஹாரம்) 2. முப்புரிநூல்- தங்கஇழையிலான நவரத்தினக் கற்களால் பதித்த பூணூலாகும். 3. வைகுண்டக்கை, 4. மாங்காய் மாலை, 5. காசு மாலை, 6. திருமங்கள நாண், 7. இடுப்பணி (ஒட்டியாணம்), 8. பவழ மாலை, 9. காலணி (கால் சலங்கை), 10. காதணிகள், 11. சங்குச்சக்கரம், 12. முடி, 13. திருப்பாதங்கள்

மேற்கண்ட அணிகலன்கள் சிறப்புத் திருவிழாக் காலங்களில் அணிவிக்கப்பெறுகின்றன. இவ்வணிகலன்கள் அர்ச்சகர்களின்

பொறுப்பில் நிர்வாகத்தினர் பாதுகாப்புப் பெட்டகத்தில் வைத்துள்ளனர். அரசு காவலர்கள் மேற்பார்வையிலும், கோவிலின் பாதுகாப்பிலும் இவ்வணிகள் பாதுகாக்கப் படுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. அவ்வையார். உலகநீதி ப. 10
2. திருநாவுக்கரசர் தேவாரம். (அடங்கல்முறை) பா. 12.
3. சேக்கிழார், பெரியபுராணம் ப. 614.
4. ரா. பி. சேதுப்பிள்ளை, ஊரும் பேரும் ப. 10.
5. ஆர். இராமமூர்த்தி சர்மா, ஸ்ரீ வெங்கடேசுவர மஹாத்மியம் அத்தியாயம் மூன்று ப. 9.
6. ஸ்ரீ கோபி கிருஷ்ணா, மன ஆலய மூல சரித்திர (தெ.நூ) ப. 162.
7. ஆர். இராமமூர்த்திசர்மா, மு.நூ. ப. 11.
8. ஆனந்த ஆச்சாரியார், ஆத்திகிரி மகாத்மியம் (தெ.நூ) ஐந்தாவது அத்தியாயம் ப. 3
9. நேர்காணல்; சௌரிராசபட்டாச்சாரி அர்ச்சகர், நா. வரம், நாள்: 16-6-89.
10. நேர்காணல்: ஏ. திருவேங்கடாச்சாரி, நா. வரம், நாள்: 17-6-89.
11. ஆர். இராமமூர்த்தி சர்மா, மு.நூ. ஐந்தாவது அத்தியாயம் ப. 12.
12. மேலது: ப. 11.
13. சுரைக்காய் சுவாமி வரலாறு ப. 7.
14. நேர்காணல்: ந. கந்தசாமி முதலியார் நா. வரம். நாள்: 4-5-90
15. ஸ்ரீ கோபிகிருஷ்ணா, மு.நூ. (தெ.நூ) பக். 158-159.
16. நேர்காணல்: நாள்: 5-5-90.
17. ஸ்ரீ. கோபிகிருஷ்ணா, மு.நூ. ப. 90.
18. D. இரங்காச்சாரியார், (தெ. ஆ) விமானார்ச்சனகல்பம் ப. 6.
19. D. இரங்காச்சாரியார், மேலது (தெ.நூ) ப. 5.
20. நசன், ஏழுமலை ஆண்டவன் ப. 76.
21. தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான், தமிழ்க்கோயில்கள் தமிழர் பண்பாடு ப. 20.
22. மேலது. ப. 60.
23. மேலது. ப. 62.

24. ந. ரா முருகவேள், தமிழகத் திருக்கோயில் ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டு மலர் ப. 102-103.
25. நசன், ஆலயங்களும் ஆகமங்களும் ப. 58.
26. மேலது. ப. 16.
27. தொ. மு பாஸ்கரத்தொண்டைமான் மு.நூ. ப. 76.
28. சோமலெ, மகாகும்பாபிஷேக சிறப்புமலர் ப. 390
29. திருமூலர், திருமந்திரம் பா. 1823.
30. நசன், மு.நூ. ப. 26.
31. ப. அருணாசலம், வைணவ சமயம் ப. 39.
32. V. Varadhachari, Agamas and Sound Indian Vaisnavism p. 58.
33. Ibid, p. 79.
34. மாருதிதாசன், இந்துசமயக்கருத்துக்கள் ப. 75
35. V. Varadhachari Loc-at p. 347.
36. நசன், மு. நூ. ப. 4
37. T. T. D. Inscription Vol.IV. P. 77.
38. கலப்பணி நாள்: 7-5-90.
39 ஸ்ரீ கோபிகிருஷ்ணா, மு.நூ. ப. 96,
40. Madras Epigraphical Report 1902. Madras-Para-56.
41. ப. சுப்புரெட்டியார், சைவசமயவிளக்கு ப. 385.
42. கலம்பணி. நாள்: 7-5-90.
43. நேர்காணல்: நாராயணசெட்டி, நா.வரம் நாள்: 7-6-90.
44. ஆர். இராமமூர்த்திசர்மா, மு.நூ. அத்தியாயம் 14 ப. 111.
45. நசன், மு. நூ. ப. 8.
46. தொ. மு. பா. தொ. மான், மு.நூ. ப. 5-6.
47. D. இரங்காச்சாரியார், மு.நூ. ப. 67:
48. ப. அருணாசலம், மு.நூ. ப. 88.
49. களப்பணி: நாள்: 7-5.90.
50. தொ. மு. பா. தொ. மான் மு.நூ. ப. 37.
61. மேலது, ப. 38.
52. அ. சண்முகப்பிள்ளை, இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை ப. 188-190.

# இயல் மூன்று

3-0 முன்னுரை
3-1-1 வழிபாடு-விளக்கம்
3-1-2 வழிபாட்டின் வளர்ச்சி

3-2-0 நாராயணவனம் திருக்கோயில் வழிபாடு

3-2-1 நாள் அடிப்படையின
3-2-2 கிழமை அடிப்படையின
3-2-3 திங்களிருமுறை அடிப்படையின
3-2-4 திங்கள் அடிப்படையின
3-2-5 விழாக்கால அடிப்படையின
3-2-6 கோள் அடிப்படையின

3-2-1-0 நாள் அடிப்படையின

3-?-1-1 திருப்பள்ளியெழுச்சி
3-2-1-2 தோமாலை சேவை
3-2-1-3 கொலு வழிபாடு
3-2-1-4 ஆயிரத்தெட்டுப் போற்றி வழிபாடு
3-2-1-5 படையல்
3-2-1-6 பலிபீடம்
3-2-1-7 சாற்றுமுறை வழிபாடு
3-2-1-8 நண்பகல் வழிபாடு
3-2-1-9 மாலை வழிபாடு
3-2-1-10 நள்ளிரவு வழிபாடு

3-2-2-0 கிழமை அடிப்படையின

3-2-2-1 வெள்ளிக்கிழமை வழிபாடு
3-2-2-2 சனிக்கிழமை வழிபாடு
3-2 2-3 ஞாயிற்றுக்கிழமை வழிபாடு

3-2-30 திங்களிருமுறை அடிப்படையின

3-2-4-0 திங்கள் அடிப்படையின

3-2-4-1 சித்திரைத் திங்கள் வழிபாடு
3-2-4-2 வைகாசித் திங்கள் வழிபாடு
3-2-4-3 ஆனித் திங்கள் வழிபாடு
3-2-4-4 ஆடித் திங்கள் வழிபாடு
3-2-4-5 ஆவணித் திங்கள் வழிபாடு
3-2-3-6 புரட்டாசித் திங்கள் வழிபாடு
3-2-4-7 ஐப்பசித் திங்கள் வழிபாடு
3-2-4-8 கார்த்திகைத் திங்கள் வழிபாடு
3-2-4-9 மார்கழித் திங்கள் வழிபாடு
3-2-4-10 தைத் திங்கள் வழிபாடு

3-2-4-11 மாசித் திங்கள் வழிபாடு
3-2-4-12 பங்குனித் திங்கள் வழிபாடு

3-2-5-0 விழாக்கால அடிப்படையின

3-2-5-1 வேள்விச் சாலை வழிபாடு
3-2-5-2 கலச வழிபாடு
3-2-5-3 திருநீராட்டு வழிபாடு
3-2-5-4 தெப்ப உலாத்திருமேனி வழிபாடு
3-2-5-5 கார்த்திகை விளக்கு வழிபாடு
3-2-5-6 வைகுண்ட ஏகாதசி வழிபாடு
3-2-5-7 பங்குனி உத்திர வழிபாடு

3-2-6-0கோள் அடிப்படையின

3-2-6-1 திருவோணக்கோள் வழிபாடு
3-2-6-2 புணர்பூசக்கோள் வழிபாடு
3-2-6-3 இரேவதிக்கோர் வழிபாடு

3-3-0 வழிபாட்டுச் செயல்கள்

3-3-1 ஆடைகளணிதல்
3-3-2 மலரிடல்
3-3-3-0 அணிகலணிதல்

3-3-3-1 மூலவருக்குரிய அணிகலன்கள்
3-3-3-2 உலாதிருமேனிக்குரிய அணிகலன்கள்
3-3-3-3 தாயாருக்குரிய அணிகலன்கள்
3-3-4 படையல்கள்
3-3-5 தீபாராதனை
3-3-5-1 தீபாராதனை முறைகள்

3-4-0 வழிபாடும் பிறவும்

3-4-1 வழிபாடும் பக்தியும்
3-4-2 வழிபாடும் கோயிலும்
3-4-3 வழிபாடும் இசையும்
3-4-4 வழிபாடும் தேரும்
3-4-5 வழிபாடும் திருவிழாவும்
3-4-6 வழிபாடும் வாழ்வும்

3-5-0 வழிபாடு செய்வோர் பரம்பரை பற்றிய செய்திகள்
3-6-0 வழிபாடும் அர்ச்சகரும்
3-7-0 வழிபாடும் பக்தர்களும்
3-8-0 வழிபாடும் காணிக்கையும்

# அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் வழிபாடுகள்

## 3.0 முன்னுரை

*மனிதர்களுள் பெரும்பாலோர் பக்தியில் ஈடுபட்டுக் கோயில் வழிபாடுகளைக் கடைபிடித்து வருகின்றனர். வழிபாடுகளுள் சிறந்து விளங்குவது கோயில் வழிபாடாகும். இவ்வியலில் வழிபாட்டின் விளக்கம், தோற்றம், வளர்ச்சி ஆகியனவும், நாராயணவனம் கோயிலில் நடைபெறும் நாள், கிழமை, திங்களிருமுறை, திங்கள், விழாக்காலம், கோள் ஆகியவற்றின் அடிப்படையில் நடக்கும் வழிபாடுகள் ஆகியனவும் விளக்கப்பெறுகின்றன.*

*நாள் அடிப்படையின வழிபாட்டில் நாள்தோறும் இறைவனுக்கு இத்திருக்கோயிலில் செய்யப்பெறும் வழிபாடு ஆயப்பெறுகிறது. கிழமை வழிபாட்டில் வெள்ளிக்கிழமை, சனிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை ஆகிய கிழமைகளில் நடைபெறும் வழிபாடு பற்றியும், திங்களிருமுறை வழிபாடு பற்றியும் ஆயப்படுகின்றன. திங்கள் வழிபாட்டில் சித்திரைத் திங்களில் தொடங்கி, பங்குனித் திங்கள்வரை வரிசையாகப் பன்னிரண்டு திங்களிலும் நடைபெறும் வழிபாடு ஆயப்பெறுகிறது. விழாக்கால அடிப்படையின, கோள் அடிப்படையின பற்றியும் வழிபாட்டுச் செயல்களில் மலரிடல், அணிகலனணிதல் படையல், தீபாராதனை ஆகியன பற்றியும் இவ்வியலில் கூறப்படுகின்றன. மேலும் வழிபாடும் பிறவும் என்ற தலைப்பில் பக்தி, ஆலயம், இசை, தேர், திருவிழா, வாழ்வு வழிபாட்டுடன் எப்படித் தொடர்பு கொண்டுள்ளன என்பதனையும், வழிபாடு செய்வோர் பரம்பரை, வழிபாட்டில் அர்ச்சகர், பக்தர், காணிக்கை முதலியவற்றைப்பற்றியும் கூறப்பெற்றுள்ளன.*

### 3-1-1 வழிபாடு விளக்கம்

வழிபடு என்ற சொல்லே வழிபாடு என்று காலப்போக்கில் மாறியிருக்க வேண்டும். 'படு' என்னும் துணைவினையே 'பாடு' என்று முதல்நிலை திரிந்த தொழிற்பெயராக மாறியுள்ளது. 'வழிபாடு' என்ற சொல் 'வழியிற்செல்லுகை' (Proceedings on the way) 'பின்பற்றுகை' (following), 'வணக்கம்' (Reverence, adoration) 'பூசனை' Ritual worship) என்ற பொருள்களைக் கூறுகின்றது (Tamil Lexicon)[1]; 'வணக்கம்' என்ற பொருளைத் தருகின்றது "செந்தமிழ் அகராதி"[2]; வணக்கம், கோட்பாடு என்ற பொருள்களைத் தருகிறது "நற்காலத்தமிழ் அகராதி"[3]; "பூசனை" என்று குறிப்பிடுகிறது "பிங்கல நிகண்டு"[4]; "வணக்கம், வழியிற் செல்லுகை, பின்பற்றுகை, பூசனை, சமயக்கோட்பாடு என்ற பொருள்களை வழங்குகிறது "கழகத்தமிழ் அகராதி."[5]

எனவே, வழிபாடு என்ற சொல்லுக்கு வணக்கம், பூசனை, சமயக் கோட்பாடு ஆகிய பொருள்கள் பொதுவாகக் காணப்படுகின்றன.

"கடவுளையோ கடவுளர்களையோ, உயிர் உள்ளவற்றையோ உயிர் இல்லாதவற்றையோ வழிபாட்டுச் சொற்களாகக் கொண்டு வழிபடுவதை வழிபாடு எனலாம்"[6] என்று ஆங்கிலக் கலைக்களஞ்சியம் கூறுகின்றது.

மனிதன் இவ்வுலகத் துன்பத்தினின்று விடுதலைபெற்று நல்வாழ்வு வாழ விரும்புகிறான். அதற்கு உறுதுணையாக ஓர் ஆற்றல் வேண்டுமென விழைகிறான். "கடவுள் என்ற ஆற்றலே பிறர் தர முடியாததைத் தனக்கு அளிக்குமெனக் கருதி அவ்வாற்றலையே வழிபடுகிறான்"[7] என்று சுந்தரம்பிள்ளை கூறுகிறார். எனவே, தன்னைவிடப் பெரிய, தன்னை இயக்குகின்ற ஒரு சக்தியை உணர்ந்து வழி நிற்றலே, வழிபாடு என்று உணரலாம்.

### 3-1-2 வழிபாட்டின் தோற்றம்

வழிபாடு மனிதனுடைய அச்ச உணர்விலிருந்தும், குற்ற உணர்விலிருந்தும் உண்டாகியிருக்கலாம். இறை வழிபாடு தொன்று தொட்டு இருந்துவருகிறது. கோயில்கள் தோன்றிய பின்னர் வழிபாடு தோன்றியிருக்கலாம். மனித வளர்ச்சிக்

கேற்றவாறும், காலத்திற்கேற்றவாறும் வழிபாட்டில் மாற்றம் தோன்றலாயிற்று.

"மக்கள் மலை முகட்டிலும், கடற்கரையிலும் நதிக்கரை யோரங்களிலும் வாழ்ந்தனர். இயற்கையாக அமையப்பெற்ற மழை, இடி முதலியவற்றின் இடையூறுக்கு அஞ்சி வாழத் தலைப்பட்டனர். அவ்வச்சத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள மேற்கூறியவற்றிற்கு வழிபாடு செய்ய முற்பட்டனர். பின் கல்லையும் மண்ணையும், மரத்தையும், மிருகத்தையும் வணங்கத் தலைப்பட்டவர்களே தாங்கள் வணங்கிய தெய்வங் களுக்கு உருவங்களை அமைத்திருக்கிறார்கள். அந்த உருவங் களைச் சுற்றிக் கோயில்களை அமைத்துள்ளனர்"[8] என்பர்.

"புராண மக்கட் கூட்டத்தினர் சருவளத்தையும் பயிர் வளத்தையும் ஒருங்கே பெறுவதற்காகவே மந்திரங்களைக் கையாண்டனர். அதன் தருக்க ரீதியான முடிவாக வழிபாடு தோன்றியிருக்கலாமெனக"[9] கூறுகிறார் கைலாசபதி.

மேற்கூறிய இரு அறிஞர்களின் கருத்திலிருந்து, அச்சத்தால் வழிபாடு தோன்றிப் பின்னர் உருவ வழிபாடு அளவிற்கு மாறியுள்ள வளர்ச்சியைக் காணமுடிகிறது.

### 3-1-3 வழிபாட்டின் வளர்ச்சி

மேற்கூறிய முறையில் தோன்றிய தனிமனித வழிபாடு இறைவழிபாடாக மாற்றம் அடைந்து, பின் கோயில் வழிபாடாய் அமைந்திருக்கலாம். கோயில்கள் வளர, வளர வழிபாடும் வளர்ந்து வளர்ச்சியடையலாயிற்று. சங்க காலத்தி லிருந்து இன்றுவரை மன்னர்களின் காலத்தில் வழிபாடு வளர்ச்சியடைந்திருந்ததை இலக்கியங்களின் வாயிலாகக் காண முடிகிறது.

தொல்காப்பியத்தில் வருகின்ற "வழிபடு தெய்வம்",[10] "வழிபடு கிழமை"[11], "வழிபாடு மறுத்தல்"[12] என்ற சொற் றொடர்களுக்கு 'வணக்கம்' என்ற பொருளே வழங்கப் படுகின்றது. "வழிபடுவோரை வல்லறி தீயே!"[13] எனவரும் அடியில் வழிபடுவோம் என்பது "வணங்குதல்" என்ற பொருளிலே ஆளப்படுகிறது. "வழிபடல் சூழ்ந்திசின் அவருடைய நாட்டே"[14] என்ற அடியில் வரும் 'வழிபடல்' என்பு தற்குச் செல்லுதல் என்ற பொருள் கூறப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரத்தில் "வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்"[15] "கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்"[16] என்ற அடிகள் இடம் பெற்றுள்ளன. அவ்வடிகளில் உள்ள "வழிபடு, வழிபாடு" என்ற சொற்களுக்கு 'வணங்குதல்' என்ற பொருள் கூறப்பட்டுள்ளது.

"வழிபடு வல்லுதலால்"[17] என்ற நாலடியார் பாடலில் வழிபடு என்பதற்குப் "பின்பற்றுதல்" என்ற பொருள் வழங்கப் படுகிறது. திருக்கோவையாரில் "மதிநுதலியை வழிபடுத்து"[18] என்ற தொடரில் 'வழிபடுத்து' என்பது 'பயனுமாதல்' என்ற பொருளைக் குறிக்கின்றது. "அமரர் கோன் வழிபட்டால்"[19] என்ற திருவாய்மொழி நூற்றந்தாதியில் 'வழிபட்டால்' என்ற சொல் "நேர் செல்லுதல்" எனும் பொருளைத் தருகின்றது.

காஞ்சிப் புராணத்தில் "இருமொழியும் வழிபடுத்தார்"[20] என்ற தொடரில் வழிபடுத்தார் என்பதற்குச் சீர்திருத்தல் என்ற பொருள் கூறப்பட்டுள்ளது.

மேற்கண்ட இலக்கியங்களிலிருந்து 'வழிபாடு' என்பதற்கு, கோட்பாடு, சீர்திருத்தல், செல்லுதல், பின்பற்றுகை, வணங்குதல் என்ற பொருள்கள் வழங்கப்பட்டுள்ளதை அறியலாம். முன்னோர் காட்டிய அல்லது வகுத்த வழியில் செல்லுதலே வழிபாடு என்று கருதப்பட்டிருக்க வேண்டும். வழிபாடு என்ற சொல்லுக்கு முக்தியாகிய பேரின்ப நிலையை அடைய இறைவனை வழிபட வேண்டும் எனும் பொருளினையும் கொள்ளலாம். இக்கருத்து பிற்காலத்தில் தோன்றி வழிபாடு என்ற பொருளில் வணங்குதல் நிலை பெற்றிருக்கவேண்டும்.

## 3-2-0 நாராயணவனம் திருக்கோயில் வழிபாடு

வழிபாடு இரண்டு வகைப்படும். ஒன்று அக வழிபாடு, மற்றொன்று, புறவழிபாடு. புறவழிபாட்டில் தேர்ந்த பிறகே, அகவழிபாட்டிற்குச் செல்லும் தகுதி வந்தமையும்.

நாயன்மார்கள், ஆழ்வார்கள், துறவிகள் முதலானோர் இறைவனைத் தம் மனக்கோயிலில் வைத்தே வழிபாடு செய்த னர். அவ்வாறு அகவழிபாடு செய்வதற்குரிய தகுதி பெறுவ தற்குப் புறவழிபாடு உதவுகிறது.

இப் புறவழிபாட்டிற்காகவே கோயில்கள் கட்டப்பெற்றுள் ளன. அன்பெனும் பக்தியைக் கொடுத்து, அருள் எனும் சக்தி யைப் பெறுவதே வழிபாட்டின் நோக்கமாக அமைந்துள்ளது.

கோயில் வழிபாடு மூன்று வகையாகப் பகுத்துரைக்கப் பட்டுள்ளது. அவை,

1. தினசரி வழிபாடு (நித்தியம்)
2. திருவிழா வழிபாடு (நைமித்திகம்)
3. வேள்வி வழிபாடு (காமியம்)

இத்திருக்கோயிலில் வைகாணச ஆகம முறைப்படி வழிபாடு நடைபெறுகிறது.

## 3-2-1-0 நாள் அடிப்படையின

நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலில் நாள் அடிப்படையில் நடைபெறும் வழிபாடு பற்றிப் பின்வருமாறு கூறலாம்.

நாள் வழிபாட்டினை ஐந்து வேளை வழிபாடாகப் பகுத்துள்ளனர்.

1. விடியற்காலை வழிபாடு (திருவனந்தல்)
2. காலை வழிபாடு (காலச்சந்தி)
3. நண்பகல் வழிபாடு (உச்சிக்காலம்)
4. மாலை வழிபாடு (சாயரட்சை)
5. இரவு வழிபாடு (அர்த்த சாமம்)

மேற்கூறிய ஐந்து வேளை வழிபாடுகளும் இத் திருக்கோயிலில் நிகழ்த்தப்பெறுகின்றன.

### 3-2-1-1 திருப்பள்ளியெழுச்சி

காலை ஆறுமுதல் ஆறு முப்பது மணிக்குள்ளாக இறைவனைப் பள்ளியெழுச்சி செய்யும் வழிபாடும் நடைபெறுகிறது. இதற்குத் திருவனந்தல் என்று வட மொழியில் அழைப்பர். இறைவனின் முதற்பார்வைக்குப் பசுவைக்காட்டி, ஆரத்தி காட்டப் பெற்றுப் பசும்பாலைப் படையலாகப் படைப்பர். இவ்வழிபாட்டின் போது பூபாளப் பண்ணில் இசையெழுப்புவர்.

திருப்பள்ளியெழுச்சி வழிபாடு முடிவுற்றதும், காலை வேளை வழிபாட்டை (காலச் சந்தி) காலை ஏழு முப்பது மணித்துளி முதல் எட்டு மணிக்குள்ளாக நடத்துவர்.




இறைவனின் பூசைக்குச் சிறிய திருவடியிலிருந்து புதிய நீர்க்குடத்தில் புதியநீரை, குடை, சாமரம், தீவட்டி, யானை ஆகிய மரியாதைகளுடன், மேளதாள இசை முழங்கக் காலை எட்டு மணிக்குள்ளாகக் கொண்டுவந்து காலை பூசை நிகழ்த்துவர்.

### 3-2-1-2 ஹோமாலை சேவை

இவ்வழிபாடு காலை எட்டு முப்பது முதல் எட்டு ஐம்பது மணிக்குள் நடைபெறும். இவ்வழிபாட்டில் போக சீனிவாசர், மூலவர் வெங்கடேசுவார், விழாக்காலத்திருமேனி (உற்சவர்) ஆகிய மூவருக்கும் பால், தயிர் முதலியவற்றால் திருமுழுக்குச் செய்வர். பின் ஆடை, மலர் முதலியவற்றால் அலங்காரம்

செய்யப்பெறும். இறைவனுக்கு "ஆறுவகை"[27] பணிவிடைகளால் வழிபாடு செய்யவேண்டும் என்பது நெடுங்காலமாக மேற்கொள்ளப் பெற்று வரும் வழக்கமாகும். நாராயணவனம் கோயிலும் இம்முறையில் அமைந்த வழிபாடு நடைமுறையில் உள்ளது.

இத் தோமாலை சேவை வழிபாட்டில் பிரபந்தமும் மறையும் ஓதப்பெறுகின்றன. பிரபந்தத்திலுள்ள முதல் பத்துப்பாடல்களும் திருப்பாவையிலுள்ள முப்பது பாடல்களும் விற்பன்னர்களால் பாடப்பெறுகின்றன.

"கனையிருளகன்றது காலையும் பொழுதாய்"

எனத் தொடங்கும் பிரபந்தப் பாடலும்.

"குத்துவிளக்கெறியக் கோட்டுக் காற்கட்டில் மேல்
.........................................
.........................................
தத்துவமன்று தகவலோர் எம்பாவாய்"[28]

என்னும் திருப்பாவைப் பாடலும் ஆகும்.

### 3-2-1-3 கொலு வழிபாடு

இக் கொலு வழிபாடு காலையில் எட்டு நாற்பத்தைந்து முதல் ஒன்பது மணிக்குள் நடைபெறும். மகா மண்டபத்தில் உள்ள வெள்ளிச் சிம்மாசனத்தில் சீநிவாச மூர்த்தியை எழுந்தருளச் செய்து, ஆறுவகைப் பணிவிடைகள் செய்வர். பெருமாளுக்கு எள்பொடியைப் படையலாகப் படைத்து ஆரத்தி காட்டுவர். அர்ச்சகருக்கு "மாத்ராதானம்"[24] வழங்கியதும், ஓதுவார்கள் "பஞ்சாங்க சிரவணம்"[25] என்னும் வழிபாட்டைச் செய்வர். இவ்வழிபாடு உலக நன்மைக்காகச் செயயப்பெறும். இறைவனுக்கு ஆரத்தி காட்டி இக்கொலு வழிபாட்டை முடிப்பர்.

### 3-2-1-4 ஆயிரத்தெட்டு போற்றி வழிபாடு

நாராயணவனம் திருக்கோயிலில் வெங்கடேசுவரப் பெருமாளுக்கு ஆயிரத்தெட்டுப் போற்றி வழிபாடு நடைபெற்று

வருகின்றது. இவ்வூரை ஆண்டுவந்த மன்னர்களின்கீழ் இத் திருக்கோயில் இருந்தபோது மன்னர் பெயர், பிரிவு, கோள் ஆகியவற்றைக் கூறி இறைவனுக்குப் பூசை செய்துவந்தனர். இத் திருக்கோயில் திருமலை திருப்பதி தேவத்தான ஆணையின் கீழ் வந்ததிலிருந்து கோயில் நிர்வாக அலுவலகரின் பெயர், கோள், பிரிவுமிது "சங்கல்பம்"[26] செய்து இறைவனுக்கு ஆயிரத்தெட்டுப் போற்றி செய்து வருகின்றனர். அடுத்து இறைவனுக்கு "ஆலவட்டம்[27] வீசி ஆரத்தி காட்டுவர்.

### 3-2-1-5 படையல்

இறைவனுக்குத் திருவமுது படைப்பர். திருவமுது படைத்தப்பின் தெய்வப் படையலை மெய்யன்பர்களுக்கு வழங்குவர். முதன்முதலில் இறைவனுக்குத் திருவமுது படைக்குமுன் பெரிய மணியை மேள இசையுடன் ஒலிக்கச் செய்வர். தயிர்ச்சோறு, வெறுஞ்சோறு இறைவனுக்குப் படைப்பர். தொடர்ந்து தாயார், இராமர், ஆண்டாள், வேள்விச்சாலை, பெரியதிருவடி, சிறிய திருவடி ஆகிய சிற்றாலயங்களுக்கும் இசையுடன் திருவமுது படைப்பர். இத்திருவமுதைக் கோயிலிலுள்ள மடப்பள்ளியில் தயாரிப்பர். இத் தெய்வப் படையல்களில் அர்ச்சகர்களுக்குரிய பங்குரிமை அளிக்கப்பெறும். மீதியுள்ளவற்றை மெய்யன்பர்களுக்கு வழங்குவர்.

இறைவனுக்கும் மற்றுமுள்ள சிற்றாலயங்களுக்கும் திருவமுது படைத்தபின், பிரம்மன், இந்திரன், அக்கினி, எமன், வருணன், காற்று, குபேரன், சிவன், ஈசானியன், பெரியபலிபீடம், பஞ்சபூதபலி, பிசாசு முதலானோர்களுக்கும் படைப்பர்.

### 3-2-1-6 பலி பீடம்

இராச கோபுரத்தைக் கடந்து உள்ளே கோயிலுக்குச் செல்லுமுன் காட்சிக்கு வருவது பலிபீடம் ஆகும். அதனருகில் சென்று வீழ்ந்து வணங்கவேண்டும். வீழ்ந்து வணங்கும்போது மனதில் எண்ணும் எண்ணமே மிக முக்கியமானது. பலிபீடத்தின் முன் வீழ்ந்து வணங்கும்போது தனது கீழ்மையான இயல்புகளையெல்லாம் அந்த இடத்திலேயே பலி கொடுக்கப் பட்டன, இனி அவை தலையெடுப்பதற்கு அவகாசம் இல்லை

என்று ஆழ்ந்து எண்ணுதல் வேண்டும். மனிதனிடத்திலுள்ள கீழ்மையெல்லாம் அங்குக் கீழே வீழ்ந்துவிட்டது. மேலான எண்ணமே எஞ்சியிருக்கிறது என்னும் எண்ணத்துடன் மனிதன் எழவேண்டும் என்பதாகும்.

'இறைவனை வணங்கச் செல்லும்முன் நம் மனத்தில் உள்ள ஆசைகளையும். ஆசாபாசங்களையும் பிறவகைக் குற்றங் களையும் முதலில் பலியிடுதல் வேண்டும் என்பது பலிபீடம் உணர்த்தும் உண்மைப் பொருளாகும். பலிபீடத்தின் முன்பாக நம் குற்றங்களையெல்லாம் பலி கொடுத்துவிட்டால் நம் உள்ளம் உயர்ந்து காணப்படும். பலி கொடுத்தவன் உள்ளம் உயர்ந்து நிற்கும் என்பதை உணர்த்தவே உயர்ந்து காணப் படும் சொடிமரம் பலி பீடத்தைச் சார்ந்து காணப்படுகிறது"[38] என்பர்.

மனிதனுக்கு நல்ல எண்ணம் ஏற்பட வேண்டும் என்ற கருத்துத் தெளிவாகிறது. தீய குணங்களைக் கடைபிடிக்கக் கூடாது என்பதும், தீயவற்றை மனதிலும் சிந்திக்கக் கூடாது என்பதும் இதனால் உணர்த்தப்பெறும் உண்மையாகும்.

நல்லனவற்றையே எண்ணவேண்டும், சிந்திக்க வேண்டும், அவ்வழியே செய்தல் வேண்டும். ஒவ்வொருவரும் தீங்கு விளை விக்கக்கூடாது என்பதற்காகதான் அத் தீயவற்றைச் சிந்திக்கக் கூடாது என்றனர் நம் முன்னோர்கள்.

இறைவனை வணங்கச் செல்லும்போது மனதில் உள்ள சிற்றின்ப எண்ணங்களையும், புலன் உணர்வுகளையும் பலியிட்டு அர்ப்பணித்து அதன்பிறகு கோயிலின் உள்ளே செல்லவேண்டும். இதற்காகவே கோயில்களில் பலிபீடங்கள் அமைக்கப்பெற்றுள்ளன அதனருகில் கொடிமரம் அமைத்தற் குரிய காரணத்தையும் மனிதன் உணர்ந்துள்ளான் என்பது தெரியவருகிறது.

கோயிலுக்குச் செல்கின்ற யாவருக்கும் கொடிமரம்போல் உயர்ந்த எண்ணங்கள், உயர்ந்த கருத்துக்கள் மனதில் தோன்ற வேண்டும் என்ற உண்மை இதனால் தெரிகிறது.

### 3-2-1-7 சாற்றுமுறை வழிபாடு

"திருவமுது வழிபாடு நடைபெற்றபின் "சாற்றுமுறை"[39] நடைபெறும். திருவமுது இட்ட பின் இறைவன் கருவறை

யிலுள்ள திரையை நீக்குவர். பின் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தச் சாற்று முறை, திருமறை விற்பன்னர்களால் நடத்தப் பெறும்.

சாற்றுமுறை நடைபெற்றதும் இறைவனுக்கு ஆரத்திகாட்டி ஆலவட்டம் வீசுவர் அர்ச்சகர் திருமறைவிற்பன்னர்களுக்கும் மறை குழுவினர்களுக்கும் புனிதநீர் வழங்கிச் சடாரி சாய்ப்பர். இதைத் தொடர்ந்து முற்பகல் பத்து முப்பது முதல் பதினொன்று முப்பது மணி வரை இறைவனின் சர்வ தர்ம தரிசனம் மெய்யன்பர்களுக்கு வழங்கப்பெறும்.

3 2-1-8 நண்பகல் வழிபாடு

சாற்றுமுறை வழிபாடு முடிவுற்றதும் நண்பகல் வழிபாடு பதினொன்று முப்பது மணிக்கு நடைபெறும். அச்சமயத்தில் புதிய நீர்க்குடத்தை இறைவன் கருவறைக்கு எடுத்துச் சென்றதும் சங்கல்பம் செய்து நூற்றெட்டுப் போற்றிகள் போற்றி இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்வர். பின் தூப தீபங்கள் காட்டிப் புளியோதரையைப் படைப்பர். இதைத் தொடர்ந்து அருள்மிகு பத்மாவதித் தாயாருக்கும் இப் படையலைப் படைப்பர். இவ்வழிபாட்டின்போது மேள இசைகள் முழக்க பெரிய மணியையும் ஒலிப்பர். சரியாக நண்பகல் பன்னிரண்டு மணிக்குக் கோயில் சாத்தப்பெறும்.

3-2-1-9 மாலை வழிபாடு

மாலை நான்கு மணிக்குக் கோயில் திறக்கப்பெறும். மாலை ஆறு மணிக்கு மாலை வேளை வழிபாடு தொடங்க மேள இசையை முழக்குவர்.

திருமுழுக்குக்குடம் இறைவன் கருவறைக்கு எடுத்துச் சென்றதும் தோமாலை சேவையைத் துவக்குவர்.

வழக்கப்படி இறைவன் திருமேனியை மலரால் அழகு செய்து, ஆரத்தி காட்டித் திருவமுது படைப்பர். இம் மாலை வேளை வழிபாட்டில் மிளகுப் பொங்கலும், வெறுஞ்சோறும் தோசையும் இறைவனின் படையலாகும். இதைத் தொடர்ந்து பலிபீடங்களுக்கும் திருவமுது படைக்கப்பெறும். பின்பு சாற்று முறை வழிபாடு நிகழும். சாற்றுமுறையின்போது பாடப் பெறும் பாடலுள் இரண்டு இங்குக் குறிக்கப்பெறுகின்றன.

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா—உன்
சேவடி செல்வி திருக்காப்பு"[30]

"கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன் என்னப்பனில்
நண்ணித் தென்குருகூர் நம்பி என்றக்கால்
அண்ணிக்கும் அமுதூ றுமென் நாவுக்கே''[31]

இவ்விரண்டு பாடல்கள் பாடப்பெற்றதும் இரவு ஏழு முதல் எட்டு நாற்பத்தைந்து மணிவரை, சர்வ தர்ம தரிசனம் நடைபெறும்.

3-2-1-10 நள்ளிரவு வழிபாடு (ஏகாந்த சேவை)

இரவு 8-45 மணிக்கு இறைவன் கருவறைக்கு முன்பகுதியில் அந்தராடத்தில் ஊஞ்சல் கட்டப்பட்டு விரிப்புகளின்மேல் மலர் அலங்காரம் செய்து குராளம் அமைப்பர். இறைவனுக்குப் பழங்களைப் படையலாகப் படைப்பர். ஆலவட்டம் காட்டி, சாமரம் வீசி, போகசீநிவாச மூர்த்தியை அவ்வூஞ்சலில் பள்ளியருளச் செய்வர். திரை நீக்கி இறைவன் திருமேனிக்கு ஆரத்தி காட்டுவர். இவ்வழிபாட்டில் இறைவனுக்கு இசையுடன் பரிமளங்கள்—வாசனைப் பொருட்களைப் படைப்பர். மற்ற தேவதைகளையும் மறைமுறைப்படி பள்ளியருளச் செய்வர். இவ்வழிபாடு முடிவுற்றதும் இறைவன்மீது தாலாட்டுப்பாடல் பாடி மெய்யன்பர்களுக்குப் பால் பழம் வழங்குவர். இரவு ஒன்பது மணிக்குக் கோயில் கதவு சாத்தப்பெற்று முத்திரை வைக்கப்பெறும் இத்துடன் நாள்வழிபாடு முடிவுறும்.

## 3-2-2-0 கிழமை அடிப்படையின

அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலில் கிழமை வழிபாடு தொன்றுதொட்டு நடைபெற்று வருகின்றது. இக் கிழமை வழிபாடு, வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய நாட்களில் நடைபெறும்.

3-2-2-1 வெள்ளிக்கிழமை வழிபாடு

கிழமை வழிபாட்டில் வெள்ளிக்கிழமைதோறும் பெருமாளுக்கும், நாயாருக்கும், விழாக்காலத் திருமேனிக்கும்

(உற்சவர்) திருமுழுக்கு நடத்தப்பெறும். அன்று சிறப்பாக வெண்பொங்கல் படையல் படைப்பர். இவ்வெள்ளிக்கிழமை வழிபாடு அருள்மிகு பத்மாவதித் தாயாருக்கு மட்டுமே சிறப்பாகச் செய்யப்பெற்று வருகின்றது.

மாலையில் அருள்மிகு பத்மாவதித் தாயாருக்கு மட்டுமே கோயிலின் உள்ளே கேடயத்தில் திருச்சுற்று உலா நடத்தப் பெறும். பின் தாயாரை ஊஞ்சலில் எழுந்தருளச் செய்து ஊஞ்சற் பாடலைப் பாடுவர். அடுத்துத் தாயாரைத் தாயார் சிற்றாலயத்திற்கு எழுந்தருளச் செய்து அங்குத் தோசைப் படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டப்பெறும். இச்சமயத்தில் சாற்றுமுறை நிகழ்த்துவர், பிரபந்தத்தில் உள்ள பல பாடல்களைப் பாடுவர். அவற்றுள் "தையொரு திங்களும்"[32] என்று தொடங்கும் நாச்சியார் திருமொழியும் இடம்பெறும். பின் மெய்யன்பர்களுக்குத் தெய்வப் படையலை வழங்குவர்.

### 3-2-2-2 சனிக்கிழமை வழிபாடு

ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் இராமருக்குக் காலையில் பால், தயிர், தேன், இளநீர், எலுமிச்சை, சந்தனம் ஆகிய வற்றால் திருமுழுக்குச் செய்யப்பெறும். வழக்கம் போல் படையல் படைத்துத் தேங்காயை உடைத்துக் கற்பூர ஆரத்தி காட்டுவர். மாலையில் இராமருக்கு ஆஸ்தானம் என்னும் வழிபாடு நடைபெறும். பின்பு இராமருக்கு மலரால் அணி செய்வர். புளியோதரையைப் படைத்துப் பழங்கள் வைத்துப் பின் தேங்காய் உடைத்து மேள இசையுடன் ஆரத்திக் காட்டுவர். இச்சமயத்தில் "ஆராஅமுதே"[33] என்று தொடங்கும் பிரபந்தப் பாடலைப் பாடுவர். பின் மெய்யன்பர்களுக்குத் தெய்வப் படையலை வழங்குவர்.

### 3-2-2-3 ஞாயிற்றுக்கிழமை வழிபாடு

ஞாயிறுதோறும் பெருமாளுக்கும், ஆஞ்சநேயருக்கும் (அனுமனுக்கும்) பால், தயிர், தேன் ஆகியவற்றால் திருமுழுக்குச் செய்வர். கோயில் பூசையில் உட்புறத்தேயுள்ள திருமேனிகளுக்கும் படையலைப் படைப்பர். இதைத் தொடர்ந்து ஆஞ்சநேயருக்காகவே செய்யப்பெற்றுச் சிறப்புத்

தளிகையான தயிர்ச் சோற்றை அவர் சிற்றாலயத்திற்கு மேள இசையுடன் எடுத்துச்சென்று படைப்பர். இச்சமயத்தில் யசூர் மறை ஓதப்பெறும். இத்துடன் இவ்வழிபாடு முடிவுறும்.

### 3-2-3.0 திங்களிருமுறை அடிப்படையின

இத்திருக்கோயிலில் திங்களிருமுறை வழிபாடுகள் குறிப்பிட்ட ஓரைகளில் நிகழ்த்தப்பெறுகின்றன. ஏகாதசி, துவாதசி அமாவாசை, முழுமதிநாள் ஆகிய நாட்களில் பெருமாளுக்கு மட்டும் வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. மூன்று ஓரைகளில் எவ்வித மாற்றமுமின்றிப் படையல்கள் படைக்கப் பெறும். ஆனால் ஏகாதசியன்று மட்டும் சிறப்புப் படையலாகப் புளியோதரையைப் படைப்பர். மற்ற நாட்களில் பிற வழிபாடு போன்று மாற்றமின்றி நடைபெறும். இவ்வோரை நாட்களில் காலையில் விழாக்காலத் திருமேனிகளுக்கு (உற்சவர்) பால், தயிர், இளநீர், எலுமிச்சை, சந்தனம் ஆகியவற்றால் திருமுழுக்கு நிகழ்த்தப்பெறும். மாலையில் பெருமானை மலரால் அழகு செய்து மாட வீதிவுலா நிகழ்த்துவர். இவ்வுலா முடிவுற்றதும் இறைவனுக்குத் தோசைப் படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். பின் மெய்யன்பர்களுக்குத் தெய்வப்படையலை வழங்குவர். நீராட்டம் என்ற பிரபந்தப் பாடல்களைப் பாடுவர். அவற்றுள் "வெண்ணெ யளந்த"[34] எனத் தொடங்கும் பாடல் இங்குக் குறிக்கத்தக்கது.

### 3-2-4-0 திங்கள் அடிப்படையின

திங்கள்தோறும் சிறப்பிற்கேற்பக் குறிப்பிட்ட நாளில் இறைவனுக்கு நடத்தப்பெறும் வழிபாட்டைத் திங்கள் அடிப்படையிலான வழிபாடு எனக் குறிப்பிடலாம். இத் திருக்கோயிலி பன்னிரண்டு திங்களிலும் வைகானச ஆகம முறைப்படி வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. இங்குச் சித்திரைத் திங்கள் முதல் பங்குனி திங்கள் வரை நடைபெறும் வழிபாடுகள் பற்றி முறையாக விளக்கப்படுகின்றன. இவ் வழிபாடுகளும் அவ்வவ் திங்கட் கோளை அடிப்படையாகக் கொண்டு விளக்கப்பெறுகின்றன.

### 3-2-4-1 சித்திரைத் திங்கள் வழிபாடு

இராமானுசருக்கு இத் திங்களில் திருவாதிரைக் கோளிற்கு ஒன்பது நாட்களுக்கு முன் தொடங்கி அக்கோள் முடிய பத்து

நாட்கள் விழாவும் திருவீதிவுலாவும் நிகழ்த்துவர். பின்பு சாற்றுமுறை நடத்துவர். திருமுழுக்குச் செய்து, மலர்களால் அணி செய்வர். படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டிப் பின் தெய்வப் படையலை மெய்யன்பர் களுக்கு வழங்குவர். இராமானுசர் மீது பாடிய பாடல்களைப் பாடுவர். அவற்றுள் "பூமன்று" எனத் தொடங்கும் பாடல் இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

### 3-2-4-2 வைகாசித் திங்கள் வழிபாடு

இத் திங்களில் திருவோணக் கோளிற்கு முன் ஒன்பது நாட்கள் தொடங்கி அக் கோள் முடிய பத்து நாட்களில் காலை, மாலை இரு வேளைகளிலும் பெருமாளுக்குத் திருவீதிவுலா, திருத்தேர், திருமணம் ஆகியன நிகழ்த்துவர். அதுபோது பெருமாளுக்குச் சிறப்புத் திருமுழுக்கு நடத்தி மலரால் அழகு செய்து, சிறப்புத் தளிகைகளை மேள இசை யுடன் படைப்பர். பின்பு தூபதீப ஆரத்தி காட்டுவர். பிரபந்தக் குழுவினர் பாடல்கள் பாடுவர். விற்பன்னர்கள் மறை ஓதுவர். கோயில் முழுதும் மின்விளக்குகளால் அழகு செய்யப்பெற்றிருக்கும். வானவேடிக்கைகளையும் நடத்துவர். பதினொன்றாம் நாள் மாலையில் திருநீராட்டு விழாவைச் சிறப்பாக நிகழ்த்துவர்.

### 3-2-4-3 ஆனித் திங்கள் வழிபாடு

ஆனித் திங்களில் முதல்நாள் இறைவனுக்கு ஆனிவர ஆஸ்தானம் எனப்பெறும் ஒரு நாள் வழிபாட்டை நிகழ்த்துவர். மகா மண்டபத்தில் பெருமாளுக்குப் பாம்பு ஊர்தியில் ஆஸ்தான வழிபாடு நடைபெறும். இவ் வழிபாட்டில் இறைவனுக்குத் திருமுழுக்கு நடத்தி, ஆடை அணிகலன்கள் அணிவித்து மலரால் அணிசெய்வர். புளியோதரை படை யலைப் படைத்து மேள இசையுடன் கற்பூர ஆரத்தி காட்டுவர். பிரபந்தக் குழுவினர் பிரபந்தப் பாடல்களைப் பாடுவர். திருமறையும் ஓதப்பெறும். இதைத் தொடர்ந்து மெய்யன்பர் களுக்குப் புனித நீரும், தெய்வப் படையலும் வழங்கிச் சடாரி சாய்ப்பர்.

### 3-2-4-4 ஆடித் திங்கள் வழிபாடு

அருள்மிகு ஆண்டாளுக்கு இத் திங்களில் வரும் பூரக் கோளிற்கு எட்டு நாட்களுக்குமுன் விழா தொடங்கப்பெற்று அக்கோள் முடிய ஒன்பது நாட்களிலும் திருவாடிப்பூர விழா நடைபெறும். இவ்வழிபாட்டில் ஆண்டாளுக்குத் திருமுழுக்குச் செய்து ஆடை அணிகலன்கள், மலர்கள் ஆகியவற்றால் அழகு செய்வர். படையல் படைத்து, மேள இசையுடன், கற்பூர ஆரத்தி காட்டுவர். ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை பாடல்கள் பாடப்பெறும் மாலையில் ஆண்டாளுக்குத் திருவீதிவுலா நிகழ்த்துவர். இதைத் தொடர்ந்து மெய்யன்பர் களுக்குத் தெய்வப் படையல் புனிதநீர் வழங்கி சடாரி சாய்ப்பர்.

மேலும் இத்திங்களில் வரும் திருவோணக் கோளில் அருள்மிகு பத்மாவதித் தாயாருக்கு வரலட்சுமி நோன்பு என்கின்ற ஒருநாள் வழிபாடு நடைபெறும். இவ்வழிபாட்டில் தாயாருக்குத் திருமுழுக்குச் செய்தல், படையல், படைத்தல் திருமேனிவுலாவரல் ஆகியன நிகழ்த்துவர். பிரபந்தப் பாடல் பாடப்பெற்று மேள இசையுடன் ஆரத்தி காட்டி மெய்யன்பர் களுக்குத் தெய்வப் படையலை வழங்குவர்.

### 3-2-4-5 ஆவணித் திங்கள் வழிபாடு

ஆவணித்திங்களில் அட்டமி ஓரை, உரோகிணிக்கோளில் பிறந்த கண்ணனுக்குப் பிறந்தநாள் விழா எனும் கிருட்டிண ஜெயந்தி கொண்டாடப்பெறும். ஜெயந்தி என்றால் வடமொழியில் பிறந்த நாள் என்று குறிப்பிடுவர். அன்று மாலையில் கண்ணனுக்குத் திருமுழுக்குச் செய்து, ஆடை அணிகலன், மலர்கள் ஆகியவற்றால் அழகு செய்வர். பால், வெண்ணெய், தயிர், வெல்லம், அதிரசம் ஆகியவற்றைத் திருவமுதாகப் படைப்பர். மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். பெரியாழ்வார் திருமொழிப் பாடல்களும் திருமறையும் ஓதுவர். அப்பாடல்களுள் "வண்ண"[36] எனத் தொடங்கும் பாடல் ஒன்று இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இதைத் தொடர்ந்து மெய்யன்பர்களுக்கும், குழுவினருக்கும் தெய்வப் படையல், புனிதநீர் ஆகியவற்றை வழங்கிப் பின்பு சடாரிச் சாய்ப்பர்.

மறு நாள் காலையில் கண்ணனுக்குத் திருவீதிவுலா நடத்துவர். மாலையில் திருமேனிவுலா (உற்சவர் உலா) நிகழ்த்துவர். கோயில் முன் உள்ள பதினாறு தூண் மண்டபத்தில் பாற்குட உரியடிவிழாவும், சறுக்கு மரம் ஏறும் விழாவும் நிகழ்த்துவர். உரியடி விழாவின்போது பெரியாழ்வார் திருமொழிப் பாடல்களைப் பாடுவர். "உரியை"[37] எனத் தொடங்கும் பாடல் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

### 3-2-4-6 புரட்டாசித் திங்கள் வழிபாடு

அருள்மிகு பத்மாவதித் தாயாருக்கு இத் திங்களில் வரும் நவமி ஒரை முடிய ஒன்பது நாட்களில் நவராத்திரிவிழா நடத்தப்பெறுகின்றது. இவ்விழாவின்போது மாலைதோறும் இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்து ஆடை, அணிகலன், மலர்கள் ஆகியவற்றால் அழகு செய்வர். பின்பு தயிர்ச் சோற்றைப் படையலாகப் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். பிரபந்தப் பாடல்களும் பாடப்பெறும். மெய்யன்பர்களுக்குத் தெய்வப் படையல், புனித நீர் ஆகியவற்றை வழங்குவர். இதைத் தொடர்ந்து இறைவனைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து, கோயில் திருச்சுற்றில் விழாக்காலத் திருமேனிவுலா நிகழ்த்துவர்.

இதே திங்களில் வரும் திருவோணக்கோள் தொடங்கி வரும் பத்து நாட்களில் வேதாந்த தேசிகருக்குத் திருவிழா சிறப்பாக நடத்தப்பெறுகின்றது. அன்று வேதாந்த தேசிகருக்குத் திருமுழுக்கு செய்து ஆடை, அணிகலன்களால் அழகு செய்து புளியோதரையைப் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். இச் சமயத்தில் தேசிகர் பாடிய பிரபந்தப் பாடல்கள் குழுவினரால் பாடப்பெறும். இதைத் தொடர்ந்து தேசிகர் திருமேனிக்குத் திருவீதிவுலா நிகழ்த்துவர்.

### 3-2-4-7 ஐப்பசித் திங்கள் வழிபாடு

ஐப்பசித் திங்களில் வரும் அமாவாசையன்று மாலை இறைவனுக்குத் தீபாவளி ஆஸ்தானம் மகா மண்டபத்திலுள்ள முத்துப் பந்தலில் நிகழ்த்துவர். இது ஒருநாள் வழிபாடாகும். அன்று இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்து ஆடை, அணிகலன், மலர் ஆகியவற்றால் அலங்காரம் செய்வர்.

படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். மெய்யன்பர்களுக்குப் புனித நீர், தெய்வப் படையல் ஆகியவற்றை வழங்குவர்.

மேலும் இத்திங்களில் மணவாள மாமுனிகள் பிறந்தமகக் கோளில் ஒருநாள் சாற்றுமுறை விழா நிகழ்த்துவர். அன்று வழக்கம்போல் மணவாள மாமுனிக்குத் திருமுழுக்கு ஆனபின்பு அழகு செய்வர். படையல் படைத்து, மேள இசையுடன் கற்பூர ஆரத்தி காட்டுவர். அதுபோது மணவாள மாமுனிகள் பாடிய பாடல்கள் சில பாடப்பெறும். அவற்றுள் "உயர்வே"[38] எனத் தொடங்கும் பாடல் இங்குக் குறிப்பிடத்தக்கது. இதைத் தொடர்ந்து மெய்யன்பர்களுக்குத் தெய்வப் படையல் வழங்குவர்.

மேலும் இத்திங்களில் முழுமதிநாள் முதல் ஐந்து நாட்கள் வரை தெப்பத் திருவுலா நடைபெறும். அன்று இறைவன், ஆண்டாள், இராமர் முதலானோரின் திருமேனிகளுக்குத் திருமுழுக்குச் செய்து ஆடை, அணிகலன், மலர் ஆகியவற்றால் அலங்காரம் செய்து படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். மாலையில் தாமரைத் திருக்குளத்தில் மூவருக்கும் தெப்பத் திருவுலா நிகழ்த்துவர். இராமருக்கு ஒருநாளும் ஆண்டாளுக்கு ஒருநாளும் இறைவனுக்கு மூன்று நாட்களும் உலா நிகழ்த்தப்பெறும் தெப்பம் வண்ண விளக்கு களால் அலங்காரம் செய்யப்பெற்றிருக்கும். தெப்பத்தில் பிரபந்தப் பாராயணமும் மேள இசையும் நிகழ்த்துவர். வண்ண விளக்குகளால் இறைவனை அலங்கரித்துப் பெரிய திருவீதிவுலா வருவர்; வானவேடிக்கைகள் நிகழ்த்துவர்; சிறப்பான மேளங் களால் இசை முழக்குவர்.

### 3-2-4-8 கார்த்திகைத் திங்கள் வழிபாடு

கார்த்திகைத் திங்களில் வரும் கிருத்திகைக் கோளன்று இறைவனுக்குத் திருமேனிவுலா நிகழ்த்துவர். அன்று கோயிலில் நூற்றுக்கும் மேற்பட்ட நெய்விளக்குகள் ஏற்றப்படும். கிருத்திகையன்று இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்து ஆடை, அணிகலன், மலர் ஆகியவற்றால் அலங்காரம் செய்வர். படையல் படைத்து மேள இசை முழக்க ஆரத்தி காட்டுவர். பிரபந்தப் பாடல்கள் பாடப்பெறும். இதைத் தொடர்ந்து

மெய்யன்பர்களுக்கும் பிரபந்தக் குழுவினருக்கும் தெய்வப் படையலை வழங்குவர்.

### 3-2-4-9 மார்கழித் திங்கள் வழிபாடு

மார்கழித் திங்களில் வரும் மூலக்கோளில் தொடங்கி உத்திரட்டாதிக் கோள் முடிய ஏழு நாட்களில் அருள்மிகு ஆண்டாளுக்கு நீராட்டு உற்சவம் நடைபெறும். உற்சவ நாட்களில் காலை நேரத்தில் தாமரைத் திருக்குளத்தின் அருகில் அமைந்திருக்கும் நீராட்டு மண்டபத்தில் ஆண்டாளுக்குத் திருமுழுக்கு நடத்திப் படையல் படைப்பர். மேள இசையோடு ஆரத்தி காட்டிப் பிரபந்தப் பாடல் பாடுவர்.

நீராட்டு மண்டபத்திலிருந்து அருள்மிகு பத்மாவதித் தாயாரை அலங்கரித்துக் கோயிலுக்கு உலா சென்று அங்கு எழுந்தருளச் செய்வர். கடைசிநாள் மாலையில் பெருமாளுக்கும் தாயாருக்கும் அலங்காரம் செய்து திருமணம் என்ற மாலை மாற்றல் வழிபாடு செய்வர்.

ஆண்டாள் பாடிய திருப்பாவையை மார்கழித் திங்கள் முழுதும் விடியிற்காலையில் பாடி வழிபாடு செய்வர். இதனோடு திருப்பள்ளியெழுச்சியும் பாடுவர்.

மார்கழித் திங்களில் வரும் ஏகாதசியன்று உற்சவம் நிகழ்த்துவர். இவ்வுற்சவத்தை முன்னிட்டு இறைவனுக்குக் காலையில் சிறப்புத் திருமுழுக்கு நடத்துவர்; அணி செய்து படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர்.

மாலையில் பெருமாளுக்கு மலர்மாலைகள் சாத்தி அணிகலன்களை அணிவித்து அழகு செய்து பெரிய திருவீதிவுலா வருவர். இறைவன் அவையில் வழிபாடும் நிகழ்த்துவர்.

மறுநாள் காலையில் இறைவன் மாடவீதிவுலா வந்து கோயிலிலுள்ள வைகுண்ட வாசலில் நுழைவு தரிசனத்திற்கு எழுந்தருளுவார். அதுபோது மெய்யன்பர்கள் அவ்வைகுண்ட வாசலில் நுழைந்து வருவர். அதன்பின் பெருமாளுக்கும் சக்கரத்தாழ்வாருக்கும் நீராட்டு விழா வழிபாடு நிகழ்த்துவர்.

### 3-2-4-10 தைத் திங்கள் வழிபாடு

தைத்திங்களில் வரும் அசுவணிக்கோளன்று பெருமாளுக்குக் கனும பார்வேட்டை எனும் வேட்டையாடும் மரபைக்குறிக்கும்

உற்சவத்தை நிகழ்த்துவர். இஃது ஒரு நாள் மாலை வழி பாடாகும். அன்று பெருமாள் திருவீதிவுலா வருவர்.

மேலும் இத்திங்களில் சப்தமி ஓரையன்று பெருமாள் நான்கு ஊர்திகளில் காலை முதல் நண்பகல் வரை திருவீதிவுலா வருவார். மாலையில் மூன்று ஊர்திகளில் பெருமாள் உலா வருவார். ஏழு ஊர்திகளாவன: 1. சூரிய பிரபை ஊர்தி 2. பாம்பு ஊர்தி 3. அன்ன ஊர்தி 4. சிம்ம ஊர்தி 5. கற்பகத்தரு 6. முத்துப்பல்லக்கு 7. சந்திரப்பிரபை. இவை யனைத்தும் பெரிய திருவீதிவுலாவாகும். இதனை இரதசப்தமி உற்சவம் என்றழைப்பர். அன்று பெருமாளுக்குச் சிறப்புத் திருமுழுக்கும் நடத்தி அணி செய்து படையல் படைத்து மேள இசையோடு கற்பூர ஆரத்தி காட்டுவர். பிரபந்தப்பாடல்கள் பாடுவர். இதனைத் தொடர்ந்து மெய்யன்பர்களுக்குத் தெய்வப்படையல் வழங்குவர்.

### 3-2-4-11 மாசித் திங்கள் வழிபாடு

மாசித்திங்களில் பெருமாளுக்கு மகக்கோள் முடிய ஐந்து நாட்களில் இலட்சம் போற்றி வழிபாடு நிகழ்த்துவர். அது போது அருள்மிகு பத்மாவதித் தாயாருக்கும் பெருமாளுக்கும் காலையில் திருமுழுக்கு நடத்தி அணி செய்து போற்றிகள் நடத்துவர்.

நண்பகல் பூசையின்போது சர்க்கரைப் பொங்கலும் புளியோதரையும் படைப்பர். மாலையில் 4 மணிக்குப் போற்றி கள் துவங்கி ஏழுமணிக்கு முடிவுறும். இறுதியில் தூப, தீப ஆராதனை காட்டுவர்.

ஐந்தாம் நாள் காலையில் பெருமாளுக்கு மந்திரத் திருமுழுக்குச் செய்து அணி செய்வர். இதனைத் தொடர்ந்து படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். மெய்யன்பர்களுக்குத் தெய்வப்படையல் வழங்குவர்.

இவ்வழிபாடு அறங்காவலர் குழுவின் கீழ் இக்கோவில் இருந்த காலத்தில் 1967ஆம் ஆண்டு வரை நடைபெற்று வந்தது. திருமலை திருப்பதி தேவத்தான நிர்வாகத்தின்கீழ் சேர்க்கப்பட்டபின் இவ்வழிபாடு நடத்தப்பெறுவதில்லை.

### 3-2-4.12 பங்குனித் திங்கள் வழிபாடு

உத்திரக்கோள் இடம்பெறும் இத்திங்களன்று பங்குனி உத்திரவிழா நடைபெறும். இந்நாளன்று பெருமாள், பத்மாவதித் தாயார் ஆகியோரின் விழாக்காலத் திருமேனி களுக்குக் காலையில் திருமுழுக்கு நடத்தி அணி செய்வர். மாலையில் இருவருக்கும் அணிசெய்து திருச்சுற்றுவுலாவும், மலர்மாலை மாற்றல் வழிபாடும் நிகழ்த்துவர். சிறப்புப்படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர்.

நள்ளிரவு வழிபாட்டின்போது சயன உற்சவம் எனப்படும் ஏகாந்தசேவை நிகழ்த்துவர். உத்திரக்கோள் முடிய ஏழு நாட்கள் இவ்விழாவினை நிகழ்த்துவர். மெய்யன்பர்களுக்குத் தெய்வப் படையல், புனிதநீர் தந்து சடாரி சாய்ப்பர்.

மேலும் இத்திங்களில் வரும் அசுவணிக்கோளில் வரும் தெலுங்குப் புத்தாண்டன்று பெருமாளுக்கு ஆட்டுக்கடா ஊர்தியில் உற்சவம் நிகழ்த்துவர். மகாமண்டபத்தில் பெருமாளின் விழாக்காலத் திருமேனிக்குத் திருமுழுக்கு செய்து மலர் அலங்காரம் நடத்தி, படையல் படைப்பர். பின்பு மங்கள சாசனப் பிரபந்தப்பாடல் பாடியதும் பெருமாளுக்குப் பட்டாடை அணிவிப்பர். அதையடுத்து அர்ச்சகர் அந்த ஆண்டின் பலன் முழுதும் படிப்பார். இறுதியில் மெய்யன்பர் களுக்குத் தெய்வப் படையல் வழங்குவர்.

### 3-2-5-0 விழாக்கால அடிப்படையின

விழாக்கால அடிப்படையில் அமையும் வழிபாடுகளுள் வேள்விச்சாலை வழிபாடு, கலச வழிபாடு, திருநீராட்டு வழிபாடு, தெப்ப உற்சவ வழிபாடு, கார்த்திகை விளக்கு வழிபாடு, வைகுண்ட ஏகாதசி வழிபாடு, இலட்சம் போற்றி வழிபாடு, பங்குனி உத்திர வழிபாடு ஆகியன பற்றி இங்குக் கூறப்பெறுகின்றன.

திருவிழாக்காலத்தில் அருள்மிகு கல்யாணவெங்கடேசுவர ருக்கும், அருள்மிகு பத்மாவதித் தாயாருக்கும் பெருந் திருவிழா சமயத்தில் மஞ்சள் பட்டுவேட்டியும், தாமரை வண்ணப் பட்டுச்சேலையும் அணிவிப்பர். அர்ச்சகர் பெருமாளுக்கு வலக் கையிலும், தாயாருக்கு இடக்கையிலும் காப்பு கட்டுவார். இச்சமயத்தில் கெட்டிமேளமும் கல்யாணிப்

பண்ணில் நாதசுரமும் முழக்குவர். பெருமாளுக்குக் கோள் ஆரத்தியும் தூபதீபங்களும் காட்டுவர்.

விழாக்காலத் திருமேனிக்கும், உபயநாச்சியார்களுக்கும், சேனை முதலியாருக்கும், சக்கரத்தாழ்வாருக்கும், காப்புக் கட்டப்பெற்று அவர்களுக்கும் தூபதீப ஆராதனை காட்டுவர். அத் திருமேனிகளுக்கு உட்பட்ட பிரபந்தப் பாடல்களும் மறையும் ஓதுவாரால் ஓதப்பெறும். இத்தகைய வழிபாடு பெருந்திருவிழா, திருமணத்திருவிழா ஆகிய விழாக்களில் நிகழ்த்துவர்.

### 3-2-5-1 வேள்விச்சாலை வழிபாடு

பெருந்திருவிழாவில் விழாவைத் தொடங்கும் சடங்கன்று மாலையில் வேள்விச்சாலை சிறப்பாக அமைக்கப்பெறும். வேள்வி மேடையில் நெல்லைப் பரப்பி அதன்மேல் இலையை வைத்துப் பின் இலையின்மீது அரிசியைப் பரப்புவர். பின்பு அரிசியின்மீது கமலங்கள் வரையப்பெற்ற நூல் சுற்றிய ஒன்பது கலசங்கள் வைக்கப்பெறும். நடுவில் வைக்கப்பெற்றுள்ள கலசம் பெரியதாகவும், முக்கியமான தேவதைக்காகவும் அமையும். இக் கலசத்தின் மேற்புறம் எட்டுக் கமலங்கள் வடிவத்தில் நூலால் சுற்றப்பட்டிருக்கும். வாசனைப் பொருட்களும், புதியநீரும் ஊற்றப்பெற்று. கலசவாயில் மாவிலையும் தேங்காயும் வைக்கப்பெறும்.

அந்த மேடையின் பக்கத்தில் விழாவைத் தொடங்கும் சடங்கில் முறைப்பாலிகைகள் வைக்கப்பெறும்.

விழாவைத் தொடங்கும் சடங்கில் ஓமம் அமைத்துத் தூபதீப ஆராதனை காட்டி படையல் படைப்பர். வேள்விச்சாலை வழிபாடு துவக்கப்பெற்றுப் பத்து நாட்களும் நடைபெறும்.

### 3-2-5-2 கலச வழிபாடு

வேள்விச்சாலையில் கலசமேடையை பசுஞ்சாணத்தால் மெழுகிக் கோலமிட்டு நெல்லைப் பரப்பி அதன்மேல் இலையை வைத்துப் பின் இலையின்மீது அரிசியைப் பரப்புவர். பெரிய கலசம் ஒன்றும் சிறிய கலசம் எட்டும் வைக்கப்பெறும். இக் கலசங்களுக்குத் தாமரை வடிவில் நூலால் சுற்றி அவற்றுள்

வாசனைப் பொருட்களையும், புதியநீரையும் ஊற்றிக் கலச வாயிலில் மாவிலையையும், தேங்காயையும் வைப்பர். இக்கலசங்களுக்குத் தூபதீப ஆராதனை காட்டுவர்.

ஒவ்வொரு கலசத்திற்கும் ஒரு தேவதையை உருவேற்றம் செய்வர். மேடைகளுக்கும், கலசங்களுக்கும் வெண்ணிற ஆடை அணிவிப்பர். திருவிழா முடியும்வரை இக் கலசங்களுக்குத் தூபதீப ஆராதனை காட்டிப் படையல்கள் படைப்பர்.

### 3-2-5-3 திருநீராட்டுவிழா வழிபாடு

பெருந்திருவிழா முடிவிலும், வைகுண்ட துவாதசியன்றும் திருநீராட்டுவிழா வழிபாடு நடத்தப்பெறுகின்றன. இவ்வழி பாட்டினைத் தீர்த்தவாரி வழிபாடு என்று பட்டர்கள் கூறுவர். இவ்வழிபாட்டன்று ஊரின் அருகிலுள்ள அருணா நதிக் கரைக்கோ தாமரைத் திருக்குளக்கரைக்கோ பெருமாளையும் சக்கரத்தாழ்வாரையும் எழுந்தருளச் செய்வர்.

திருமுழுக்கிற்குத் தேவையான பொருட்களான பால், தயிர் இளநீர், தேன், மஞ்சற்பொடி, சந்தனம், தூபம், தீபம், கோள் ஆரத்தி, வெள்ளாடை, சங்கு ஆகியவற்றைப் பெருமாளைத் திருநீராட்டுவதற்கென அமைக்கப்பெற்ற நீராட்டு மண்டபத்திற்கு மேள இசையுடன் எடுத்துச் செல்வர்.

அம் மண்டபத்தில் முதல் முதலாகப் பெருமாளுக்குத் திருமுழுக்குச் செய்வர். அடுத்து அருணா நதிக்கரையில் திருமறையையும், ஆகமங்களையும் ஓதிக்கொண்டே கொட்டு மேளம் முழங்கச் சக்கரத்தாழ்வாரை மூன்றுமுறை நீரில் மூழ்கச் செய்தபின் சிறப்புத் திருமுழுக்கு செய்வர்.

சக்கரத்தாழ்வாரை நீராட்டும்போது பட்டர்களும், மெய்யன்பர்களும் உடன் நீரில் மூழ்குவர்.

இறுதியாக நீராட்டு மண்டபத்தில் பெருமாளை அணி செய்து தூப தீப ஆராதனை காட்டிப் படையல் படைப்பர். திருக்கோயில் திருச்சுற்றில் பெருமாளைத் திருவீதிவுலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

### 3-2-5-4 தெப்ப வழிபாடு

ஐப்பசித் திங்களில் வரும் முழுமதிநாள் முடிய உள்ள ஐந்து நாட்களில் தெப்பத் திருவிழா நடைபெறும். முதல்நாள் இராமருக்கும், இரண்டாம் நாள் ஆண்டாளுக்கும் மற்ற மூன்று நாட்களில் பெருமாளுக்கும் தாமரைத்திருக்குளத்தில் தெப்பத் திருவிழாவை நிகழ்த்துவர்.

தெப்பத் திருவிழா நாட்களில் காலையில் பெருமாளுக்குச் சிறப்புத் திருமுழுக்கு நிகழ்த்தி அணிசெய்து வெண்பொங்கல் படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர்.

மாலையில் கேடயத்தில் பெருமாளுக்குப் பட்டாடை, அணிகலன்கள், மலர்மாலைகள் ஆகியவற்றால் அழகு செய்து பெரிய திருவீதிவுலாவிற்கு எழுந்தருளச் செய்வர். திருவீதிவுலா முடிந்ததும் வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டுள்ள தெப்பத்தில் பெருமாளை எழுந்தருளச் செய்து திருக்குளத்து நீரில் வலம் வரச்செய்வர். திருக்குளத்தில் பெருமாளை முதல்நாள் மூன்று சுற்றும், 2,3,4 ஆம் நாட்களில் ஐந்து சுற்றும், ஐந்தாம் நாளில் ஏழு சுற்றும் வலம் வரச்செய்வர்.

தெப்பத்தில் மறைகள் ஓதி, நாதசுர இசையும் நிகழ்த்துவர். திருக்குளத்தில் நான்கு மூலைகளிலும் பெருமாளுக்கு ஆரத்தி காட்டுவர். தெப்பம் வலம் வந்தபின் பெருமாளை கேடயத்தில் வைத்து திருவீதிகளில் வந்து கோயிலுக்குக் கொண்டுவருவர்.

### 3-2-5-5 கார்த்திகை விளக்கு வழிபாடு

கார்த்திகைத் திங்களில் வரும் கிருத்திகைக் கோளன்று காலையில் பெருமாளுக்குத் திருமுழுக்கு நடத்தி அணிசெய்து, படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். மாலையில் விளக்கு தீ தட்டுக்களைச் சுத்தப்படுத்தி (புனிதமாக்கி) நெய் விளக்குகளை ஏற்றிப் பெருமாளிடம் வைப்பர். திருமறைகள் ஓதி, மலர்களால் போற்றி செய்து கேடயத்தில் பெருமாளை எழுந்தருளச் செய்து உலாவரச் செய்வர்.

பெருமாளுடன் திருவிளக்குகளை எடுத்துச் சென்று பெருமாள், தாயார், இராமர், ஆண்டாள், அனுமார், தேசிகர்,

மாதவர், வரதர், பந்தித் திருக்கோலம் அமைப்பு ஆகியோர் சிற்றாலயங்களிலும், சிறிய கோபுரம், இராசகோபுரம், வேள்விச் சாலை, மண்டபங்கள் ஆகிய இடங்களிலும் வைப்பர். அப்போது அவ்விடங்களில் பெரிய நெய்விளக்குகள் வைத்துத் தூபதீப ஆராதனை காட்டுவர். சிறிய திருவடி சிற்றாலயத்தின் அருகே தழைகளாலான கொட்டகையினுள் விளக்குகளை ஏற்றுவர். இறைவன் திருமேனி உலா முடிந்து கோயிலுக்குள் வந்தபின்பு இறைவனது அவையில் வழிபாடு செய்து மறை ஓதும் குழுவினர்க்குச் சர்க்கரைப் பொங்கலை வழங்குவர்.

3.2.5-6 வைகுண்ட ஏகாதசி வழிபாடு

மார்கழித் திங்களில் வரும் ஏகாதசியன்று வைகுண்ட ஏகாதசி வழிபாடு செய்யப்பெறுகின்றது. அன்று காலையில் பெருமாளுக்கு மந்திரத்தாலான திருமுழுக்குச் செய்வர். மாலையில் பெருமாள் உற்சவரைச் சிறப்பு அலங்காரம் செய்து பெரிய திருவீதிவுலாவிற்கு எழுந்தருளச் செய்வர். திருவீதிவுலா முடிவுற்றுப் பெருமாள் உற்சவர் கோயிலுக்குள் வந்தவுடன் ஆண்டாள் சிற்றாலயத்தில் தாயாருக்கும், பெருமாளுக்கும், மாலை மாற்றல் வழிபாடு நடத்துவர். பின்பு தூப தீப ஆராதனை காட்டிப் படையல் படைப்பர்.

மறுநாள் துவாதசியன்று பெருமாள் உற்சவரை அழகு செய்து மாட வீதிவுலாவாக எடுத்துவந்து கோயிலினுள் வடக்கில் அமைந்திருக்கும் வைகுண்ட வாசல் வழியாகப் பெருமாளை எழுந்தருளச் செய்வர். அப்பொழுது கும்ப ஆரத்தி காட்டிச் சிதறு தேங்காய் உடைப்பர். மெய்யன்பர்கள் வைகுண்ட வாசலில் நுழைந்து பெருமாளிடம் அருள் பெறுவர். பின்பு பெருமாளை அவரது அவைக்கு எழுந்தருளச் செய்வர். இதைத் தொடர்ந்து திருநீராட்டத்திற்குச் சக்கரத்தாழ்வாரையும், பெருமாளையும், தாமரையும் திருக்குளக்கரைக்கு எழுந்தருளச்செய்வர். அங்குத் திருநீராட்டம் முடிந்ததும் இருவரையும் திருக்கோயிலினுள் திருச்சுற்று உலாவரச்செய்து தூப தீப ஆராதனை செய்து படையல் படைப்பர். பின்பு, தெய்வப்படையலை மெய்யன்பர்களுக்கு வழங்குவர்.

3.2.5-7 பங்குனி உத்திர வழிபாடு

பங்குனித் திங்களில் வரும் உத்திரக்கோளன்று இவ்வழிபாடு நடைபெறும். அன்று காலையில் பெருமாளுக்கும் தாயாருக்கும்

மந்திரத்தாலான திருமுழுக்குச் செய்வர். பின்பு பால், தயிர் தேன், மஞ்சள்பொடி, இளநீர். சந்தனம் ஆகியவற்றுடன் திருமுழுக்குச் செய்வர். இருவரையும் மலர், ஆடை, அணிகலன் களால் அலங்கரிப்பர். வெண்பொங்கல், சர்க்கரைப் பொங்கல் ஆகியவற்றைப் படையலாகப் படைப்பர். இதையடுத்து ஆயிரத்தெட்டுப் போற்றிகள் ஓதுவர். மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர்.

மாலையில் தாயாரைக் கேடயத்தில் வைத்து மலரால் அலங்காரம் செய்து, கோயில் திருச்சுற்றில் உலா நடத்துவர். இதையடுத்து ஊஞ்சல் வழிபாடு நிகழ்த்துவர்.

நள்ளிரவு வழிபாட்டின்போது தாயார் சிற்றாலயத்தில் பட்டுமெத்தை அமைத்து மலரால் அழகு செய்வர். நெய்யால் விளக்கேற்றி வாசனைப் பொருட்களை வைத்துப் பெருமாளை யும், உபயநாச்சியார்களையும் அருள்மிகு பத்மாவதித் தாயாரையும் எழுந்தருளச் செய்வர். பின் பால், பழம், அதிரசம் ஆகியவற்றையும் படைப்பர். பின் ஆரத்தி காட்டிப் பள்ளிகொள்ளச் செய்வர்.

### 3-2-6-0 கோள் அடிப்படையின

இத் திருக்கோயிலில் கோள் வழிபாடுகள் குறிப்பிட்டக் கோள் நாட்களில் நடைபெற்று வருகின்றன. திருவோணக் கோள், புனர்பூசக்கோள், இரேவதிக்கோள் ஆகிய கோள் நாட்களில் இக் கோள் வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்று வருகின்றன.

### 3-2-6-1 திருவோணக்கோள் வழிபாடு

இத் திருவோணக்கோள் வழிபாட்டில் பெருமாளுக்கும் வேதாந்த தேசிகருக்கும் காலையில் காலைவேளை பூசைக்கு முன் திருமுழுக்குச் செய்யப்பெறுகின்றது.

மாலையில் பெருமாளை அலங்காரம் செய்து, கேடயத்தில் திருவீதிவுலாவாக எழுந்தருளச் செய்வர்.

பெருமாளுக்குச் சர்க்கரைப் பொங்கலும், வேதாந்த தேசிகருக்குப் புளியோதரையும் படைப்பர். இதனையடுத்துப் பிரபந்தப் பாடல் பாடுவர். பின் குழுவினர்களுக்கும் மெய்யன்பர்களுக்கும் தெய்வப்படையலை வழங்குவர்.

### 3-2-6-2 புனர்பூசக்கோள் வழிபாடு

புனர்பூசக்கோள் இராமரின் பிறந்தநாள் கோளாகும். அன்று காலையில் காலை வேளை பூசைக்கு முன் இராமர், இலக்குவனர், சீதை, அநுமார் முதலானோருக்குத் திருமுழுக்கு நிகழ்த்துவர். திருமுழுக்கு மூலவருக்கும் பெருமாள் உற்சவருக்கும்கூட நடத்தப்பெறும். பின் தூப தீப ஆராதனை காட்டிப் படையல் படைப்பர்.

மாலையில் இராமருக்கு ஆஸ்தானம் செய்யப்பெறுகின்றது. பெருமாளை மலரால் அலங்கரித்து மேள இசையுடன் ஆரத்தி காட்டிப் படையல் படைப்பர். பின்பு குழுவினர்களுக்கும் மெய்யன்பர்களுக்கும் தெய்வப்படையலை வழங்குவர்.

### 3-2-6-3 இரேவதிக்கோள் வழிபாடு

திருவரங்கநாதரின் பிறந்தநாள் கோளான இரேவதி கோளன்று காலையில் திருவரங்கநாதருக்கும், அவரின் உபய நாச்சியார்களுக்கும் திருமுழுக்கு நிகழ்த்துவர். பின் அலங்காரம் செய்து, மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். இதைத் தொடர்ந்து வெறுஞ்சோறு படையல் படைப்பர். பின் நீராட்டப் பிரபந்தப் பாடலைப் பாடுவர். அதையடுத்து குழுவினர்களுக்கும் மெய்யன்பர்களுக்கும் தெய்வப் படையலை வழங்குவர்.

## 3-3-0 வழிபாட்டுச் செயல்கள்

வழிபாட்டுச் செயல்கள் என்ற இப் பகுதியில் மலரிடல், ஆடைகளணிதல், அணிகலனணிதல், படையல், தீபாராதனை என்பனபற்றிக் கூறப்பெறுகின்றன.

### 3-3-1 ஆடைகளணிதல்

பெருமாளுக்குத் திருமுழுக்கு நடத்தியபின் ஆடைகளை அணிவிப்பர். பெருமாளுக்கு அணிவிக்கப்பெறும் ஆடையில் சில விதிமுறைகள் உண்டு. "காலையில் வெண்மை, நண்பகலில் சிவப்பு, மாலையில் மஞ்சள், நள்ளிரவில் கருப்பு, மற்ற காலங்களில் வெண்ணிற ஆடைகளைப் பெருமாளுக்கு அணிவிக்க வேண்டும்"[40] என்பர்.

### 3-3-2 மலரிடல்

பெருமாளுக்கு ஆடைகளை யணிவித்தபின் மலர்கள் அணிவிக்கப்பெறும். காலை, பகல், மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் இறைவனுக்குப் பயன்படுத்தப்பெறும் மலர்கள் இங்குக் குறிப்பிடத்தக்கன.

காலைப் பூசைக்கு வெண்தாமரை, அலரி, புரசு, துளசி, நெய்தல், வில்வம், சங்குமலர், கோவிதாரம், ஓரிலைதாமரை ஆகியன.

நண்பகல் பூசைக்குச் செந்தாமரை, அல்லி, மல்லிகை, சாதிமுல்லை, மருக்கொழுந்து, வெட்டிவேர், துளசி, கசகரிணிகை ஆகியனவாகும்.

மற்ற காலங்களில் விருப்பம்போல் வேறு மலர்களை வழிபாட்டில் பயன்படுத்தலாம் என்பர்.

### 3-3-3-0 அணிகலனணிதல்

மலர்கள் அணிவித்தபின் மூலவருக்கும், தாயாருக்கும், உற்சவருக்கும் தனித்தனியாக அணிகலன்கள் அணிவிப்பர். இதன் சிறப்பு என்னவென்றால் உலகிலுள்ள அணிகலன்களைத் தாம் அணிய இயலாத ஏழை எளியோர்கள் இறைவன் அணிந்திருக்கும் அணிகலன்களைப் பார்த்து, திருவீதிவுலா வரும்போது தத்தம் இல்லங்களிலிருந்தே கண்டுகளிப்பர் என்பதாம்.

### 3-3-3-1 மூலவருக்குக்குரிய அணிகலன்கள்

மூலவருக்கு அணிவிக்கப்பெறும் அணிகலன்கள் : ஒட்டியாணம், சங்கு, சக்கரம், காதணி, முடி, மன்னர்முடி, வைரமுடி, திருப்பாத அமைப்பு, திருக்கையமைப்பு திருப்பாதங்கள் முதலியனவாகும்.

### 3-3-3-2 உற்சவருக்கு உரிய அணிகலன்கள்

மூலவருக்குரிய அணிகலன்களுடன் பொன்னால் செய்யப் பெற்ற திருமால், திருமகள், வைகுண்ட திருக்கையமைப்பு, கெம்புக்கற்களையும், வைரக்கற்களையும் உற்சவருக்கு அணிவிப்பர். இவ்வணிகலன்கள் நாராயணவனம் திருக்கோயில்

களிலுள்ள பொருள்களிலேயே விலை உயர்ந்த பொருள்களாக விளங்கின்றன.

மேலும் காதணிகள், மாங்காய்மாலை, காசுமாலை, நவரத்தினங்கள் பதிக்கப்பெற்ற பொன்னாலான பூணூல், சலங்கை, தங்க ஒட்டியாணம் ஆகிய அணிகலன்களும் உலாத் திருமேனிக்கு அணிவிக்கப்பெறுகின்றன.

### 3-3-3-3 தாயாருக்குரிய அணிகலன்கள்

பத்மாவதித்தாயாருக்கு முடி, கமலக்கை, அருள்தரும் திருக்கைகள், திருமணநாண், திலகம், மணப் பொருட்கள், ஒட்டியாணம், பவழமாலைகள் ஆகியன. நாள் வழிபாட்டின் போதும் உலாக்காலங்களிலும், திருவிழாக்களிலும் அணிவிக்கப் பெறுகின்றன.

## 3-3-4 படையல்கள்

வழிபாட்டின்போது அருள்மிகு கல்யாணவெங்கடேசுவர ருக்கும், அருள்மிகு பத்மாவதித்தாயாருக்கும் சுற்றுப்புறச் சிற்றாலயங்களுக்கும், பரிவார தேவதைகளுக்கும் (உற்சவர் களுக்கும்) நாள்தோறும் படையல்கள் படைக்கப்பெறுகின்றன.

இறைவனுக்குப் படைக்கப்பெறும் உணவு வகைகள், "புளியோதரை, மிளகுச்சோறு, தாளிப்புத் தயிர்ச்சோறு, வெறுஞ்சோறு, தாளிப்பு இல்லாத தயிர்ச்சோறு ஆகியன அன்றாடப் படையலாகப் படைக்கப்பெறும். மேலும், வெண் பொங்கல், சர்க்கரைப் பொங்கல், வடை, பயறு, சுண்டல், கேசரி, கடலைச் சுண்டல், பாலும் சர்க்கரையும் கலந்த சோறு, அப்பம், அதிரசம், தோசை, வெல்லத்தோசை, வெல்லம் கலந்த எள்ளுப்பொடி, வெல்லம் கலந்த சுக்குப்பொடி, பஞ்சாமிர்தம், பால், பழம், வெண்ணெய், வடைபருப்பு, பானகம், மதுபர்க்கம் ஆகியனவும் இறைவனுக்குப் பொதுவாகப் படைக்கப்பெறும்"[41] என்பர். இவற்றின் மீது ஆடையால் மூடியபின்பே இறைவ னுக்குப் படைப்பர்.

கோயிலின் அக்னி மூலையில் உள்ள மடப்பள்ளியிலோ, அர்ச்சகர் வீட்டிலோ செய்யப்பெற்ற உணவு வகைகளையே இறைவனுக்குப் படைக்கவேண்டும் என்று ஆகமம் கூறுகிறது.

நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலில் வெவ்வேறு நேரங்களில் படையல்கள் படைக்கப்பெறுகின்றன.

காலைவேளை பூசையின்போது மூலவருக்கும் மற்றுமுள்ள சிற்றாலயங்களுக்கும் வெறுஞ்சோறும் தயிர்ச்சோறும் படைப்பர்.

நண்பகல் பூசையின்போது புளியோதரையும், தாளிக்கப் பெறாத சுக்குக்கலந்த வெறுந்தயிர்ச்சோறும் பெருமாளுக்கும் தாயாருக்கும் படைப்பர்.

மாலை வழிபாட்டில் தோமாலைச் சேவையின்போது தோசையைப் படைப்பர்.

நள்ளிரவு வழிபாட்டில் மிளகுப்பொங்கலும், வெறுஞ்சோறும், பெருமாளுக்கும், பத்மாவதித் தாயாருக்கும் மற்றுமுள்ள சிற்றாலயங்களுக்கும் படைப்பர்.

நள்ளிரவு பள்ளியறை வழிபாட்டின்போது பால், வாழைப்பழம் அல்லது அந்தந்தப் பருவகாலப் பழங்களுடன் சர்க்கரை, முந்திரி, கசகச கொப்பரை ஆகியவை கலந்த கலவையைப் படையலாகப் படைப்பர். இவற்றோடு வெற்றிலை, பாக்கு தேங்காய், பூ ஆகியனவும் படைக்கப் பெறும்.

### 3.3.5 தீபாராதனை

இறைவனைத் தூபம், கற்பூரம், ஆரத்தி ஆகியவற்றால் வழிபாடு செய்வர். தூபம் அனைத்து தோஷங்களையும் நீக்கிப் பரம ஆனந்தத்தைத் தரும் என்பர். சந்தனம், சாம்பிராணி, குங்குலியம், குங்குமப்பூ, கோரைக்கிழங்கு, அருகு, பச்சைக் கற்பூரம் ஆகியவற்றைப் பொடியாக்கி, அதில் நெய்யூற்றிக் காட்டப்பெறும் தூபத்திற்குச் 'சிதாரி தூபம்' என்று பெயர்[49] என நசன் கூறுகிறார்.

இறைவனை ஆராதனை செய்வதில் தீபம் இரண்டாவது இடத்தைப் பெறுகின்றது. தீபம் 16 வகைகளாகக் கூறப் பெறுகின்றது. அவை தூபம், தீபம், மகாதீபம், நாகதீபம், விருசதீபம், புருசாமிருகதீபம், சூலதீபம், கச்சபதீபம், மயூர தீபம், பூரணகும்பதீபம், நட்சத்திரதீபம் ஆகியனவாகும்.

தீபத்தை ஏற்றுவதில் 3 பிரிவுகள் கையாளப்பெறுகின்றன.

1. உத்தமம் : நெய், தாமரை, நூல்திரி கொண்டு ஏற்றப்படுவது.



2. மத்திமம் : எள், இலுப்பை—தேங்காய் எண்ணெய் யால் நூல்திரி கொண்டு ஏற்றப்படுவது.

3. அதமம் : வேம்பு, புன்னை எண்ணெய் கொண்டு ஏற்றப்படுவதாகும்.

மேலும் இறைவனைக் கற்பூரத் தீபாராதனை கொண்டும் வழிபாடு செய்யப்பெறும். கற்பூர ஆரத்தி காட்டுவதால் அகண்டாகார விருத்தி தன்னில் தானே ஏற்படுவதை குறிக்கிறது:

ஆத்மசோதியில் கரைந்து உருவமே தெரியாத நிலையைத் தான் கற்பூர ஆரத்தி வெளிப்படுத்துகிறது. இவ்வாரத்தியைக் கண்ணில் ஒற்றிக்கொள்கிறோம். இவ்வாறு இறைவனுக்குத் தூப, தீப, கற்பூர ஆரத்தி காட்டப்பெறுகின்றன.

இத்திருக்கோயிலில் பெருமாளுக்குப் பூசை செய்யும் வேளையிலும் திருமுழுக்குச் செய்யும் வேளையிலும் தீபாராதனைகள் செய்யப் பல உருவில் அமைந்த தட்டுக்கள் பயன்படுத்தப்பெறுகின்றன. அவை நட்சத்திரதீபம், கும்ப தீபம், பஞ்சமுகதீபம், ஹளதீபம், ஒற்றைத்தீபம், தூபம், கற்பூரதீபம் முதலியனவாகும். கருவறையில் எப்போதும் ஒரு விளக்கு எரிந்துகொண்டே இருக்கும். விளக்குகள் ஏற்றும்போது அர்ச்சகரின் உடலும் உள்ளமும் தூய்மையாக இருத்தல் அவசியம். விளக்குகள் மூர்த்தியின் மூலமந்திரம் சொல்லி ஏற்றப்படும்.

### 3-3-5-1 தீபாராதனை முறைகள்

பெருமாளுக்குத் திருமுழுக்கு முடித்த பின்பு தூபம் காட்டியதும் ஒற்றைத் தீபம் காட்டப்பெறும்.

மூர்த்தி கொலு சிம்மாசனத்தில் எழுந்தருளியிருக்கும் போது தூபதீபங்கள், கலச ஆரத்தி, கற்பூர ஆரத்தி ஆகியன காட்டுவர்.

திருவோணக்கோளிலும், தோமாலை சேவை முடிவிலும் தூபதீபம், கோள்ஆரத்தி ஹளஆரத்தி ஆகியவற்றைக் காட்டுவர். கோபுர வாசலில் பெருமாள் எழுந்தருளியிருக்கும் போது முதலில் இராச ஆரத்தியும், பின்னர் கலச ஆரத்தியும் காட்டப்பெறும்.

தீபங்கள் காட்டும்போது இறைவன் முன்னால் வலமாக மூன்றுமுறை சுற்றிக் காட்டவேண்டும், என வைகாணச ஆகமம் கூறுகிறது. முதலில் சுற்றிக் காட்டுவது உலக நன்மைக்காகவும், இரண்டாவது முறை சுற்றிக்காட்டுவது அந்தக்

கிராமத்தின் நன்மைக்காகவும், மூன்றாவது முறை சுற்றிக் காட்டுவது உயிர்களின் நலனுக்காகவும் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.[43] அவ்வாறே இக் கோயிலிலும் தீபங்கள் சுற்றிக் காட்டப்பெறுகின்றன.

## 3-4-0 வழிபாடும் பிறவும்

இப்பகுதியில் வழிபாடும் பக்தியும், வழிபாடும் கோயிலும், வழிபாடும் இசையும், வழிபாடும் தேரும், வழிபாடும் திருவிழா வும், வழிபாடும் வாழ்வும் என்னும் தலைப்புகளில் வழிபாட்டுடன் தொடர்புடைய செய்திகள் விளக்கப் படுகின்றன.

## 3-4-1 வழிபாடும் பக்தியும்

பக்தி என்பது கடவுளின்பால் மனிதனுக்கு இருக்கும் அன்பின் அகத்தோற்றம். பூசை அல்லது வழிபாடு என்பது அதன் புறவெளிப்பாடு. கடவுள் தமது பேரருள் காரணமாக இறங்கிவருகிறார். பக்தன் கர்மயோகத்தினாலோ ஞான யோகத்தினாலோ உயர்ந்து கடவுளை அடைகிறான்.

"மனிதனின் இயற்கையன்பைப் பூசை அல்லது வழிபாடு வாயிலாக வெளிப்படுத்துவதற்கு நிரம்பவும் எளிதாயிருப்பது அர்ச்சை வடிவமாகும்"[44] என்பர்.

"சிலர் கடவுளுக்கு உருவம் படைத்து வழிபடுகிறார்கள், சிலர் உருவ வழிபாட்டை எதிர்க்கிறார்கள். பெரும்பாலோர் கோயில் அல்லது பெரிய கட்டடம் அமைத்து வழிபாடு செய்கிறார்கள். அவரவர் மன ஒருமைப்பாட்டிற்கு எது உதவி புரிகிறது என்று நம்புகிறார்களோ அதைப் போற்றலாம். உள்ளத்தில் கடவுள்நெறி பதிவது ஒன்றுதான் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும்''[45] என்று கூறுகிறார் மு. வரதராசன்.

கடவுள் பக்தி ஏற்பட்டு அது கோயில் வழிபாடாக அமைய வேண்டும். மனிதனுக்குக் கடவுள்நெறி, பக்திநெறி, என்ற உணர்வு ஏற்பட்டால் அன்பு, பாசம், பண்புள்ளம், கருணை ஆகியன ஏற்பட்டு மிருகத் தன்மையிலிருந்து விடுபட்டு இவ்வுலகில் பண்பட்ட மனிதனாக வாழமுடியும். இவ்வாறு வழிபாடும் பக்தியும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து உள்ளன.

## 3-4-2 வழிபாடும் கோயிலும்

இறைவழிபாட்டில் கோயில் முதன்மையான இடத்தைப் பெறுகின்றது. மக்களின் உள்ள நிறைவுக்கும் மன அமைதிக்கும் கோயில் இன்றியமையாததாக அமைகின்றது. கோயிலுக்கு நாள்தோறும் சென்று இறைவனை வழிபட்டு அருள்பெறுவது மன நிம்மதிக்குச் சிறந்ததாகும்.

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா"[46]

என்றும்,

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று."[47]

என்றும் ஔவையார் குறிப்பிட்டு இருப்பது சாலவும் பொருந்தும்.

கோயில் என்றால் தலைவன் வசிக்கும் இடம் என்று பொருள். கோ+இல் = கோயில்: கோ என்றால் தலைவன் இல் என்றால் வசிக்கும் இடமாகும்.

கோயிலில் கடவுள் அல்லது மக்களின் தலைவன் வசிக்கிறான். அதனால் கோயிலுக்குச் சென்று தலைவனை அல்லது கடவுளை வழிபடுவது சிறப்பு.

மக்கள் மனதில் எவ்வித எண்ணம் ஏற்படுகிறதோ அவ்வித எண்ணம் கொண்டுதான் பக்தி ஏற்படுகிறது. "ஈசன் துரும்பிலும் இருப்பான், தூணிலும் இருப்பான்" என்ற கருத்தும், "வைத்தால் பிள்ளையார் எறிந்தால் சாணம்" என்ற கருத்தும் மேற்கூறியவற்றிற்கு அரண் செய்யவல்லன.

## 3-4-3 வழிபாடும் இசையும்

இறைவழிபாட்டில் இசை இன்றியமையாத இடத்தைப் பெற்றுவருகின்றது. பழங்காலத்தில் இசையும், கூத்தும், ஆடலும், பாடலும் இல்லாக்கோயில்கள் இல்லை. பல கோயில் களில் கலை நடன அரங்குகள் இருந்தன என்பதற்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன. சிலப்பதிகாரத்தில் இவை விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இன்றும் பல கோயில்களில் நடன அரங்குகள் அழியாமல் உள்ளன. காட்டாக மதுரை, சிதம்பரம், சுசீந்திரம் முதலான கோயில்களில் இவற்றைக் காணலாம்.

கோயில்களில் இசையினை முழக்க ஒரு பாரம்பரையே இருந்துவந்துள்ளது; இன்றும் உள்ளது. இக் குடும்பங்கள் செவ்வனே வாழ வழிவகை செய்யப்பட்டுள்ளது அவர்களுக்கு நிலங்கள் மானியமாக ஒதுக்கப்பட்டுள்ளதைக் கல்வெட்டுக்களில் காணலாம்.

மன்னர்கள் நிரந்தரமான செயலைச் செய்துள்ளனர். அம் மரபை இன்றும் நம்மவர் பின்பற்றி வருகின்றனர். இவ்விசை மரபினர் இறைவழிபாட்டின்போது பல்வேறு இசைக் கருவி களால் இசைமுழக்குவர்.

நாராயணவனத்தில் அமைந்துள்ள கல்யாண வெங்கடேசுவர சுவாமி கோயிலிலும் இவ்விசை மரபினர் இருந்துவருகின்றனர்.

ஏழிசையாய் இசைப்பயனாய் இருப்பவனே இறைவன் எனக் குறிப்பிட்டனர் தமிழ் மக்கள்.

இறைவனை இசைகொண்டு பாடியே வணங்கினர். பண்ணோடு கூடிய பக்திப்பாடல்கள் பல தமிழில் உள்ளன. இவற்றுள் தேவாரம், திருவாசகம், நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம், திருப்புகழ், கந்தரநுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, திருவருட்பா, கந்தசஷ்டிகவசம் முதலியன குறிப் பிடத்தக்கவையாகும். இவையேயன்றித் தனிப்பாடல்கள் பல இறைவன்மீது பாடப் பெற்றுள்ளன.

இப்பாடல்கள் திருக்கோயில்களில் நாள்தோறும், கிழமை தோறும், மெய்யன்பர்களால் பாடப்பெற்று வருகின்றன. இசையோடு கூடிய பாடல்களை கேட்கும்போது மனத்தில் ஓர் அமைதி ஏற்படுகிறது.

> ''திருவாசகத்திற்கு உருகாதார்,
> ஒரு வாசகத்திற்கும் உருகார்''

என்ற ஆன்றோர் வாக்குஇசையின் சிறப்பினைப் புலப்படுத்து கின்றது.

இருபதாம் நூற்றாண்டில் பக்திப் பாடல்களைப் பாடிச் சிறப்புற்றவர்கள், கே.பி. சுந்தராம்பாள், சீர்காழி கோவிந்த ராசன் ஆகியோர். இவர்களோடு டி.எம். சௌந்தரராசன், சீர்காழிச் சிவ சிதம்பரம், எஸ்.பி. பாலசுப்பிரமணியம் மற்றும் பி. சுசிலா, எல்.ஆர். ஈசுவரி முதலானோரும் இன்று இறைப் பாடல்களைப் பாடிவருகின்றனர்.

"கருவி காரணவீறுகளைச் சிதைத்து நெஞ்சை அமைதியாய் எளிதில் நிறுத்தவல்லது இசை. இவ்வல்லமைபற்றது இசை யாகாது. அதை வசையென்றும் கூறலாம். அருவி, முழவு, தரங்கப்பாட்டு, மூங்கில் ஓசை, வண்டு, யாழ், பறவைத்துழனி, தேவாரப்பண் ஆகியன மதயானை, சிறுபுலி, மனக்குரங்கு

முதலியவற்றின் மூர்க்கத்தனத்தைப் போக்கி அவற்றையும் வயப்படும் பண்பு வாய்ந்தன"[13] என்பது திரு.வி.க.வின் கருத்தாகும்.

காட்சியகங்களில் யாழை வாசித்து விலங்குகளை அதற்கேற்றவாறு ஆட்டச் செய்கின்ற காட்சி இசையின் சிறப்பைத் தெரிவிக்கிறது.

பாம்பாட்டி மகுடி வாசிக்கின்றபோது நாகம் அழகாகப் படம் எடுத்து ஆடுகின்றது.

"ஆடுகிற மாட்டை ஆடிக்கறக்கணும்
பாடுகிற மாட்டைப் பாடிக் கறக்கணும்"

என்ற கருத்து இசையின் மேன்மையை விளக்குகிறது.

இதனால் கோயில்களில் இசையின் இன்றியமையாமை தெரியவருகின்றதோடு இசையின் சிறப்பும் அறியப்படுகிறது.

### 3-4-4 வழிபாடும் தேரும்

திருவிழாக்களில் 'இறைவன் பல ஊர்திகளில் எழுந்தருளி, கோயிலுக்கு வர இயலாமல் ஊனமாய் உள்ளவர்களுக்கும், நோயுற்றவர்களுக்கும், வீட்டுவிலக்கான பெண்களுக்கும் வீதி வீதியாக உலா வந்து காட்சிதந்து அருள்புரிகிறான்.

திருவிழா நாட்களில் இறைவன் பல ஊர்திகளில் திருவீதியுலா வருவது போன்று தேரிலும் எழுந்தருளி இறைவன் மாடவீதிகளில் உலா வருவான்.

தேர் ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு அமைப்பில் அமைந்திருக்கும். மூன்றடுக்கு, ஐந்தடுக்கு, ஏழடுக்கு என்று தேரின் அமைப்புப் பல வகைப்படும். தேரின் உச்சியில் கலசம் ஒன்றும் அதன்மீது குடை ஒன்றும் அமைக்கப்பெற்றிருக்கும். தேரில் ஒவ்வொரு அடுக்கிலும், கீழ் அமைப்பிலும் இறைவன் திருவிளையாடல்கள், இயற்கைக் காட்சிகள், விலங்குகள், பறவைகள் முதலிய உருவங்கள் செதுக்கப்பெற்றிருக்கும்.

தேரில் இறைவன் திருவீதிவுலா வருவது ஒருசிறப்பு. அனைத்து விழாக்களிலும், தேர்த்திருவிழா சிறப்பானதாகும். அன்று மக்கள் திரளாக வந்து இறைவனை வழிபடுவர்.

தேர்த்திருவிழாவின்போது ஊரே கோலாகலமாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்கும். வெளியூர்களிலிருந்தும் உற்றார்,

உறவினர், நண்பர் முதலானோர் திருவிழாவினைக் காண வருவர்.

### 3-4-5 வழிபாடும் திருவிழாவும்

மக்களின் மனதிற்கு மகிழ்ச்சியைத் தருவது திருவிழா ஆகும். உள்ளக் கிளர்ச்சிக்கும், மன அமைதிக்கும் இறைவழிபாடு அவசியமாகிறது. இவ்வாறு இவையிரண்டும் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்துள்ளன.

வழிபாடு என்றால் திருவிழாக்களும் அதில் அடங்கியது தான். விழா என்றால் மக்கள் மகிழ்ச்சியோடு காணும் நிகழ்ச்சி என்று பொருள். திரு என்றால் மேன்மை தாங்கிய என்று பொருள். இறைவனைப்பற்றியே நினைத்து, இறைத்தொண்டு ஆற்றியும் இறைவனைப் புகழ்ந்து பாடியும் நிகழ்த்தப்பெறும் நிகழ்ச்சிகளே திருவிழாக்களாகும்.

வழிபாட்டில் கோயில் வழிபாடுதான் சிறப்புடையதாகும். அக் கோயிலில் திருவிழாவும் நடைபெறும். திருவிழா நடைபெறாத கோயிலை மக்கள் கோயிலாகக் கருதமாட்டார் கள். வழிபாடு நடைபெறாத கோயிலுக்கு மக்கள் செல்ல மாட்டார்கள். எனவே வழிபாட்டுடன் கூடிய திருவிழா நடைபெறும் கோயிலைத்தான் மக்கள் கோயிலாகக் கருதுவார் கள். நாராயணவனம் கோயிலிலும் நாள்வழிபாடு, கிழமை வழிபாடு, திங்கள் வழிபாடு, கோள்வழிபாடு ஆகிய வழிபாடுகள் நடைபெற்று வருதலை முன்பு இவ்வியலில் விளக்கப் பட்டுள்ளதைக் காணலாம்.

திருவிழாக்காலங்களில் கோயிலைச் சுற்றிப் பலவிதமான கடைகள் வைக்கப்பெற்றிருக்கும். மக்கள் கடைகளுக்குச் சென்று அவரவர்களுக்குத் தேவையான பொருட்களை வாங்கிச் செல்வர். இவ்வாறு திருவிழாக்களில் வணிகம் நடைபெறும் அதனால் பொருளாதாரம் வளர்ச்சியடையும்; மக்களின் வாழ்வும் மேம்படும்.

ஏழை மக்கள் திருவிழா நாட்களில் ஏதாவது ஒரு கடை வைத்து வணிகம் நடத்தித் தம் ஏழ்மையைப் போக்கிக் கொள்வர். எனவே திருவிழா, மக்கள் வழிபாட்டிற்கு மட்டுமின்றி வாழ்விற்கும் ஏற்றதாக அமைந்துள்ளது.

திருவிழாக் காலங்களில் சமயத் தொடர்பான விரிவுரைகள் நடைபெறுவதால் மக்கள் பல உண்மைகளைத் தெரிந்து கொள்வர். இலக்கியத்தின் மீது மக்களுக்கு விருப்பம் ஏற்படும். இசைப் பாடல்களை விரும்பிக் கேட்பர். இவ்வாறு திருவிழாவில் பல நிகழ்ச்சிகள் நடைபெறுவதால் மக்கள் திருவிழாக் காலத்தை மகிழ்ச்சியோடு கழிப்பர்.

### 3-4-6 வழிபாடும் வாழ்வும்

மக்கள் தத்தம் வாழ்வில் அமைதியாக இருக்க வேண்டுமாயின் இறைவழிபாடு இன்றியமையாதது. இறை வழிபாட்டோடு திருவிழாவும் ஒன்றிவிட்டது. மக்கள் நல்வாழ்விற்கு வழிபாடும், மன மகிழ்ச்சிக்குத் திருவிழாவும் அவசியம்.

கலைகள் வளரவும், வளர்க்கவும மக்கள் அரும்பாடுபட்டு வருகின்றனர். மக்களுக்குத் திருவிழா என்றால் தத்தம் வீட்டுப் பணிகளை மறந்து கோயில் திருவிழாவில், பணிகளை மேற்கொள்வர். அச் சமுதாயமே மகிழ்ச்சியோடு இருக்கும்.

கோயிலுக்குச் சென்று வழிபடுவோர் பெரும்பாலோர் குளித்துவிட்டுச் செல்கின்றனர். உடலாலும், உள்ளத்தாலும் தூய்மையாக இருக்கவேண்டும் என்பர். சிலர் காலையிலும், மாலையிலும் கோயிலுக்குச் சென்று இறைவனின் அருளைப் பெறுகின்றனர். பெண்கள் திங்கள், செவ்வாய், வெள்ளிக்கிழமை ஆகிய நாட்களில் கோயிலுக்குச் சென்று வழிபடுவர்.

மனதிற்கு அமைதியும், உள்ளத்திற்குக் களிப்பும் தருவது வாழ்வாகும். பேரின்பம் பெறுவது சிறந்த வாழ்விற்கு வழியாகும். இவ்வாழ்வு செம்மையடைய வழிபாடு அவசியம். நல்வாழ்விற்கு வழிபாடு அவசியம் என்பது அப்பர் சுவாமிகளின் கருத்தாகும்.

> "வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
> தாழ்த்த சென்னியும் தந்தத லைவனைச்
> சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
> வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே"[10]

வழிபாட்டின் வழியாக வீடுபேற்றை அடையலாம் என்பது சான்றோர்களின் கருத்தாகும். முனிவர்கள், துறவிகள் மற்றும் பலர் வழிபாட்டினை மேற்கொண்டுதான் தவவலிமையைப் பெற்றனர்.

திருவிழா நாட்களில் வெள்ளையடித்து வீட்டைச் சாணத்தால் மெழுகி, கோலமிட்டு அழகாக வைத்துக் கொள்வர்; மாவிலைத் தோரணங்களை வீட்டிற்குக் கட்டுவர். சிலர் வண்ண விளக்குகளால் இல்லத்தை அலங்கரிப்பர்.

பொதுவாக, திருவிழா என்றாலே வீடு தூய்மையாகும்; உற்றார் உறவினர் நண்பர் வீட்டிற்கு வருகை தருவர்; குழந்தைகளுக்குப் புத்தாடை அணிவிப்பர்; அன்று பெண்கள் நோன்பு இருந்து இறைவனுக்குப் பலவகையான படையல்களைப் படைத்து இறைவனை வணங்குவர்; பின்பு ஆரத்தி காட்டித் தெய்வப் படையலை உண்பர்.

மேலும் இந்நாட்களில் உறவினர்களுக்கும், ஏழை மக்களுக்கும் உணவிடுவர்.

மேற்கூறிய கருத்துக்கள் அனைத்தையும் நோக்கும்போது ஓர் உண்மை நன்கு புலப்படுகிறது. அதாவது வழிபாடும் வாழ்வும் ஒன்றிற்கொன்று தொடர்புடையன என்பதும் சிறந்த வாழ்விற்கு வழிபாடும், சிறந்த வழிபாட்டிற்குத் திருவிழாவும் அவசியம் என்பதும் தெளிவாகத் தெரிகின்றன.

## 3-5-0 வழிபாடு செய்வோர் பரம்பரைபற்றிய செய்திகள்

அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலில் தொன்றுதொட்டு ஒரே குடும்பத்தினர் வழிவழியாக வழிபாடு செய்து வருகின்றனர்.

அமரர் அர்ச்சகம் கிருட்டிணமாச்சாரியார்
அமரர் அர்ச்சகம் சௌரிராஜ பட்டாச்சாரியார்
அர்ச்சகம் வெங்கட நாராயண பட்டாச்சாரியார்—ஆவர்.

இப்பொழுதுள்ள குடும்பத்தினர் இக்கோயில் வழிபாட்டில் முழுநேரப் பணிபுரிந்து வருகின்றனர்.

தம் குடும்பத்தை வாழ்நாள் முழுதும் இறைவன் வழிபாட்டிற்காகவே அர்ப்பணித்துள்ளனர்.

திருக்கோயில் தெய்வப்படையலில் இக் குடும்பத்தினருக்குச் சுதந்திர உரிமை (ஹக்கு) இருந்துவருகின்றது.

மெய்யன்பர்கள் காணிக்கைகளைச் சாதாரண நாட்களிலும், திருவிழாக் காலங்களிலும் இவர்களுக்கு வழங்குவர்.

அன்றாட வழிபாட்டிலும், திருச்சுற்று நாட்களிலும், சிறப்பான திருவிழா நாட்களிலும் வழிபாடுகளைச் சிறப்பாக இவர்கள் நடத்திவருகின்றனர்.

இப்பொழுது வழிபாடு செய்துவரும் அர்ச்சகர்கள்

1. திரு. அர்ச்சகம் சௌரி ராஜ பட்டாச்சாரியார்.
2. திரு. அர்ச்சகம் ஸ்ரீதர பட்டாச்சாரியார்.
3. திரு. அர்ச்சகம் வெங்கட நாராயண பட்டாச்சாரியார்.
4. திரு. அர்ச்சகம் சீனிவாசராகவ பட்டாச்சாரியர் ஆகியோர் ஆவர்.

திருவிழாக் காலங்களில் இவர்கள் வைகாணச ஆகம பட்டர்களைத் தம் உதவிக்கு அழைத்துவந்து திருக்கோயில் வழிபாடுகளையும் மற்றும் பணிகளையும் செய்துவருகின்றனர். இவ்வாறு இவ்வர்ச்சகர்களின் பணி இக்கோயிலில் நடைபெற்று வருகின்றது.

## 3-6-0 வழிபாடும் அர்ச்சகரும்

அர்ச்சகர் கோயிலுக்குச் செல்லும் முன் தன் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு நீராடிப் பன்னிரண்டு திருமண களைத் தம் மேனியில் அணிந்துகொண்டு தாமரைமாலை, துளசிமாலை, பஞ்சகச்சம், வேட்டி, மேல்துண்டு ஆகியவற்றை யும் அணிவார். மேலும் நீயகம் எனும் மோதிரத்தையும் உபயவித்திரத்தையும் அணிந்து கோயிலினுள் செல்வார்.

கோயிலில் இறைவனைப் போற்றும் பாடலைப் பாடிக் கொண்டு உட்சுற்றில் வலம்வந்து வாயிற் காவலர்களில் ஒருவரான "மணிகா" என்பவரிடம் திறவுகோலைப் பெற்று ஆகம மந்திரம் சொல்லிக்கொண்டு கதவைத் திறப்பார்.

நன்மை பயக்கும் துதியைக் கூறி மூன்று முறை உள்ளங் கையில் ஓசையை யெழுப்பித் திரையை நீக்கிப் பெருமாளின் திருமுகத்தைக் காண்பார்.

பள்ளியறையிலிருந்து கௌதிகரை எழுந்தருளச் செய்து பசுவை இறைவனின் பார்வையில் நிறுத்துவார். பசும்பாலை இறைவனுக்குப் படைத்து இறுதியில் தீபாராதனை காட்டுவார்.

ஏற்கனவே கருவறையில் எரிந்துகொண்டிருக்கும் அகண்ட விளக்குமூலம் மற்ற விளக்குகளை ஏற்றுவர்.

இறைவனின் திருமுழுக்கிற்காக அர்ச்சகருடன் மாணவர் ஒருவர் நதிக்கரையோரத்திற்கோ, திருக்குளக்கரைக்கோ சென்று, யானையின் மீது குடை சாமரம் தீவட்டி, ஆகியவற்றை மேளதாளம் முழங்கக் கோயிலுக்கு எடுத்து வருவார்.

வழக்கம்போல் காலை, நண்பகல், மாலை, இரவு பிற வழிபாடுகள் முடிந்ததும் நள்ளிரவின் போது பள்ளியறை வழிபாட்டிற்குப் பால், பழம் ஆகியவற்றால் படையல் படைப்பர். பின்பு கௌதிக மூர்த்தியைப் பள்ளிகொள்ளச் செய்து ஆரத்தி காட்டிவிட்டு வழிபாட்டை முடிப்பர். இறவு கோலால் ஆலயக் கதவை பூட்டி "மணிகா" என்ற வாயிற் காவலரிடம் திறவுகோலை ஒப்படைத்துக் கொடிமரத்தின் அருகில் இருக்கும் கோயிலின் இட வாயிற் காவலரிடம் கோயில் பாதுகாப்பு மந்திரத்தின் ஆணையைக் கூறி அர்ச்சகர் தம் இல்லத்திற்கு மற்ற சாவிகளுடன் செல்வார்.

இவ்விதமாக அர்ச்சகர் தம் கடமையைக் கோயில் இறைவழிபாட்டில் செய்துவருகிறார்.

### 3-7-0 வழிபாடும் பக்தர்களும்

இறைவழிபாட்டில் மெய்யன்பர்கள் தொன்றுதொட்டே ஆர்வம் காட்டி வருவதோடு மட்டுமின்றி அது தம் கடமை யெனச் செய்தும் வருகின்றனர்.

மெய்யன்பர்களின் இறையன்பாலும், கடமையுணர்வாலும் கோயில்களில் வழிபாடு நடைபெற்றுவருகின்றது. மெய்யன்பர் களின் இறையுணர்வால் திருவிழாக்களும் வழிபாடும் கோயில் களில் நிகழ்த்தப்பெறுகின்றன.

நாராயணவனம் கோயிலுக்கு மெய்யன்பர்கள் நீராடி விட்டுப் பக்தியுடன் பெருமாளின் அருளைப்பெற வருவர். அருள் பெறுகின்றபோது போற்றி ஓதி, புனிதநீர், சடாரிசேவை, மலர், தெய்வப்படையல் ஆகியவற்றைப் பெற்றுக்கொள்வர்.

தாயார் சிற்றாலயத்திலும் அவர்கள் புனிதநீர், சடாரி சேவை, மலர், மஞ்சள், குங்குமம் முதலியவற்றைப் பெறுவர்.

திருமுழுக்குக் காலங்களில் திருமுழுக்குப் பொருட்களுடன் செல்லும் மெய்யன்பர்களுக்குத் திருமுழுக்குப் புனிதநீர் தெளிக்கப்பெறுகின்றது.

மேலும் தாம் செய்த பாவத்தைப் போக்கிக்கொள்ளவும், வாழ்க்கையில நன்மைகள் ஏற்படவும், தாம் மேற்கொண்ட குறிக்கோள்கள் வெற்றிபெறவும் புனிதநீரை மெய்யன்பர்கள் பெறுகின்றனர்.

பெருமாளுக்குத் திருமுழுக்குச் செய்யப்பெற்ற சந்தனம், வாசனைப் பொருட்கள், மஞ்சள் முதலியவற்றைத் தம் நெற்றியில் அணிந்துகொள்கின்றனர்.

பெருமாளுக்கும், தாயாருக்கும் திருமணம் நடந்தபின் அர்ச்சகர்களால் வழங்கப்பெறும் மஞ்சளரிசியை மெய்யன்பர்கள் பெற்றுக்கொள்வர்.

ஆணவம், கன்மம், மாயை, மதம் ஆகியன ஒழியவும் தம் குறைகள் நீங்கவும், தம் தலையில் மஞ்சளரிசியை வைத்துக் கொள்வர்.

திருக்கல்யாண திருமேனி விழாவின்போது கலந்து கொள்ளும், மணமாகாதவர்களும், மகப்பேறு இல்லாதவர்களும் திருக்கல்யாணத்தின்போது பயன்படுத்தப்பட்ட மலர்கள், மஞ்சளரிசி ஆகியனவற்றைப் பெற்றுக்கொள்வார்களேயானால் அவர்களுக்கு அக் குறைகள் விரைவில் நீங்கும்.

நன்மை அடைந்தவர்கள் பெருமாளுக்குத் திருக்கல்யாண உலாச்செய்தும், போற்றி ஓதியும் தம் வேண்டுதலை மனநிறைவோடு செய்வர்.

நாராயணவனத்தில் அருள்மிகு பத்மாவதித் தாயார் கல்யாண அருள் தருபவராகத் தொன்றுதொட்டு விளங்கி வருகிறார். இத்தாயாருக்குத் திருமுழுக்குச் செய்தல், புத்தாடை அணிவித்தல், திருக்கல்யாணம் செய்வித்தல் என்று வேண்டுதல் களை வேண்டிக்கொண்டால் தாயாரின் அருளால் திருமணம் நடைபெறும். பிள்ளைப்பேறு கிடைக்கும்; உடல்நலம் பெறும்; பணி கிடைக்கும் என்று இவ்வூர் மக்கள் நம்பி வருகின்றனர்.

## 3-8-0 வழிபாடும் காணிக்கையும்

மக்கள் தம் அன்றாட வாழ்வு சீர்பெறவும், தொழில் வளர்ச்சியடையவும், திருமணங்கள் நடைபெறவும், பிள்ளைப் பேறு அடையவும், அரசு பணிகள் கிடைக்கவும், தேர்வுகளில் தேர்ச்சிப்பெறவும், அரசியல்வாதிகள் தேர்தலில் வெற்றி

பெறவும் பெருமாளிடமும், தாயாரிடமும் வேண்டிக்கொள்வர். தம் வேண்டுதல்கள் நிறைவேறியபின் பெருமாளுக்கும் தாயாருக்கும் காணிக்கையாகப் பணத்தையோ திருமங்கல நாணையோ வழங்குவர். சிலர் தங்க நகைகளையும் வழங்குவது உண்டு.

சிலர் பெருமாளுக்கும், தாயாருக்கும் புத்தாடைகள் வழங்குவர். செல்வந்தர்கள் சிலர் 1967ஆம் ஆண்டிற்கு முன் தங்கத்தில் செய்த அணிகலன்களை இத் திருக்கோயிலுக்குக் காணிக்கையாகவும், அன்பளிப்பாகவும் செலுத்தியுள்ளதை இக் கோயிலில் காணலாம்.

## அடிக்குறிப்பு

1. தமிழ் லெக்ஸிகன் தொகுதி பகுதி-3, ப. 3545
2. ந. சி. கந்தய்யா பிள்ளை (தொ. ஆ.) செந்தமிழ் அகராதி ப. 669.
3. தற்காலத் தமிழ் அகராதி ப. 348.
4. பிங்கல நிகண்டு, நூ. 1800
5. கழகப் புலவர் குழுவினர் (தொ. கு) கழகத் தமிழ் அகராதி, ப. 754.
6.
7. பேராசிரியர் சுந்தரம்பிள்ளை. மதமும் தத்துவமும், ப. 89.
8. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான். தமிழ்க் கோயில்கள் தமிழர் பண்பாடு ப. 3
9. க. கைலாசபதி. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப 80.
10. தொல் (பொருள்) நூ 415.
11. மேலது நூ. 168.
12. மேலது நூ. 109.
13. புறநானூறு. பா. 10
14. குறுந்தொகை பா. 9.
15. சிலப்பதிகாரம், 3 : 120.
16. மேலது 9 : 40
17. நாலடியார் ப. 309.
18. திருக்கோவையர் (கொளு), 214

19. திருவாய்மொழி நூற்றந்தாதி பா. 29.
20. காஞ்சிப்புராணம் பா. 249.
21. பகவத் அர்ச்சா பிரகரணம். ப 8.
ஆசனம், (பாத்தியம், சந்தனம்) மலர், தூபம், தீபம், ஆலவட்டம், ஆரத்தி முதலிய ஆறுவகை பணிவிடைகள்.
22. தொண்டரடிப் பொடியாழ்வார். பிரபந்தம் ப. 5.
23. திருப்பாவை. ப. 8
24. நேர் காணல் ஸ்ரீதர் பட்டாச்சாரியார். நா.வரம் நாள் 10-4-88 கொலுவழிபாடு நடைபெறும்போது அர்ச்சகருக்குத் தரும் அரிசியாகும்.
25. நேர்காணல், ஏ. சீனிவாசராகவ பட்டாச்சாரியார் நா. வரம் நாள் 6-5.88. பஞ்சாங் கசிரவணம் என்றால் ஒருநாளில் உள்ள ஐந்து நிலைகளைக் கூறுவதாகும். நாள், கோள், கர்ணம், யோகம், ஓரை முதலியன.
26. நேர்காணல், ந. இராசகோபால் பிரபந்த ஓதுவார். நா. வரம் நாள் 6-10-88. சங்கல்பம் என்றால் ஒரு பணியைத் தொடங்கு வதற்கு முன் அப் பணி தடைபடாமல் வெற்றியடைய இறைவனிடம் வேண்டுதல் செய்தல்.
27. நேர்காணல், எம். இராசகோபால் பிரபந்த ஓதுவார், நா. வரம் நாள் 6-10-88. ஆலவட்டம்—வட்டவடிவமாக மயிலின் இறகாலோ வெட்டி வேராலோ பின்னப்பட்ட பிடியுள்ள விசிறியாகும்.
28. மாருதிதாசன், இந்து சமயக் கருத்துக்கள். ப. 76.
29. நேர்காணல் : ஏ. சீனிவாச ராகவ பட்டாச்சாரி. நா. வரம். நாள் 6-10-88. சாற்று முறை என்றால் திராவிட மறை ஓதுதலாகும்.
30. தொண்டரடிப் பொடியாழ்வார். மு. நூ. ப-2.
31. பிரபந்தம். ப. 217.
32. மேலது. ப. 124
33. மேலது. ப. 649.
34. மேலது. ப. 546.
35. மேலது. ப. 761.
36. மேலது. ப. 8.
37. மேலது. ப. 9.
38. தி. வா. மொ. நூ. ப. 115.
39. பிரபந்தம். ப. 6:

40. ஸ்ரீமத் பகவத் அர்ச்சா பிரகரணம் ப. 265.
41. மேலது ப. 267.
42. நசன், ஆலயங்களும் ஆகமங்களும் ப. 117.
43. ஸ்ரீமத் பகவத் அர்ச்சா பிரகரணம் ப. 33.
44. சு. நடராசன் இந்து சமயக் கையேடு (மொ. பெ. ஆ.) ப. 70
45. மு. வரதராசன், நல்வாழ்வு, ப 19.
46. ஔவையார். உலகநீதி, ப. 10.
47. ஔவையார். கொன்றை வேந்தன் ப. 4.
48. திரு. வி. கலியாண சுந்தரனார், வாழ்க்கை வழி ப. 71.
49. திருநாவுக்கரசர், தேவாரம் (அடங்கல் முறை) பா, 6.

# அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள்

**4-0** முன்னுரை

*4-1 விழா விளக்கம்*

**4-1-1** விழா - சொற்பொருள்விளக்கம்

*4-1-1-1 அகராதி, கலைக்களஞ்சியம் அறிஞர் கருத்து*
*4 1-1-2 விழா-வேறுபெயர்கள்*
*4-1-1-3 திருவிழா*

**4-2-0** விழாக்களின் தோற்றமும் வளர்ச்சியும்

**4-3-0** விழாக்களின் நோக்கமும் குறிக்கோளும்

*4-3-1 விழாக்களின் நோக்கம்*
*4-3-2 விழாக்களால் ஏற்படும் நன்மைகள்*
*4-3-3 விழா நாள் மரபுகள்*

**4-4-0** விழாவும் நோன்பும்

*4-4-1 நோன்பு - விளக்கம்*
*4-4-2 நோன்பு முறையும் நோன்பு நாட்களும்*
*4 4-3 நோன்பின் நோக்கமும் பயனும்*

**4-5-0** விழாவும் மனிதனும்

*4-5-1 விழாவும் நம்பிக்கையும்*
*4-5-2 விழாவும் வாழ்வும்*
*4-5-3 விழாவும் வாணிகமும்*

**4-6-0** விழாவும் கலையும்

*4-6-1 விழாவும் இசையும்*
*4-6-2 விழாவும் இலக்கியப் பேருரையும்*
*4-6-3 விழாவும் தேரும்*

*4-7 விழா வகைப்பாடு (பொது நிலை)*
*4-8 திருக்கோயில் திருவிழாக்கள்*

4-13-6 ஆறாம் நாள் விழா
4-13-7 ஏழாம் நாள் விழா
4-13-8 எட்டாம் நாள் விழா
4-13-9 ஒன்பதாம் நாள் விழா
4-14-10 பத்தாம் நாள் விழா

4-14-0 விழா வகைப்பாடு (சிறப்பு நிலை)
திருக்கோயில் திருவிழாக்கள்

4-14-1 திருமால்
4-12-2 தாயார்
4-12-3-0 ஆழ்வார்கள் பற்றியன
4-12-3-1 திருமங்கையாழ்வார்
4-12-3-2 ஆண்டாள்

4-15-0 ஆசாரியர்கள் பற்றியன

4-15-1 இராமானுச ஆச்சாரியார்
4-15-2 வேதாந்த தேசிகர்
4-15-3 மணவாள மாமுனிகள்

# அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள்

## 4.0 முன்னுரை

அருள்மிகு கல்யாண வெங்கடேசுவரசுவாமி திருக்கோயில் வழிபாடுகளை ஒட்டித் திருவிழாக்கள் பல நிகழ்த்தப் பெறுகின்றன, அத் திருவிழாக்கள் பற்றி அமைவது இவ்வாய்வேட்டின் நான்காவது இயல். இவ்வியலில் விழாவின் விளக்கம் முதலில் இடம் பெறுகிறது. அடுத்து விழாக்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிக் குறிப்பிடப்பெறுகிறது. மூன்றாவதாக விழாக்களின் நோக்கமும் குறிக்கோளும் தெளிவு செய்யப்பெறுகின்றன. அடுத்து விழாவிற்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பும், விழாவிற்கும் கலைக்கும் உள்ள தொடர்பும் விளக்கப்பெறுகின்றன.

பின்னர் சமுதாயத்தில் பொதுவாக நடத்தப்பெறும் விழாக்கள் வகைப்படுத்தப்பெறுகின்றன. இதைத் தொடர்ந்து கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலில் நிகழும் நாள்விழா, திங்கள் விழா, கிழமைவிழா, திங்களிருமுறைவிழா, கோள்விழா, ஆண்டு விழா ஆகியவை தொகுத்துரைக்கப் பெறுகின்றன. இறுதியாகத் திருமால், தாயார், ஆழ்வார்கள், ஆசாரியார்கள் ஆகியோருக்கு நிகழ்த்தப்பெறும் சிறப்புத் திருவிழாக்களின் விளக்கங்களோடு இவ்வியல் நிறைவுறுகிறது.

## 4-1.0 விழா—விளக்கம்

மனிதன் முதன்முதலில் குகைகளிலும், மரப்பொந்துகளிலும் வாழ்ந்தான். பின்னர் ஆற்றங்கரையில் குடியேறிச் சிறுசிறு குழுக்களாக வாழத் தொடங்கினான். தனக்கு ஊறு செய்வனவாக விளங்கிய இடி, மழை முதலியவற்றைக் கண்டு அஞ்சி அவற்றிற்கு விழா எடுப்பதன்மூலம் துன்பத்தினின்று விடுபடலாம் என எண்ணி விழா எடுத்தான். இவ் விழாக்கள்

"சடங்குகளின் அடிப்படையில் தோன்றிச் சமுதாய நம்பிக்கையின் காரணமாகச் செல்வாக்குப் பெற்று, வளர்ந்தும் வாழ்ந்தும் மறுமலர்ச்சியடைந்தும் மக்களினங்களிடையே தொன்றுதொட்டு நிலவி வருகின்றன''[1] இவ் விழாக்கள் பிற்காலத்தில் சமய சமுதாய விழாக்களாக வளர்ச்சியடைந்தன.

இன்றைய நாட்களில் மகிழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டவற்றை விழாக்கள் என்றழைக்கின்றனர். மேலும் "மக்கள் திரளாகக் கூடிப் பழகவும், உயர்ந்தோரைப் போற்றவும் விழாக்களை உருவாக்கிக் கொண்டாடி வருகின்றனர்"[2].

இத்தகைய விழாக்களைப் பற்றி இங்கு விளக்கப் பெறுகின்றது.

### 4-1-1 விழா-சொற்பொருள் விளக்கம்

விழாக்கள் உடலுக்கு ஓய்வும், உள்ளத்திற்கு இன்பமும் தரவல்லன. எனவே மக்கள் விரும்பி ஏற்றுக்கொண்டாடுதல் 'விழா' என அழைக்கப்பெறுகின்றது. "விழா" என்னும் சொல் "விழை" என்ற வேர்ச்சொல்லிலிருந்து தோன்றியது என்பர். இதற்கு அவா, காதல், விருப்பம் ஆகிய பொருள்கள் உள. குறுகிய அன்பு விரியும்போது 'விழா' என்றும் கொண்டாட்டம் என்றும் விளங்குகிறது"[3] என்கிறார் மு. அருணாசலம். மேலும் வடமொழியில் விழாவை ''உற்சவம்'' என்பர். இதன் பொருள் "உயர்வாகச் செல்''[4] என்பதாகும்.

#### 4-1-1-1 அகராதி-கலைக்களஞ்சியம்-அறிஞர் கருத்து

விழா, விழவு ஆகியன ஒரு பொருள் குறித்து வந்த இரு சொற்களாகும். விழாவைப்பற்றி அகராதிகள் பின்வருமாறு பொருள் கூறுகின்றன. "விழா என்பதற்கு 'திருவிழா', 'மங்கலச் சடங்கு' என கழகத் தமிழ் அகராதியும்''[5] விழவு என்பதற்குத் 'திருவிழ', 'விளையாட்டு', 'அவா' என மதுரைத் தமிழ் பேரகராதியும்"[6] பொருள் தருகின்றன ஃபெஸ்டிவல் என்ற ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழில் விழா, விழாக்கொண்டாட்டம், மகிழ்ச்சியில் திளைத்தல், பருவகாலச் சிறப்பு, இசைநிகழ்ச்சிகள் என்று சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலம் - தமிழ் அகராதி"[7] பொருள் தருகின்றது

ஒரு குறிப்பிட்ட நாளிலோ, காலத்திலோ ஒரு சிறப்பான நிகழ்ச்சியின் நினைவாக மகிழ்ந்திருப்பதோ உண்டுகளித்து

இருப்பதோ விழா என ஆங்கில உலக நூல் அகராதியும்[8] "விழா என்பது ஒரு குறிப்பிட்ட இடைக்காலங்களில் மாறி மாறி நிகழக்கூடிய மத சம்பந்தப்பட்ட விருந்து அல்லது கொண்டாட்டங்களைக் கொண்ட நிகழ்ச்சியாகும் என குரோலியர் ஆங்கில அகராதியும்'[9] விளக்கம் தருகின்றன.

"சந்திரனுடைய திதிகள், கிரணங்கள், விஷுக்கள், அயனங்கள் ஆகியன பருவகால மாறுதல்களுடன் சேர்ந்தவை. அந்தக் காலங்களில் இனத்தவர் அனைவரையும் ஒருங்கு கூடச் செய்வன சடங்குகளும், விழாக்களுமாகும்"[10] எனத் தமிழ்க் கலைக்களஞ்சியமும், "விழாக்கள் கூட்டுப் பழக்கவழக்கங் களிலிருந்து பெறப்படுகின்றன. பழங்காலத்தில் நடத்தை யிலிருந்து மாய மந்திரங்களைச் சார்ந்த ஒரு சமூகக் கூட்டம் சேர்ந்து இணைந்து பெறுகின்ற ஒரு நிலைதான் விழாவாகும்,[11]" என ஆங்கிலக் கலைக்களஞ்சியமும் கூறுகின்றது.

"விழா என்பது ஒரு மதத்தைச் சேர்ந்த எல்லாச் சமூகத்தினரும் பத்துப் பன்னிரண்டு நாட்கள் கொண்டாடும் நிகழ்ச்சியாகும்"[12] என்று கணபதி ஐயர் கூறுகிறார்.

மேற்கூறிய கருத்துக்களை நோக்கும்போது 'விழா' என்பதற்குக் களிப்பு, மகிழ்ச்சி, விழைவு, கொண்டாட்டம் என்ற பொருள்கள் அறியவருகின்றன. மேலும் உயர்வாகச் செல்லுதல் உயர்ந்தோரை வணங்குதல் என்ற விளக்கமும் பெறப்படுகின்றது. அது பருவகாலச் சிறப்புகளையும், இசை நிகழ்ச்சிகளையும் தெரிவிக்கின்றது. மேலும் ஒரு குறிப்பிட்ட நாளிலோ, காலத்திலோ மகிழ்ச்சியாய் இருப்பதும், அந் நாட்களில் விருந்துண்டு களித்திருப்பதும் விழாவாகும். பருவகால மாறுதல்களுடன் நிகழ்ந்தும் சடங்குகளாகும் என்றும், பழங்காலத்தில் ஒரு சமூகக்கூட்டம் இணைந்து செய்கின்ற நிகழ்ச்சிதான் விழாவாகும் என்றும் கருதலாம்.

### 4-1-1-2 விழா—வேறு பெயர்கள்

சங்க இலக்கியங்களில் விழாவினை 'விழா'[13] 'விழவு'[14] 'சாறு'[15] என்று அழைத்தனர். இன்று விழாவைக் குறிக்க ஒவ்வொரு மாவட்டத்தினரும் ஒவ்வொரு பெயரிட்டு அழைக் கின்றனர். காட்டாக "திருநெல்வேலி மாவட்டத்தினர், விழாக்களைக் 'கொடை' என்றும், செங்கை மாவட்டத்தினர்

'பண்டிகை' என்றும் அழைக்கின்றனர்."[16] பொதுவாகக் கற்றவர்கள் திருவிழா என்றே குறிப்பிடுகின்றனர்.

### 4-1-1-3 திருவிழா

'திரு' என்றால் மேன்மை தங்கிய என்று பொருள். பழந்தமிழ் மக்கள் விழா என்று அழைத்ததைப் பிற்கால மக்கள் விழா தெய்வத்திற்காகக் கொண்டாடப்படுவதால் தெய்வத்தின் புனிதத்தன்மையையும் சிறப்பையும் கருதித்'திரு' என்ற அடைமொழியைச் சேர்த்துத் 'திருவிழா' என்று அழைத்தனர். இன்றும் இவ்வாறு அழைக்கும் வழக்கத்தினைக் காணலாம்.

## 4-2-0 விழாக்களின் தோற்றமும் வளர்ச்சியும்

விழா முதன்முதலில் எப்பொழுது தோன்றியது என்பதை வரையறுத்துக் கூறுவது அரிது. ஆதிகால மக்கள் விலங்குகளைக் கொன்று அதை உண்ணும் முன்பு ஒன்று கூடி மகிழ்ச்சியில் திளைத்தனர். அம் மகிழ்ச்சி தனி நபருக்கோ குழுவினருக்கோ தீங்கான நெருக்கடி உண்டாகும் காலத்தில் அதனை நீக்கிக் கொள்வதற்கு விழாக்கள் கொண்டாடி இருக்கலாம். மற்றும் தங்கள் உழைப்பின் பயனால் விளைந்த தானியங்களை அறுவடை செய்து அம் மகிழ்ச்சியைக் கொண்டாடியிருக்கலாம். இவற்றை விழாவின் அடிப்படைத் தோற்றம் எனலாம். இவ்வகையான விழாவிற்குக் காலப்போக்கில் சில சமயக் கொள்கைகளும், புராண ஆதாரங்களும் திணிக்கப்பட்டுச் சமய விழாக்களாகச் சிலவற்றை ஆக்கிவிட்டனர். "விழாக்கள் நம்பிக்கையின் காரணமாக மனிதன் மீவியற்கைச் சக்திகளைத் தனக்குச் சாதகமாக்க முயன்ற நிலையில் தோன்றியனவாகவே காட்சி தருகின்றன என்று க. காந்தி குறிப்பிடுகின்றார். இத்தகைய விழாக்களைப் பிற்காலத்தில் மக்கள் விருப்பத்திற்கு ஏற்பப் பல நிலைகளில் கொண்டாடி வருகின்றனர்.

விழாக்களை இறை, அரசியல், கலை முதலான பலதுறைகளில் கொண்டாடி வருகின்றனர். இறைவனை வழிபடும் முறையில் விழா எடுத்தல் வேண்டும் என்பது இந்து சமயக் கருத்தாகும்.

மனித இனத்தை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதே விழாக்களின் செயற்பாடாகும் அவை சடங்கு

களின் அடிப்படையில் தோன்றிச் சமுதாய நம்பிக்கையின் காரணமாகச் செல்வாக்குப் பெற்று வளர்ந்தும் வாழ்ந்தும் மறுமலர்ச்சியடைந்தும் மக்களிடையே தொன்று தொட்டு நிலவிவருகின்றன.

இவ்வாறு கோயில்கள் எழுப்பியபின் வழிபாடுகள் சிறந்த முறையில் நடைபெற்றபின் மனிதர் விழாக்களைக் கொண்டாடி வந்துள்ளனர். அது மேன்மேலும் வளர்ச்சியடைந்து சிறப்பாக கொண்டாடப்பட்டன. மன்னர்கள் பல விழாக்களை நன் முறையில் நடத்தியுள்ளனர்.

பல்வேறு காலங்களில் மன்னர்கள் பலர் கட்டிய கோயில் களின் நிலையைக் கொண்டே விழாக்கள் வளர்ந்திருக்கின்றன என்பதை இலக்கியத்தின் வாயிலாக அறியமுடிகிறது. மேலும் சமயச் சான்றோர்கள் பலர் தோன்றி, அக் கோயில்களின் வளர்ச்சிக்குப் பாடுபட்டதோடு இல்லாமல் கோயில்களில் வழிபாடுகள், திருவிழாக்கள் நடைபெற அரும்பாடுபட்டனர் என்பதும் தெளிவாகிறது.

ஆந்திர மாநிலத்தின் தென்திசையில் அமைந்துள்ள தமிழ்நாடு தனிப்பெருஞ் சிறப்பையுடையது. நிலவளம், நீர் வளம், குடிவளம், கோன்வளம் முதலான பல வளங்களைப் பெற்றுள்ளது. இதனால்தான் தமிழ்நாட்டு மக்கள் இன்பமும் இறை அன்பும் ஒருங்கே உடையவர்களாக இருந்தனர்; இருந்தும் வருகின்றனர்.

தமிழ்நாட்டில் திருவிழாக்கள் இடையறாது நடைபெற்று வந்தன என்பதைப் பல நூல்களின் வாயிலாக நன்கு அறிந்து கொள்ளலாம்.

> "சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
> வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"[17]

என்று கூறியிருக்கும் குறட்பாவுக்குப் பொருள் கண்ட பரிமேலழகர், 'தேவர்கட்கும் இவ்வுலகில் மக்களால் செய்யப் பெறும் விழாவோடுகூடிய பூசைநடவாது மழை பெய்யாவிடின்' என்று கூறுவர். இதனால் நாட்டில் தேவர்கட்கும் விழா நடைபெற்று வந்தது என்பது புலனாகிறது.

விழாக்கள் நாட்டில் இடையறாது கொண்டாடப்பட்டன என்று புறநானூற்றுப் பாடல் வாயிலாகத் தெரிகிறது. "மடியா விழவின் யாணர் நன்னாடு"[19] என்று குறிப்பிடப்படுகிறது.

இறையனார் அகப்பொருள் உரையின் மூலமும் விழாக்கள் நாட்டில் நடைபெற்று வந்தமையைக் காணலாம். அவற்றில் சிற்சில விழாக்களை மட்டும் குறிப்பிட்டுள்ளனர் 'ஆவணி அவிட்டம், உறையூர்ப்பங்குனி உத்திரம், கருவூர் உள்ளி விழா'[19] என்பன அந்நூல் குறிப்பிடும் விழாக்களாகும்.

விழாக்காலங்களில் ஊரில் ஆரவாரம் நிறைந்திருக்கும் என்பதை "கல்லென விழவு"[20] என்ற புறநானூற்றுத் தொடரால் அறிந்துகொள்ளலாம்.

இத்தகைய விழாக்கள் ஊர்தோறும் கொண்டாடப்பட்டன என்பதைத் திருமுருகாற்றுப்படை "ஊர் ஊர் கொண்ட சீர் பெழுவிழா''[21] என்று செப்புகிறது.

''மாயிருந் திங்கள் மறுநின்ற ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க''[22]

என்று விழாவைபற்றிப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

அகநானூற்றுச் செய்யுளிலும் விழாவைப்பற்றி,

''விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்''[23]

என்ற சொற்றொடரை அடிப்படையாகக் கொண்டு ஆண்டு முழுவதும் சமயத் தொடர்பான விழாக்கள் மலிந்தது வேங்கடம் என்று கூறுவர்.

தமிழகத்திலுள்ள எல்லாச் சிற்றூர்களிலும் விழாக்கள் மலிந்திருந்ததாகவே கூறப்பெற்றுள்ளன. ஆண்டுதோறும் வரும் விழாக்கள், பருவந்தோறும் வரும் விழாக்கள் சமூகம், சமயம், தொழில், அரசியல் ஆகியவற்றுடன் தொடர்புடைய பல்வேறு விழாக்கள் மாறிமாறி வந்திருப்பதைச் சங்கப் பாடல்களின் மூலம் அறியலாம்.

''வதுவை விழாவிற் புதுவோர்க் கெல்லாம்''[24]

என்று புறப்பாட்டடியால் திருமணவிழாக்களும் "முந்நீர் விழவின் நெடியோன்"[25] என்றதனால் கடல் தெய்வத்திற்குக் கொடுக்கப் பெற்ற வழிபாட்டின் வழியான விழாக்களும் கூறப் பெற்றிருப்பதைக் காணலாம். மேலும் புறத்தில், அரசியல், போர் ஆகிய விழாக்களும் குறிப்பிடப்பெற்றுள்ளதைக் காணலாம்.

''போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே
கல்லென் பேருர் விழவுடை யாங்ஙன்''[26]

என்று குறுந்தொகையிலும் விழா பற்றிய குறிப்புகள் காணக் கிடக்கின்றன. "விழவு முதலாட்டி''[27] என்ற சொற்றொடரைக் காணலாம். இது தலைவி இல்லறம் நிகழ்த்த வந்த பின்பே தலைவிக்குச் செல்வம் உண்டாயிற்று என்பதைத் தெரிவிக்கின்றது. மேலும்,

''உடுத்தும் தொடுத்தும் பூண்டுஞ் செறியும்
தழையணி பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே......
பெறு நலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற் றென்னும் இவ்வூரே''[28]

என்ற பாடலும் தலைவி வந்த பிறகே விழவு அயர்தற்குரிய செல்வநிலை தலைவனுக்கு உண்டாயிற்று என்பதனைக் காட்டுகிறது.

''காதலர் உழைய ராகப் பெரிது வந்து
சாறுகொள் ஊரின் புகல்வேன்''[29]

இதில் தலைவன் தலைவியுடன் இருத்தலால், விழாக்கொண்ட ஊரினர் மகிழ்வதைப் போல அவள் மகிழ்கின்றாள் என்ற குறிப்பினைக் காண்கிறோம்.

''இலங்குவளை நெகிழச் சாயானே
உளனே வாழி தோழி சாரல்
தழையணி அல்குல் மகளி ருள்ளும்
விழவு மேம்பட்டவென் நலனே''[30]

மேற்கூறிய கருத்து இப்பாடலிலும் வருதல் காணலாம்.

இங்ஙனம் ஊர்கள், ஆண்டுதோறும் விழாக்களுடன் பொலிந்த செய்தியை சங்கப் பாடல் வாயிலாகக் காணலாம். அகநானூற்றில் வருகின்ற,

''அழியா விழவின் அஞ்சு வருமூதூர்''[31]

(அழியா விழவு = என்றும் நீங்காத விழா)

என்ற அடியும் விழாவின் இன்றியமையாமையைப் புலப்படுத்துகின்றது. புறநானூற்றில் வருகின்ற 'மடியா விழவின் யாணர் நன்னாடு"[32] (மடியா = நீங்காத) என்ற அடியும் ஆண்டு முழுதும் விழா நீங்காத ஊர் குறிப்பிடப் பெறுதலைக் காண்குவம். மேலும் இந்த விழா பற்றிய குறிப்பு.

"வேறு வேறுயர்ந்த முதுவாய் ஒக்கல்
சாறு அயர்மூதூர் சென்று தொக்கொங்கு"[33] (சாறு = விழா)

என்று பட்டினப்பாலையிலும்,

"நீறு அடங்கு தெருவின் சாறுஅயர் மூதூர்"[34] (சாறு = விழா)

என்று சிறுபாணாற்றுப்படையிலும் கூறப்பெற்றுள்ளன. சிற்றூர்களும், விழாவினால் பொலிந்தனவாகக் குறிப்புகள் உள்ளன.

"விழவு அகலுணாங்கன் சீறூர்"[35]

என்ற புறப்பாட்டுக் குறிப்பினையும் காணலாம். ஒவ்வோர் இல்லமும் விழவுடன் பொலிந்ததாகவும் குறிப்பு உள்ளது.

"மாடந்தோறும் மைவிடைவீழ்ப்ப
நீயாங்குக் கொண்ட விழவினும் பலவே"[36]

(மைவிடை = செம்மறிக்கிடா) என்பதனால் மேற்கூறிய கருத்தினை அறியலாம். இங்ஙனம் இல்லந்தோறும், ஊர்தோறும், நாடுமுழுதும் விழாக்கள் மலிந்திருந்த செய்தியைச் சங்கப் பாடல்களின் வாயிலாக அறியமுடிகிறது.

சங்ககாலத்திற்குப் பிறகு இக்காலம் வரை திருவிழாக்கள் பற்றிய செய்திகள் பல்வேறு இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. மேற்குறிப்பிட்ட கால எல்லையில் மன்னர்கள், சமயச் சான்றோர்கள் ஆகியோர், கோயில் திருப்பணிகளுக்கும், திருவிழாவின் வளர்ச்சிக்கும் பல்வேறு நிலைகளில் தொண்டு செய்துள்ளனர்.

இக்காலத்தில் திருவிழாவின் வளர்ச்சிக்குப் பொதுமக்களும், சமயப் பெரியோர்களும் தொண்டாற்றி வருகின்றனர்.

## 4-3-0 விழாக்களின் நோக்கமும் குறிக்கோளும்

ஒவ்வொரு திங்களிலும் கோயில்களில் விழா நடைபெறும். ஒவ்வொரு ஆண்டிலும் ஏதாவது ஒரு திங்களில் சிறப்பாகப் பெருந்திருவிழா (பிரம்மோற்சவம்) பத்து நாட்கள் நடைபெறும். திருக்கோயில் விழா நாட்களில் மக்கள் விழாவிற்கான பணிகளைச் செய்வர். கோயிலில் கொடியேற்றியபின் அக் கொடியிறங்கும் வரை அவ்வூரில் பிற மங்கல நிகழ்ச்சிகளை அதாவது திருமணவிழா, காதுகுத்தும் விழா, புதுமனை புகுவிழா ஆகியவற்றை நடத்த மாட்டார்கள். இம் மரபு இன்றும் போற்றிக் காக்கப்பெற்று வருகின்றது.

பெருந்திருவிழாவின்போது விருந்தினர், உறவினர், நண்பர் முதலானோர் வருகை தருவர். சிறுவர் முதல் பெரியோர் வரை அனைவரும் திருவிழாவின் போது மகிழ்ச்சியாக இருப்பர்.

### 4-3-1 விழாக்களின் நோக்கம்

திருவிழாக்கள் பண்பாட்டின் அடிப்படையில்தான் அமைந்துள்ளன. பண்பாடு அன்பின் பின்னணியில் உருவாகிறது. பக்தியின் வழியில் அன்பும் தொண்டுள்ளமும் ஏற்படுகின்றன.

சமயங்களின் அடிப்படையில் திருவிழாக்கள் நடத்தப்படுகின்றன. ஒவ்வொரு சமயத்திலும் அந்தந்தச் சமயத்தின் முக்கியமான நாட்களிலும் இறைவன் பிறந்த கோள்களிலும் திருவிழாக்கள் நடத்தப்பெறுகின்றன. சமூகத்தில் மக்கள் அனைவரும் ஒற்றுமையாக இருந்து திருவிழாவினைச் சிறப்பாக நடத்தவேண்டும் என்பது நோக்கமாக அமைகிறது.

"விழா நாட்களில் மக்கள் பசி, பிணி, பகை அகன்று எல்லோரும் ஒன்றிய இன்பத்தில் திளைக்கவேண்டும்"[31] என்று பரமசிவானந்தம் குறிப்பிடுகிறார். எனவே விழா நாட்களில் மக்கள் பசி, பிணி, பகை அற்று இருப்பர்.

விழா என்பது நாட்டை வாழ்விக்க வரும் ஒரு நல்ல நாளே யாகும். நாட்டில் மக்களிடையே எத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் அவை விழா நாட்களில் இல்லாமல் நீங்கப் பெறல் வேண்டும். நாட்டில் அன்று எந்த வேறுபாடும் இருக்கக் கூடாது. சாதியாலும், சமயத்தாலும், நீதியாலும், நிறத்தாலும் பிற எந்த வகையாலும் மக்கள் வேறுபாட்டினைக் காட்டலாகாது. அன்று பசியென்று ஒருவன் நாட்டில் தவிக்கக் கூடாது. நோயாளி என்று அன்று யாரும் மருத்துவம் நாடிச் செல்லக் கூடாது. இதுவே விழாவின் நோக்கமாகும்.

செல்வரும் வறியவரும் வேறுபட்டுக் காணப்படாத நிலையை நினைவூட்டுவது விழா. பெற்றது கொண்டு சுற்றம் அருந்தும் பண்பாடே விழாவின் குறிக்கோள். அதாவது திருவிழாவின்போது மக்கள் ஒற்றுமையாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்கவேண்டும். சுற்றத்தாரோடும், விருந்தினரோடும், நண்பர்களோடும் கலந்து விருந்துண்ண வேண்டும் என்பதாகும்.

திருவிழா நடைபெறுவதன் அடிப்படைக் காரணம் கோயிலுக்கு வரவியலாத—வரக்கூடாத—வரமுடியாத சூழ் நிலையில் உள்ளவர்களுக்கு அதாவது தொழு நோயாளிகள், ஊனமுற்றோர், வீட்டு விலக்கான பெண்கள், தீட்டுக்காலங் களில் உள்ளவர்கள் முதலானோர்களுக்கு இறைவன் தானே கருணா மூர்த்தியாக இருந்து அவர்கள் இல்லத்தின்முன் திருவீதி உலாவாகச் சென்று அருள் தருகிறான். இதுதான் விழாவின் குறிக்கோளாகும்.

**4-3-2 விழாக்களால் ஏற்படும் நன்மைகள்**

திருவிழாவின்போது பல பயன்கள் மக்களுக்கு ஏற்படுவ தால் மக்கள் மகிழ்ச்சியடைகின்றனர். நாள்தோறும் தாம் செய்யும் தொழிலைச் செய்து கொண்டும், உடுப்பதையே உடுத்திக்கொண்டும், உண்பதையே உண்டுக்கொண்டும் வாழ் கின்றனர். காண்பன, கேட்பன, பேசுவன முதலானவற்றையே கண்டும், கேட்டும், பேசியும் வாழ்நாள் கடத்தும் மக்களும் உள்ளனர். இப்படி ஒரே வாழ்க்கையை நடத்தும் மக்கள் தாம் செய்யும் தொழிலிலிருந்து ஓய்வு பெற்று இனியன உடுத்தும் உண்டும் களிப்பர்.

புதிய ஊர்கள், சோலைகள், ஆறுகள், குளங்கள், ஏரிகள் முதலிய இடத்திற்குத் திருவிழா நாட்களில் மக்கள் செல்வர். அங்குப் புதிய மாந்தர்களைக் கண்டும், அவர்கள் தனித்தனிக் குழுவினராய் மக்கள் தத்தம் ஊர்களிலிருந்து கொண்டுவந்து பேசும் பல புதிய செய்திகளைக் கேட்டும் மகிழ்வர்.

பிரிந்த மனைவி, மக்கள், பெற்றோர்கள், உற்றார்கள், உறவினர், நண்பர் முதலானோர்களுடன் மறுபடியும் கலந்து, சேர்ந்து ஒற்றுமையுடன் கூடி இன்புறுவதற்குத் திருவிழா மிகவும் பயன்படுகிறது.

திருவிழா பொதுவாகப் புராணங்களின் பெயராலும் சமயங்களின் பெயராலும் ஏற்பட்டிருந்த போதிலும் அதற்கு அடிப்படையான காரணம் பொருளாதாரம் என்று குறிப்பிட லாம். ஒருவரிடையே, ஒரே நகரத்தில் உள்ள மக்களிடையே செல்வம் குவிந்திடில்லாமல் பரவலாக அனைவரிடத்திலும் பரவ வேண்டும் என்பதற்காகத் திருவிழா நாட்களில் பலவித கடைகள் வைக்கப்பெறுகின்றன. ஏழைகள்கூட விழா

நாட்களில் கடைகள் வைத்து வாணிகம் நடத்துகின்றனர். இதனால் பொருளாதாரம் செழிக்க ஏதுவாக அமைகிறது.

"திருவிழா மக்களிடையே ஒற்றுமையுணர்வை உண்டாக்கு கிறது" நல்லுறவை வளர்க்கிறது; விருந்தோம்பல் என்ற பண்புக்கு உரம் ஊட்டுகிறது. சுருங்கச் சொன்னால் திருவிழாக்கள் மக்களின் உள்ளத்தை வளம்படுத்தும் உவகைக் கடலாகும்.

### 4-3-3 விழா நாள் மரபுகள்

திருவிழா நடைபெறுகின்றபோது முன்னோர்கள் பல மரபுகளைக் கடைப்பிடித்து வந்துள்ளனர். அவற்றில் சிலவற்றை இன்றும் மக்கள் பின்பற்றிவருகின்றனர்.

விழா நாட்களில் மக்கள் பிற எந்தத் தொழிலையும் செய்வதில்லை; கோயில் பணிகளையே செய்வர். விழா நாட்களில் மன்னர் சிறைபட்ட கைதிகளை விடுவிப்பதையும் மற்றும் இரவலர்க்குப் பரிசளித்தலையும் மரபாகக் கொண் டிருந்தமை வரலாறு மூலமாகத் தெரியவருகின்றது.

இவ்விழா நாள் மரபினை இன்றும் சுதந்திரநாள் விழா, குடியரசுநாள் விழா முதலிய தேசிய விழா நாட்களில் நீண்ட நாள் சிறையிலுள்ள கைதிகளை அரசு விடுதலை செய்து வருவதைக் கொண்டு அறியலாம். காந்தி, நேரு, பாரதி, பாரதிதாசன், அம்பேத்கார் முதலானோர்களின் நூற்றாண்டு விழாவின்போது நீண்டநாள் கைதிகளின் காலங்களைக் குறைத்து விடுதலை செய்துள்ளனர்.

## 4-4-0 விழாவும் நோன்பும்

திருவிழாவோடு தொடர்பு கொண்டதாகவே நோன்பைக் கருதிவருகின்றனர். நோன்பு என்ற சொல்லின் பொருளும், அதை மேற்கொள்ளும் முறையும், நோன்பு நாட்களும், நோன்பின் நோக்கமும், பயனும் ஈண்டு விளக்கப்பெறுகின்றன.

### 4-4-1 நோன்பு விளக்கம்

நோன்பு என்பது சிறப்பாகப் பெண்களுக்கு மட்டுமே உரியதாகக் கருதப்பட்டு வருகின்றது. இருந்தாலும் சில பண்டிகைக் காலங்களில் ஆண்களும் நோன்பினை மேற்கொள்

கின்றனர். மார்கழித் திங்களில் காலையில் பெண்கள் நீராடி, கண்ணனையும் சிவனையும் வழிபடுகின்ற நெறியை முறையே திருப்பாவையிலும், திருவெம்பாவையிலும் சிறப்பாகக் காணலாம். இந்நோன்பினைப் பாவைநோன்பு என்றும் அழைப்பர். வரலட்சுமி நோன்பு, காயத்ரி நோன்பு ஆகிய நோன்புகளும் உள்ளன. இத்தகைய நோன்புகள் மேலும் பல உள.

"வேள்வி, தபசு முதலியவைகளைச் செய்ய முடியாதவர் களுக்கென்றே ஏற்பட்டது நோன்பு. பேரின்பப் பரம் பொருளைப் பெறவும், இகபர இன்பம் அடையவும் சில நியமங்களுடன் உபவாசமிருந்து அர்ச்சிப்பது நோன்பு எனப்படும்."[39] ஆகவே வேள்வி, தபசு செய்வது மிகக் கடினம், பொருளாதாரச் செலவும் அதிகமாகும். தபசு செய்வது சாதாரண மக்களால் இயலாத செயல். எனவே சாதாரண மக்கள் நோன்பு இருக்க முற்பட்டனர்.

"நோன்பு நாளைச் சிறந்த விழா நாளாகச் செய்துகொள்வ தற்குச் சித்த சக்தி வேண்டும். இத்தகைய சக்தியளிப்பது நோன்பு. அகமகிழ்ச்சிக்கும் செல்வத்திறனுக்கும் இன்றியமை யாதது நோன்பாகும்."[40]

நோன்பை வடமொழியில் விரதம் என்பர். எனவே வேள்வி, தபசு ஆகியவற்றை மேற்கொள்ள இயலாத எளிய மக்கள் இறையருளைப் பெற மேற்கொள்ளும் செயல்முறையே நோன்பு என்று கருதலாம்.

## 4-4-2 நோன் புமுறைகளும்—நோன்பு நாட்களும்

நோன்பன்று ஆண்களும் பெண்களும் நன்னீராடி ஒரு வேளை உணவு உண்பர். சில பண்டிகை நாட்களில் நாள் முழுவதும் உண்ணாநோன்பு இருந்து இரவில் பால் பழங் களை மட்டும் உண்பர். பண்டிகை நாட்களில் இறைவனுக்குத் திருவமுது படைத்துக் காக்கைக்கு உணவு வைத்த பின்பே உண்பர்.

திங்கட்கிழமை, வெள்ளிக்கிழமை, சனிக்கிழமை முதலிய நாட்களில் இந்து சமயத்தினர் நோன்பு இருப்பர். இந் நாட்களைச் சிறப்பான நாட்களாகக் கருதுவர். மேற்கூறிய மூன்று நாட்களுடன் செவ்வாய்க்கிழமையன்றும் பெண்கள்

நோன்பு இருப்பர். திங்கட்கிழமை சிவனுக்கும், சனிக்கிழமை பெருமாளுக்கும், இருபாலாரும் நோன்பை மேற்கொள்வர். வெள்ளி, செவ்வாய் ஆகிய நாட்களில் மகளிர் பெண் தெய்வங்களான துர்க்கை, கிராமச் சிறுதெய்வங்கள் ஆகியோருக்கு நோன்பைக் கடைபிடிப்பர் நோன்பு நாட்களில் நோன்பை மேற்கொள்வோர் பொதுவாக நற்செயல்களைச் செய்தும் நற்சிந்தனைகளோடும் இருந்து இறைவனை எண்ணியபடியும் இருப்பர். மேலும் ஒருசிலர் பிறரிடம் பேசுவதையும் தவிர்த்து விடுவது உண்டு. ஏழை எளியவர்களுக்கு உணவு, உடை வழங்குவதும் உண்டு. இவ்வழக்கத்தை இன்றும் காணலாம்.

மேலும் அமாவாசை, கிருத்திகை ஆகிய நாட்களிலும் நோன்பு இருந்து வருகின்றனர். இத்தகைய உண்ணா நோன்பினைக் குறித்துக் குறிப்பிடும்போது எம்.அருணாசலம் அவர்கள் "ஒருவேளை உண்ணா நோன்பு அல்லது ஒரு நாள் உண்ணாநோன்பு கடைபிடிக்கப்படினும் அது மனித இனத்தின் ஆன்மீக உணர்வில் மேம்பாட்டைத் தோற்றுவிக்கிறது"[41] என்று கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

### 4.4-3 நோன்பின் நோக்கமும் பயனும்

மக்கள் நோன்பு இருப்பதால் உடலுக்கு நல்லது. ஆயுள் நீளும். நோன்பு நாட்களில் துளசி, வில்வம் ஆகியவற்றை நீருடன் கலந்து உண்பர். இது சமயநெறியில் காணப்படும் அறிவியல் வழிபட்ட உடல்நல முறையாகும்.

பண்டிகை நாட்களில் மக்கள் நோன்பு இருந்து பலவகை இனிப்புகளைச் செய்து இறைவனுக்குப் படைத்து விருந்தினரோடு மகிழ்ந்து உண்பர். திருவிழா, நோன்பு முதலியன மக்களைத் தூய்மைப்படுத்திக் கொள்வதற்கும் வீட்டைச் சுத்தம் செய்வதற்கும்கூட பயன்படும் ஒரு கருவியாக அமைகின்றன.

உடலை மட்டுமின்றி உள்ளத்தையும் தூய்மையாக வைத்துக்கொள்ளவும் ஐம்புலன்களை அடக்கிக்கொள்ளவும் நோன்பு பயன்படுகிறது.

## 4-5-0 விழாவும் மனிதனும்

எல்லா விழாக்களும் மனிதனோடு தொடர்புடையவை தான். மனிதனின் குறிக்கோளையும் எண்ணங்களையும்

விழாக்களோடு முறைப்படுத்தி நடத்திவருகின்றனர். இங்கு விழாவும் நம்பிக்கையும், விழாவும் வாழ்வும், விழாவும் வாணிக மும் என்ற மூன்று வகையில் விழாபற்றி விளக்கப்படுகின்றது.

### 4-5-1 விழாவும் நம்பிக்கையும்

பண்டிகை, நோன்பு, விழா முதலியன யாவும் நம்பிக்கை யின் அடிப்படையில்தான் நடத்தப்பெறுகின்றன. இறைவன் அருள்புரிவான் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் பெருந் திருவிழாக்களும் சிறிய திருவிழாக்களும் நடத்தப்பெறுகின்றன. படையல் வைத்தல், சிறுதெய்வங்களை வழிபடுதல், பொங்கல் வைத்தல், வேண்டுதல்களை நிறைவேற்றல் ஆகியன நம்பிக்கை யின் அடிப்படையில்தான் நடைபெறுகின்றன.

தமக்கு நன்மை ஏற்படும் என்ற காரணத்தால் மேற்கூறிய செயல்களை மக்கள் மேற்கொள்கின்றனர். தங்கள் வீட்டில் மக்கள் செழிப்பாகவும், நோய்நொடியின்றியிருக்கவும் வேண்டு தல் செய்கின்றனர். வேலை கிடைக்க வேண்டியும், நன்றாகப் படிக்கவும் தேர்வில் வெற்றிபெறவும் மக்கள் இறைவனிடம் வேண்டுதல் செய்கின்றனர்.

விழாவின் தொடக்கத்தில் ஏற்றப்பெற்ற கொடி விழாவின் இறுதி நாளன்று இறக்கப்படும். இதற்கு இடையில் உள்ள நாட்களில் அவ்வூர் எல்லைக்குட்பட்டு வாழும் மக்கள் குறிப்பாகச் சிறிய குழந்தைகளைப் பெற்றிருக்கும் பெண்கள் அவ்வெல்லையைக் கடந்து வெளியூர்களுக்குச் சென்று இரவு தங்கக் கூடாது என்பது மரபாக உள்ளது. அப்படிச் சென்று இரவு தங்கி வந்தால் ஏதாவது கேடு விளையும் என்ற நம்பிக்கை மக்களிடையே நெடுங்காலமாகவே இருந்து வருகின்றது. இன்றும் இம்மரபை மக்கள் கடைபிடித்துவருகின்றனர்.

மேலும் இக்காலங்களில் எவ்வித நற்செயல்களையும் வீட்டில் நடத்தக் கூடாது என்பதும் வரையறுக்கப்பட்ட மரபாக இருந்துவருகின்றது இந்நம்பிக்கையை இன்றும் மக்கள் பின்பற்றி வருகின்றனர்.

விழாவில் கலந்துகொள்வோர் உள்ளத்தாலும் உடலாலும் தூய்மையாக இருத்தல் வேண்டும். தீட்டுக்காலங்களிலும், பெண்கள் வீட்டுவிலக்கு நேர்ந்த காலத்திலும் அவர்கள் கோயி லுக்கும், விழாவிற்கும் செல்லக்கூடாது என்ற மரபு நிலவி

வருகின்றது. மரபை மீறிச் சென்றால் தனிநபருக்கோ அவ்வூருக்கோ கேடு விளையும் என மக்கள் அஞ்சுகிறார்கள். இந் நம்பிக்கை இன்றும் மக்களிடையே இருந்துவருகிறது.

### 4-5-2 விழாவும் வாழ்வும்

வாழ்க்கையை நிம்மதியாகவும், மகிழ்ச்சியாகவும் நடத்தக் கோயில் வழிபாடு மிகவும் இன்றியமையாததாக உள்ளது வழிபாட்டில் விழாவும் அமையவேண்டும். ஏனெனில் விழா நாட்களில் மக்கள் மகிழ்ச்சியோடு இருப்பர்.

மனிதன் தன் வாழ்வில் என்னென்ன சிறப்பான நிகழ்ச்சிகளைச் செய்கின்றானோ அவற்றையெல்லாம் இறைவனுக்குச் செய்து இன்புறுகிறான். காட்டாக மனித வாழ்க்கையில் திருமணம் ஒரு சிறப்பு நிகழ்ச்சியாக விளங்கிவருவதைக் கருதிய மனிதன் அதை இறைவனுக்கும் செய்து மனநிறைவு அடைவதைக் காணலாம். இவ்வாறே மனித வாழ்க்கையில் நடைபெறும் சிறப்பான நிகழ்ச்சிகளை இறைவனுக்கும் செய்து வருகின்றனர்.

புலவர் பெருமக்கள் மூதன் முதலில் பள்ளியெழுச்சியை மன்னர்கள் மீது பாடிப் பரிசில் பெற்றனர். பின் திருப்பள்ளியெழுச்சியை இறைவன்மீதும் பாடி இன்புற்றனர். மாணிக்கவாசகரும் தொண்டரடிப்பொடியாழ்வாரும் திருப்பள்ளியெழுச்சிகளைப் பாடியிருப்பதைக் காட்டாகக் கூறலாம்.

மன்னர்கள் பிறந்தநாள் விழாவைக் கொண்டாடி வந்தனர். அவ் விழாவில் ஏழைகளுக்கு அன்னமிடுதல், புலவர்களுக்குப் பரிசளித்தல் ஆகிய அருட்செயல்களைச் செய்து வந்தனர். அவ்வாறே இறைவன் பிறந்த நாளிலும் கோயில்களில் திருவிழா நடத்திவருகின்றனர்.

மக்கள் தம் குழந்தைகளை ஊஞ்சலில் வைத்து ஆட்டி ஊஞ்சற்பாடல் பாடுவர். இவற்றைப் பின்பற்றி இன்றும் இறைவனுக்கும் ஊஞ்சல்விழா நிகழ்த்திவருகின்றனர்.

திருமணக்கோலத்தில் மணமக்களை அழகுசெய்து குதிரை மீதோ பல்லக்கிலோ இருத்தி வலம் வரச்செய்வர். மணமகளுக்கு நகைகள், மலர்கள், ஆடைகள் ஆகியவற்றால் அழகு செய்வர். அவ்வாறே இறைவனுக்கும், இறைவிக்கும் அழகுசெய்து ஊர்தி மீது திருவீதிவுலா வரச் செய்கின்

இவ்வாறு மனிதன் வாழ்வில் செய்யும் சிறப்பு நிகழ்ச்சிகளை இறைவனுக்கும் செய்து இன்புறுகிறான். அதனால் விழாவும் வாழ்வும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்துள்ளன.

## 4-5-3 விழாவும் வாணிகமும்

விழா நடைபெறும் நாட்களில் ஊரில் சிறப்பான முறையில் எல்லா வகையான கடைகளும் ஏற்படுத்தப்பெறும். தேர்த் திருவிழா, தீமிதித்திருவிழா, முருகன் கோயில் சூரசம்ஹார விழா, அறுபத்து மூவர் உலா ஆகிய சிறப்பான திருவிழாக் களைக் கண்டு இன்புறுவதற்குச் சுற்றுப்புறங்களிலிருந்து மக்கள் திரண்டு வருவர். தத்தம் வீட்டிற்குத் தேவையான பொருட் களையும், குழந்தைகளுக்கு விருப்பமான விளையாட்டுப் பொம்மைகளையும் இனிப்பு வகைகளையும் வாங்குவது வழக்க மாக இருந்துவருகின்றது. இதனால் எல்லா வகை வாணிகமும் சிறப்பாக நடைபெறுகின்றது எளியோர்கூட விழா நாட்களில் கடைவைத்து வாணிகம் நடத்துகின்றனர்.

கோயிலின் உட்சுற்று, புறச்சுற்றுக்களிலும், ஊரிலுள்ள கடைவீதிகளிலும், கோயில் அமைந்துள்ள இடத்தைச்சுற்றிலும் அறிவு நூல்கள், சமய நூல்கள் ஆகிய நூல்களை விற்கும் கடைகளும், பருகுதற்கினிய நீர், மோர், பானகம் வழங்கும் பந்தல்களும் அமைக்கப்பெற்றிருக்கும். அப்பம், முறுக்கு, வடை, தீம்பாகுகள் முதலிடன விற்கும் சிற்றுண்டிச் சாலை களும், ஓவியங்கள், புதுமையான காட்சிகள் அமைந்த நிலையங்களும் பல்வேறு மலர்கள், மண்பாண்டங்கள், பிளாஸ்டிக் பொருள்கள் விற்கும் கடைகளும் அமைக்கப் பெற்றிருக்கும். மேலும் பித்தளைக்கலங்களும், செப்புக் கலங்களும், பொன், வெள்ளியிலான நகைகள் விற்கப்பெறும் கடைகளும் அமைந்திருக்கும்.

பட்டாடை, நூலாடை விற்பனைக் கூடங்களும் அமைக்கப் பெற்றிருக்கும். அவற்றின்கண் மக்கள் திரள் திரளாய்க் கூடித் தத்தமக்கு வேண்டியவற்றை வாங்கிச் செல்வர் இவ்வாறு விழாவில் வாணிகம் சிறப்பாக நடைபெறும். அதனால் பொருளாதாரம் வளர்ச்சியடையும். ஏழை மக்கள் தாம் தயாரித்த பொருட்களை விற்று. தமக்குத் தேவையான பொருட்களை வாங்கிக்கொள்வர்.

## 4-6-0 விழாவும் கலையும்

கோயில் வழிபாட்டில் விழாவும் கலையும் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன. இங்கு விழாவும் இசையும், விழாவும் இலக்கியப் பேருரையும் விழாவும் தேரும் என்ற அடிப்படையில் விழாவுடன் தொடர்புடைய கலைகள் விளக்கப்பெறுகின்றன.

### 4-6-1 விழாவும் இசையும்

பழங்காலத்திலிருந்தே கோயில்களில் இசைக்கலைஞர்கள் இருந்து வந்துள்ளனர். இசைக் கருவிகள் முழங்கியபடி இறைவனுக்கு வழிபாடுகள் நடைபெறும். ஒவ்வொரு வேளைப் பூசைக்கும் ஒவ்வொரு இசைக்கருவியை முழக்குவர். இசைக் கலைஞர்கள் கோயில்களில் வழிவழியாக இருந்து வருகின்றனர். அக் கலைஞர்களுக்கு மானியமாக மன்னர்கள் நிலங்களைக் கொடுத்த செய்திகளை வரலாற்றின் வாயிலாக அறியலாம். காட்டாக "கி.பி. 1014 ஆம் ஆண்டு இராசராச சோழன் பொறித்த கல்வெட்டு ஒன்றில் தஞ்சைக் கோயிலில் திருப்பதிகம் ஓதும் நாற்பத்தெட்டு இசைவாணர்களுக்கும் இவர்களோடு தாளக்கருவிகள் வாசிக்கும் இருவருக்குமாக ஒரு நிவந்தம் ஏற்பாடு செய்திருந்தான்''[42] என்ற செய்தியால் பழங்காலத்திலிருந்தே திருக்கோயில்களில் இசைவிற்பன்னர்கள் இருந்தமையை உணரமுடிகிறது.

விழாக்காலங்களில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு இசையோடு இறைவனை வழிபாடு செய்வர். விழாவில் யாழ், முழவு, முரசு, குழல், தாளம், மத்தளம் ஆகிய இசைக்கருவிகள் இடம்பெறும். அவ்வோசை விழாக்காலத்தில் கோயிலில் இடையறாது ஒலித்துக் கொண்டிருந்ததாகப் புறநானூற்றின் வாயிலாக அறியப்பெறுகிறது. "மடியா விழாவின் யாணர் நன்னாடு."[43]

விழாக்காலங்களில் இசையுடன் கூடிய கூத்துக்களும், ஆடல்களும், பாடல்களும் நடைபெறுகின்றன. தமிழிசை கோயில்களிலேயே வளர்ந்திருக்கிறது என்றால் மிகையாகாது.

தமிழ்நாட்டிலுள்ள சில கோயில்களில் இசைத் தூண்கள் உள்ளன. மண்டபத் தூண்களில் இறைவனுக்கு ஏற்ப சில குறிப்பிட்ட பண்களைக் கட்டளைப்படுத்திக் கல்லிலேயே செதுக்கி நிறுத்தியிருக்கின்றார்கள். மதுரை, நெல்லை,

சுசீந்திரம் ஆகிய கோயில்களில் இத் தூண்களைக் காணலாம். இவற்றில் ஒவ்வொரு தூணும் ஓர் ஒலியை எழுப்புகின்றது.

நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர திருக்கோயிலிலும் இசைவிற்பன்னர்கள் வழிவழியாக இருந்து வருகின்றனர். இவ்விசைக் கலைஞர்களுக்கு மன்னர்கள் நிலங்களை மானியமாக வழங்கி உள்ளனர் என்பர். அந்நிலங்களைப் பயிரிட்டு அவற்றிலிருந்துபெறும் உணவுப் பொருட்களைக்கொண்டு தங்களது குடும்பத்தை நடத்தி வருவதாக நாதசுர வித்வான் திரு.பி. வெங்கடமுனிசெட்டி அவர்கள் ஆய்வாளரிடம் கூறியுள்ளார். நாராயணவனம் திருக்கோயிலில் வழிபாட்டின்போது இசைக்கப்பெறும் இசைகள் பற்றி மேற்குறிப்பிட்ட நாதசுர வித்வான் அவர்கள் கூறியது.

கொலு : திருப்பள்ளியெழுச்சிக்குபின்—பூபாள பண், மலையமாருத பண்.

தோமாலை பூசை : தன்யாசிபண், காவேரிப்பண், கேதாரப்பண், தோடிப்பண்.

உச்சிக்காலப்பூசை : தர்பார் பண், ஸ்ரீராகப்பண், மத்தியாவதிப்பண், காடைப்பண்.

மாலை வேளை : பூரிகல்யாணிப்பண், கல்யாணிப்பண், சாரங்காப்பண்.

அர்த்தசாமபூசை : ஊஞ்சல், வாலி, ஓடம்.

பெருமாளைக் கோயிலினுள் எழுந்தருளச் செய்யும் பொருட்டு உள்திருச்சுற்று வலம் வரும்போது எச்சரிக்கை எனும் இசை முழங்கப்படும். இச் சமயத்தில் நாதசுரம் சுருதி மட்டும் இசைக்கப்படும். இவ்விதம் எல்லா உற்சவங்களுக்கும் விமானம் வலம் வரும்போது இசைக்கப்பெறும். இவ்வழக்கம் வேறெந்த திருமால் திருக்கோயில்களிலும் பின்பற்றப்படுவதில்லை என்பர். இதற்குக் காரணம் விமான வலம் வரும்போது அமைதியாக வலம்வரவேண்டும் என்று ஆகமம் கூறுகிறது.

பரிவேட்ட மேளம்

பெருமாள் உற்சவத்திலும் திருக்கல்யாண உற்சவத்திலும் மற்றும் பல சிறப்பு நாட்களிலும் இறைவனுக்குப் பரிவட்டம் கட்டும்போது சுருட்டைப்பண் இசைக்கப்பெறும். இப்பண்,

நாதசுரத்திற்கு ஏற்ப மிக நயமாக இசைஞானம் இல்லாதவர் களையும் இழுக்கும்வண்ணம் அமையும். இவ்விசைகூட வேறெந்த வைணவத் திருக்கோயில்களிலும் இசைப்பதில்லை என்பது குறிப்பிடத்தக்கது என்பர் ஸ்ரீதர் பட்டர்.

மேலும் சுருட்டைப்பண் வியாழக்கிழமை பூலங்கி சேவை செய்யும்போதும் வெள்ளிக்கிழமை அபிடேகப் பொருட்கள் கோயிலைச் சுற்றி மரியாதை எடுத்து வரும்போதும் இசைக்கப் படுகிறது.

### தேர் வாத்தியம்

வைகாசித் திங்களில் நடைபெறும் திருத்தேர் திருவிழாவிற்குப் பெருமாள் கோயிலிலிருந்து புறப்பட்டு, திருத்தேர் செல்லும் வரையும், தேர்த்திருவீதி உலா செல்லும் போதும் ஒடப்பண் இசைக்கப்படுகிறது. இங்கு இசைக்கப்படும் இந்தப் பண் வேகமாகவும் இசைக்கருவிகள் ஒன்றாகச் செயல் படுகிறது. இங்கு இசைக்கும் பண் கேட்பதற்கு இனிமையாக இருக்கும். திருத்தேர் ஆடுவதற்கும் இந்த இசைக்கும் ஒற்றுமை யாக இருக்கும். இக் காட்சியை நேரில் கண்டால்தான் அதன் சிறப்புத் தெரியும். இந்த நுணுக்கத்துடன் கூடிய இசையை வைணவத் திருக்கோயில்களான திருமலை, திருப்பதி, காஞ்சி, திருவரங்கம் ஆகிய கோயில்களில் காண இயலாது என்பர். இவ்விசை இக் கோயிலுக்குச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. இவ்விசையை இசைப்பதில் இங்குள்ள இசை வித்வான்களின் திறமையே காரணம் என்று பெரியோர்கள் கூறுகின்றனர். இவ்விசை வழிபாடு வழிவழி பல தலைமுறையாக இருந்து வருகின்றன என்கிறார். இப்பொழுதுள்ள பி. வெங்கடமுனி செட்டி நாதசுர வித்வானின் பெற்றோர்கள்கூட இவ்விசையில் சிறப்புப் பெற்றிருந்தனர் என்பர்.[44]

### 4-6.2 விழாவும் இலக்கியப் பேருரையும்

திருவிழாக்காலங்களில் சமயத் தொடர்பான விரிவுரைகள் இலக்கிய உரைகள், புராண விளக்கங்கள், கதாகாலட்சேபங்கள், பிரபந்தக்குழுக்களின் இசைப்பாடல்கள், இசையரங்குகள் முதலியன இரவு முழுதும் நடந்தவண்ணமாக இருக்கும். இதில் இலக்கியப் பேருரைகள் சிறப்புப்பெறும்.

இவ்விலக்கியப் பேருரைகளால் மக்கள் புராணக் கதைகளையும், சமயக் கருத்துக்களையும் தெரிந்துகொள்ள வாய்ப்பு ஏற்படுகின்றது. சமய உண்மைகளையும் சமய நெறிமுறைகளையும் அறிந்து அவற்றின்படி நடக்க முயல்வர். அறக் கருத்துக்களையும் அறநெறிகளையும் அறிந்து செம்மையுறுவர்.

## 4-6-3 விழாவும் தேரும்

விழா நடைபெறும் நாட்களில் சிறப்பு நிகழ்ச்சியாக தேரும் இடம் பெறும். தேரை இழுக்க மக்கள் நிரம்பி இருப்பர். மக்கள் உயர்வு தாழ்வை மறந்து பெருமானின் கம்பீரத்தைக் கண்டு உள்ளத்தே உவகையும் பக்தியும் கொண்டு தேரை இழுப்பர்.

ஒவ்வொரு பெருங்கோயிலிலும் தேர் இருக்கும். சிறப்பாகக் கோயில்களில் தேருக்கென்றே தேர்த்திருவிழாக்கள் நடைபெறுகின்றன. தேரைத் தொட்டு இழுப்பதால் மக்கள் தங்களுக்கு நன்மை ஏற்படும் என்ற நம்பிக்கையும் உண்டு. வீதியில் தேர் உலா வரும்போது உடலில் ஏதேனும் பிணியுடையோர் உப்பையும் மிளகையும் தேர்மீது இறைப்பர். இவ்வாறு செய்தால் நோய் நீங்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே உள்ளது.

## 4-7-0 விழா வகைப்பாடுகள் (பொது நிலை)

பழங்காலத்திலிருந்தே மக்கள் பல்வேறு முறையில் விழாக்களைக் கொண்டாடி வந்துள்ளனர் என்பர். அம் மரபை அவ்வாறே இன்றும் மக்கள் பின்பற்றி வருகின்றனர். ஆனால் திருக்கோயில் திருவிழாக்கள் எனும்போது சிறிது மாறுபடுகிறது. பொதுவாகத் திருவிழாக்களை மூன்று, ஐந்து, பத்து நாட்களாகக் கொண்டாடிவருகின்றனர்.

பெரிய கோயில்களில் ஆண்டுக்கொருமுறை சிறப்பாக இறைவன் பிறந்த கோளன்று பத்து நாட்கள். பெருந்திருவிழா (பிரம்மோற்சவம்) நடத்தப்பெறும். சிறிய கோயில்களில் ஒருநாள் உற்சவம் நடத்துவர்.

விழாக்களை அவற்றின் நோக்க அடிப்படையில் நான்கு வகையாகப் பிரிக்கலாம். அவை 1. சமய விழாக்கள், 2. சமுதாய விழாக்கள், 3 தேசிய விழாக்கள், 4. இலக்கிய.

விழாக்கள் என்பனவாகும். இச் சமய விழாக்கள், புராணங்கள் அடிப்படையிலும் கோள்கள் இடப்பெயர்ச்சிக்கு ஏற்பவும், ஆசாரியர்களின் பிறந்தநாளிலும் கொண்டாடப்பெறும். இந்திய நாட்டில் இன்று இந்து சமயம், இஸ்லாமிய சமயம், கிறித்துவ சமயம் எனும் சமயங்கள் நிலைபெற்று வருகின்றன. எனவே, இச் சமயங்களின் அடிப்படையில் நடந்துவரும் விழாக்கள் பின்வருமாறு விளக்கப்பெறுகின்றன.

இந்து சமய விழாக்களுள் பொங்கல் திருவிழா, மகாசிவராத்திரித் திருவிழா, கிருட்டிண ஜெயந்தி விழா, வைகுண்ட ஏகாதசித் திருவிழா, தைப்பூச விழா, கந்தசஸ்டி விழா, கார்த்திகை விளக்குவிழா, தீபாவளித் திருவிழா, விநாயகர் சதுர்த்தித் திருவிழா, நவராத்திரி விழா, தீமிதித் திருவிழா ஆகிய விழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றன. இரம்சான், மிலாடிநபி ஆகிய நாட்களில் முஸ்லீம்களும், கிறித்துமஸ், நல்லவெள்ளி, ஈஸ்டர் திருநாள் ஆகிய நாட்களை கிறித்துவர்களும் விழாக்களாகக் கொண் டாடுகின்றனர்.

சமுதாய விழாக்களைக் குறிப்பிட்ட சமுதாயத்தினர் கொண்டாடுகின்றனர். காதணிவிழா, பிறந்தநாள்விழா, பாராட்டுவிழா, திருமணவிழா, அரங்கேற்றவிழா முதலியன சமுதாய விழாக்களாகும். இச்சமுதாய விழாக்கள் அவ் ஊரிலுள்ள மக்கள் அனைவருக்கும் மகிழ்ச்சியைத் தரா. ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கோ குழுவினருக்கோதான் இன்பம் தரும்

இலக்கிய விழாக்கள் என்பது சிறந்த கவிஞர்களுக்கும், புலவர்களுக்கும் அவர்களால் எழுதப்பட்ட நூல்களுக்கும் எடுக்கும் விழாவாகும். இதற்குக் கம்பன் விழாவைக் காட்டாகக் கூறலாம். நூல் வெளியீட்டு விழா, கருத்தரங்கு விழா, நூற்றாண்டு விழா, பட்டிமன்றம், வழக்காடுமன்றம், கவியரங்கம் முதலியன இவ்வகை விழாவில் அடங்குவன.

தேசிய விழாக்கள் பொதுவாக நாட்டில் உள்ள எல்லா மக்களாலும் கொண்டாடப்படும் விழாவாகும். நாடு முழுவதிலும் உள்ள பள்ளிகள், கல்லூரிகள், அரசு அலுவலகங் கள், நீதிமன்றங்கள், மாநில அரசு, நடுவணரசு என அனைத்தும் தேசிய விழாக்களைக் கொண்டாடி வருகின்றன.

காட்டாகச் சுதந்திரநாள், குடியரசுநாள், காந்தி நினைவு நாள், காந்தி பிறந்தநாள் ஆகியனவாகும்.

இதேபோன்று கோயில் விழாக்களையும் மக்கள் கொண்டாடிவருகின்றனர், அவற்றைப்பற்றி ஈண்டு விளக்க மாகக் கூறப்படுகிறது. வைணவத் திருத்தலங்களுள் சிறப்பு வாய்ந்தது திருப்பதியாகும். இத் திருத்தலத்தில் திருவேங்கடவன் நின்ற நிலையில் தன்னை நாடிவரும் கோடான கோடி மெய்யன்பர்களுக்கு அருள் புரிந்து வருகின்றார். அருள்மிகு பத்மாவதித் தாயாரை திருமணம் செய்துகொண்ட திருத்தலம் நாராயணவனம் என்ற புண்ணியத் திருத்தலமாகும். எனவே, அங்குக் குடிகொண்டிருக்கும் இறைவன் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர பெருமாள் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றார். இக் கோயிலில் நடைபெறும் திருவிழாக்கள் பற்றி இவ்வியலில் விரிவாக ஆயப் பெறுகின்றன.

## 4-8-0 திருக்கோயில் திருவிழாக்கள்

இத் திருக்கோயிலில் நடைபெறும் திருவிழாக்கள் அன்றாடத் திருவிழா, கிழமை விழா, திங்களிருமுறை விழா, கோள்விழா, திங்கள் விழா, ஆண்டுவிழா, தாயார் பற்றிய விழா, ஆழ்வார்கள் பற்றிய விழா, ஆசாரியார்கள் பற்றிய விழா என பகுத்துரைக்கப்படுகின்றன. திங்கள் விழா என்ற பகுப்பில் முதல் திங்களான சித்திரைத் திங்கள் முதல் பங்குனித் திங்கள் வரை வரிசையாக நடைபெறும் விழாக்கள் பற்றி விவரிக்கப்படுகின்றன. ஆண்டு விழா என்ற பகுப்பில் பத்து நாட்கள் நடைபெறும் விழாக்கள் பற்றி நிரல்பட விளக்கப் பெறுகின்றன. ஆழ்வார்கள் என்ற பகுப்பில், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகியோருக்கு நடைபெறும் திருவிழாக் களும் ஆசாரியர்களான இராமானுசாச்சாரி, வேதாந்த தேசிகர், மணவாள மாமுனி ஆகியோருக்கு நடைபெறும் திருவிழாக்களும் விளக்கிக் கூறப்பெறுகின்றன.

### 4-8-1 நாள் திருவிழா

இத்திருக்கோயிலில் நாள்விழா மன்னர்கள் காலத்தில் நாள்தோறும் நடந்துவந்துள்ளது என்பர். அப்பொழுது பலி பேரம் எனப்படும் பலி சிறப்பு தேவதையை சிறிய பல்லக்கில்

எழுந்தருளச் செய்து மாடவீதியில் உலா வருவர் நாளடைவில் பலிகளுக்குத் திருவமுது படைத்தல் (பலியிடுதல், பலி சாய்த்தல்) மட்டுமே நடைபெற்றுவருகின்றது. இவ்வன்றாடத் திருவிழாவை ஆகமம் நாள் உற்சவம் (விழாக்கால திருமேனி உலா) என்று குறிப்பிடுகிறது.

## 4-9-0 கிழமைத் திருவிழா

இத்திருக்கோயிலில் வெள்ளி, சனி ஆகிய இரண்டு கிழமைகளில் இத் திருவிழாக்கள் சிறப்பாக நடைபெற்றுவருகின்றன.

### 4-9-1 வெள்ளிக்கிழமைத் திருவிழா

இத் திருவிழாவில் வெள்ளிக்கிழமையன்று காலையில் பெருமாளுக்கும் தாயாருக்கும் திருமுழுக்குச் செய்யப்பெற்று ஆடை, அணிகலன்கள், மாலைகள் அணிவிக்கப்பெறுகின்றன. மாலையில் ஐந்துமணி முப்பது மணித்துளிக்கு அருள்மிகு பத்மாவதித்தாயாரைத் தாயார் சிற்றாலயத்தின் முன் கேடயத்தில் எழுந்தருளச் செய்வர்.

அருள்மிகு தாயார் உற்சவரை அழகு செய்து திருச்சுற்றில் மூன்றுமுறை வலம் வரச்செய்வர். மூன்றாவது வலத்தில் இறைவன் ஆலயத்தின்முன் தாயார் கேடயத்தை நிறுத்தி, இறைவன் ஆலயத்திலிருந்து கொண்டு வரப்பட்ட புதிய நீரையும், மலர் மாலையையும் அருள்மிகு தாயாருக்குச் சாத்தி மேள இசை முழங்க, ஆரத்தி காட்டி, தாயாரைத் தாயார் சிற்றாலயத்திற்கு எழுந்தருளச் செய்வர்.

அங்குத் தாயாரை ஊஞ்சலில் அமர்த்தி ஊஞ்சல் ஆட்டுவர். அச் சமயத்தில் பிரபந்தப் பாடலைப் பாடித் திருமறையும் ஓதுவர். அதனுடன் ஊஞ்சற்பாடலைப் பாடிப் பின் ஆரத்தி காட்டி அன்றைய விழாவை முடிப்பர். அப்பொழுது நாச்சியார் திருமொழியிலுள்ள முதல் திருமொழியில் தையொரு திங்கள் என்ற பதிகத்தில் ஆறாவது பாடல் ஓதுவார்களால் பாடப் பெறும்.

> "உருவுடையாரிளையார்கள் நல்லார்
>
> ....................................
>
> திருந்தவே நோக்கெனக் கருள்கண்டாய்"[45]

### 4-9-2 சனிக்கிழமைத் திருவிழா

சனிக்கிழமையன்று காலையில் இராமருக்குத் திருமுழுக்குச் செய்து ஆடை, அணிகலன்கள், மாலைகளால் அணிவிப்பர். பின் கற்பூர ஆரத்தி காட்டிப் படையல் படைப்பர்.

மாலையில் இராமரைக் கேடயத்தில் அழகு படுத்தி எழுந்தருளச் செய்து மாடவீதி உலா வரச்செய்வர். புளியோதரை படையல் படைத்து மேள இசையுடன் கற்பூர ஆரத்தி காட்டுவர். இச்சமயத்தில் நம்மாழ்வார் பாடிய பிரபந்தத்தில் உள்ள பதிகத்தில் காணப்பெறும் கீழ்க்கண்ட பாடலைப் பாடுவர்.

"அரியேறே என அம்பொற் சுடரே

....................................

....................................

சன்மம் கறையாயே".[46]

## 4-10-0 திங்களிருமுறை திருவிழா

இத் திருக்கோயிலில் திங்களிருமுறைத் திருவிழா இறைவனுக்கு ஏகாதசி, துவாதசி ஆகிய ஓரைகளில் நடைபெறும்.

ஏகாதசியன்று காலையில் பெருமாள் உற்சவருக்குத் திருமுழுக்குச் செய்வர். பின்பு ஆடை, மலர், அணிகலன்கள் ஆகியவற்றால் அழகு செய்வர். அடுத்துப் படையல் படைத்து மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர்.

மாலையில் 5-30 மணியளவில் கேடயத்தில் பெருமாள் உற்சவரையும், உபநாச்சியாரையும் எழுந்தருளச் செய்வர். கற்பூர ஆரத்தி காட்டப்பெற்றதும் வழக்கம்போல் மாடவீதி உலா எடுத்துச்சென்று உலாவருவர். உலா முடிந்ததும் இறைவன் இருக்கைக்கு எழுந்தருளச் செய்வர். ஓதுவார்கள் சாற்று முறை நடத்துவர். ஓதுவார்களுக்குத் தெய்வப்படையல் வழங்கியதும் மெய்யன்பர்களுக்கும் வழங்குவர்.

"ஒளிமணி வண்ணன் என்கோ

..............................

கண்ணனை மாயனையே"[47]

ஏகாதசியன்று மட்டும் இறைவனை திருவீதிவுலாவிற்கு எடுத்துச் சென்று கோயிலுக்குத் திருப்பிக் கொண்டுவருவர்.

அங்குத் திருச்சுற்றில் அமைந்துள்ள ஆண்டாள் சிற்றாலயத்தின் முன்பு கேடயத்தில் எழுந்தருளிய இறைவனை நிறுத்தி இருவருக்கும் மாலை மாற்றல் வழிபாடு நிகழ்த்துவர். பின் கற்பூர ஆரத்தி காட்டப்பெறும் இச்சமயத்தில் கல்யாணி, நாட்டை, சாரங்கா ஆகிய பண்களில் இசைவிற்பன்னர்கள் இசை முழக்குவர். இத்துடன் இத்திருவிழா முடிவுறும்.

## 4-10-0 கோள் திருவிழாக்கள்

இத் திருக்கோயிலில் கோள்களைப் பின்பற்றித் திருவிழா நடைபெற்று வருகின்றது. முக்கியமாக பெருமாளுக்குத் திருவோணக் கோளன்றும், இராமருக்குப் புணர்பூசக் கோளன்றும் திருவிழாக்கள் நடத்தப்பட்டு வருகின்றன.

### 4-11-1 திருவோணக்கோள் திருவிழா

பெருமாள் பிறந்த திருவோணத்தன்று காலையில் காலைப் பூசைக்கு முன்பு பெருமாளுக்கும், தேசிகருக்கும் திருமுழுக்கு நடத்தப்பெறுகின்றன. காலைப் பூசைக்குரிய படையல் படைக்கப்பெறும். மாலையில் இறைவன் கருவறையின் முன் கேடயத்தில் பெருமாளை ஆடை, அணிகலன்கள், மலர் மாலைகள் ஆகியவற்றால் அழகு செய்து எழுந்தருளச் செய்வர்.

வழக்கம் போல் கற்பூர ஆரத்தியுடன் இறைவன் திருமேனியைத் திருவீதி வுலாவிற்கு எடுத்துச் சென்று மாடவீதி வலம் வருவர். இறுதியாக இறைவனைக் கோயிலுக்குக் கொண்டு வருவர்.

இறைவன் சந்நிதியில் இறைவன் ஆத்தானத்துக்குச் சர்க்கரைப் பொங்கலும், தேசிகருக்குப் புளியோதரையும் படையலாகப் படைப்பர். இத்தருணத்தில் மேள இசைகள் முழக்குவர். அதனோடு சாற்றுமுறைக்குப் பிரபந்த பாடலைப் பாடுவர். பின்பு கற்பூர ஆரத்தி காட்டுவர். பின் தெய்வப் படையலைப் பிரபந்தக் குழுவினருக்கும் மெய்யன்பர்களுக்கும் வழங்குவர்.

இத் திருவிழாவின்போது இறைவனுக்குக் கோள்ஆரத்திக் காட்டுவது ஒரு சிறப்பாகும். அப்போது கீழ்க்கண்ட பிரபந்தப் பாடலைப் பாடுவர்.

''வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும்
..................................
..................................
ஆங்கடமை அது சுமந்தார்கட்கே''[16]

## 4-11-2 புணர்பூசக்கோள் திருவிழா

இராமர் பிறந்த புணர்ப்பூசக் கோளன்று காலைப் பூசைக்கு முன் இராமருச்குத் திருமுழுக்கு நிகழ்த்துவர். அப்போது காலைப்பூசைச்குரிய படையல் படைக்கப்பெறும். மாலையில் இராமர் திருமேனியை ஆடை அணிகலன்கள், மலர் மாலைகளால் அழகு செய்து கேடயத்தில் எழுந்தருளச் செய்வர். பின்பு மாடவீதிஉலா வரச்செய்வர். இவ்விழாவில் சிறப்பு படையலாகப் புளியோதரை படையலைப் படைப்பர். பின் மேள இசையுடன் கற்பூர ஆரத்தி காட்டுவர். இத் திருவிழாவில் நம்மாழ்வார் பாசுரங்களைப்பாடுவர். அவற்றுள் ஒன்று வருமாறு.

''வாரா வருவாய் வருமென் மாயா
..................................
..................................
இன்னும் உழல்வேனோ''[19]

## 4-12-0 திங்கள் திருவிழா

இத் திருக்கோயிலில் ஒவ்வொரு திங்களன்றும் திருவிழா நடைபெற்று வருகின்றது. ஒருசில திங்களில் இரண்டு மூன்று திருவிழாக்களும் நிகழும். திங்கள் தோறும் வரும் கோள், ஓரை ஆகிய நாட்களில் திருவிழாக்கள் நிகழ்த்தப் பெறுகின்றன. இத் திங்கள் திருவிழா என்ற பிரிவில் இங்குச் சித்திரைத் திங்கள் முதல் பங்குனித் திங்கள் வரை நடைபெறும் திருவிழாக்கள் பற்றிக் கூறப்பெறுகின்றன.

## 4-12-1 சித்திரைத் திருவிழா

சித்திரைத் திங்களில் வரும் திருவாதிரைக் கோளுக்கு ஒன்பது நாட்களுக்கு முன்பு தொடங்கிப் பத்தாவது நாள் திருவாதிரைக் கோளன்று முடிய இராமானுசர் சாற்றுமுறை விழா நடைபெறுகின்றது.

இத் திருவிழாவில் காலையில் நாள்தோறும் இராமானுசர், பெருமாள் மூலவர், பெருமாள் உற்சவர் ஆகிய மூவருக்கும் திருமுழுக்கு நடத்துவர். பின்பு மூவருக்கும் அலங்காரம் செய்து படையல் படைத்துக் கற்பூர ஆரத்தி காட்டுவர். இறுதியாகப் பிரபந்தச் சாற்றுமுறை நடத்துவர்.

மாலையில் இராமானுசர் உற்சவரைக் கேடயத்தில் அலகரித்து மாட வீதிவுலாவிற்கு எழுந்தருளச் செய்தவர். இராசகோபுரத்தில் ஆரத்தியும் தேசிகர் மரியாதையும் நடைபெறும்.

இறைவன் உலா சிறிய திருவடியான அநுமர் சிற்றாலயம் வரைச் சென்று அங்கு ஆரத்தி பெற்று கோயிலுக்குத் திருப்பிக் கொண்டுவருவர். கோயிலில் இறைவனுக்குப் புளியோதரை படைத்து ஆரத்தி காட்டி பிரபந்தக் குழுவினர்களுக்குத் தெய்வப்படையல் வழங்குவர். பின் இதை மெய்யன்பர்களுக்கும் வழங்குவர்.

இவ்வாறு ஒன்பது நாட்கள் திருவிழா சாதாரணமாக நடைபெறும். கடைசி நாளன்று சாற்றுமுறை முடிவுறும் தருணத்தில் காலையில் சிறப்புத் திருமுழுக்கும் படையலும் படைப்பர். மாலையில் இறைவனைக் கேடயத்தில் அமர்த்திப் புதுப் பட்டாடைகள் உடுத்தி, அணிகலன்களை அணிவித்து மலர்மாலைகளைச் சாற்றி மாடவீதிவுலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

சாதாரணமாக இறைவனைக் கோயிலுக்குக் கொண்டு வந்தவுடன் இராமானுசர் பாடிய பிரபந்தச் சாற்றுமுறையைப் பாடுவர். பின்பு சிறப்புப் படையலான புளியோதரை, சர்க்கரைப் பொங்கல் ஆகியவற்றைப் படைத்து ஆரத்தி காட்டுவர். பின் பிரபந்தக் குழுவினருக்கும் மெய்யன்பர்களுக்கும் தெய்வப் படையல்கள் வழங்கப்படும்.

உற்சவர் வழிபாட்டுத் திருவிழாவில் இராமானுசர் அந்தாதியும், யசுர் திருமறையும் ஓதுவர். மேள இசைகளை முழக்குவர். மேலும் குடை, சாமரம், தீவட்டி முதலியவற்றால் வழிபாடு செய்வர்.

### 4-12 2 வைகாசித் திருவிழா

வைகாசித் திங்களில்வரும் திருவோணக் கோளுக்குப் பத்து நாட்களுக்கு முன்பு திருவிழா ஆரம்பித்து பத்தாம் நாள்

முடியும் திருவோணக்கோள் வரை துவாஹு அவரோகனத்துடன் பெருந்திருவிழா சிறப்பாக நடத்தப்பெறுகின்றது. இப் பெருந் திருவிழா பற்றி இறுதியில் விரித்துக் கூறப்பட்டுள்ளது.

கோயிலில் மூலவருக்கும், உற்சவருக்கும் மாலைவழிபாடு நடைபெற்றதும் புத்தாடை அணிவித்து பரிவட்டம் வழங்கி மாலை அணிவிப்பர். பட்டர் மங்களப் பலன் அளிக்கும் திருமறைகளை ஓதுவர். இச் சமயத்தில் மஞ்சளரிசியைப் பெருமாளின் தலைமீதும் திருப்பாதத்தின்மீதும் வைப்பர்.

கோயிலில் உள்ள அலுவலகத்தில் நூல்கள், கோயில் முத்திரை, சிற்றாலயச் சாவிகள் முதலியவற்றை இறைவனின் திருவடியில் வைத்து அந்த ஆண்டு வருமானப் பட்டியலைக் கோயில் நிர்வாகி படிப்பார்.

இதன் மையக்கருத்து யாதெனில் பெருமாளின் திருமணத் திற்குக் குபேரரிடம் வாங்கிய கடனிற்கு வட்டியினை இந்தக் கலியுகம் முழுவதும் செலுத்துவதாகக் கூறுவதாகும். அதற்காக ஆண்டுதோறும் இறைவனுக்கு வரும் வருவாயில் வட்டியை மட்டும் குபேரருக்குச் செலுத்துவதாகக் கூறப்பெறுகிறது.

பின் பெருமாளின் திருவடியில் வைத்த மஞ்சளரிசியை மெய்யன்பர்களுக்கு வழங்குவர். மேலும் தோசை, புளியோதரை ஆகியவற்றைப் பெருமாளுக்குப் படையலாகப் படைத்து மெய்யன்பர்களுக்குத் தெய்வப்படையலை வழங்குவர்.

### 4·12-3 ஆடித்திருவிழா

ஆடித்திங்களில் அருள்மிகு ஆண்டாளுக்குத் திருவாடிப்பூர திருவிழா ஒன்பது நாட்கள் நடைபெறும். இந் திருவிழாவில் காலையில் ஆண்டாள் சிற்றாலயத்தில் ஆண்டாள் மூலவருக்கும் ஆண்டாள் உற்சவருக்கும் சிறப்புத் திருமுழுக்கு நடைபெறும். ஓதுவாரால் நீராட்டம் பிரபந்தப் பாடல் பாடப்பெறும்.

பெருமாளுக்குத் திருமுழுக்கு நடைபெற்றதும் ஆடை உடுத்தி அணிகலன்கள் அணிவித்து மலர்மாலைகள் சூட்டுவர். தயிர்ச்சோற்றைப் படையலாகப் படைப்பர்.

மாலையில் ஆண்டாள் சிற்றாலயத்தின் முன் கேடயத்தில் ஆண்டாளை எழுந்தருளச் செய்வர். அப்போது பட்டாடை உடுத்தி, அணிகலன்கள் அணிவித்து, மலர் மாலைகள் சூட்டி,

வழக்கம்போல் மேளதாள இசையுடன், குடை, சாமரம், தீவட்டி, திருமறை பிரபந்தம் ஓதுவார்களுடனும் வழிபாடு களுடனும், உபசாரங்களுடனும் உலா வருவர்.

கோயிலில் ஆண்டாளுக்கு ஆத்தானமும், பிரபந்தச் சாத்துமுறையும் நடைபெறும். புளியோதரையைப் படைப்பர். பின் ஆரத்தி காட்டி பிரபந்தக் குழுவினர்களுக்கும், மெய்யன்பர் களுக்கும் தெய்வப்படையல் வழங்குவர்.

இவ்விழா எட்டு நாட்களிலும் மேற்கூறிய முறைப்படி நடைபெறும்.

ஒன்பதாவது நாள் பூரக் கோளன்று தாயாருக்குச் சிறப்புத் திருமுழுக்கு நடத்தி ஆடை அணிகலன்கள், மலர் மாலைகள் ஆகியவை அணிவித்துப் படையல் படைப்பர்.

மாலையில் ஆண்டாள் சிற்றாலயத்தில் அருள்மிகு பத்மாவதித் தாயார், அருள்மிகு ஆண்டாள் ஆகிய இருவரை யும் கேடயத்தில் எழுந்தருளச் செய்து பட்டாடை அணிகலன் கள், அணிவித்து மலர்மாலைகள் சூட்டுவர்.

பின் அருள்மிகு பெருமாளையும், அருள்மிகு தாயாரை யும் தனித்தனியாகக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து அவர்கள் இருவருக்கும் மேற்கண்ட முறையில் அலங்காரம் செய்து மாடவீதிவுலாவும், பெரிய திருவீதிவுலாவும் வருவர். திருவீதிவுலா முடிவுற்றதும் பெருமாள் உற்சவரை பதினாறு தூண்மண்டபத்திற்குக் கொண்டுவருவர்.

பதினாறு தூண் மண்டபத்தில் பெருமாளையும், ஆண்டாளையும் எதிர் எதிராக நிற்கவைத்துப் பெருமாள் அணிந்துள்ள மலர்மாலையை ஆண்டாளுக்கும், ஆண்டாள் அணிந்துள்ள மலர்மாலையைப் பெருமாளுக்கும் மாற்றி அணிவித்து வழிபாடு நிகழ்த்துவர்.

இவ்வழிபாட்டின் உட்கருத்து என்னவெனில் ஆண்டாள் அரங்கநாதரை மணம் செய்துகொண்டதை மெய்யன்பர்கள் அறியவேண்டும் என்பதாகும். பின் பதினாறு தூண்மண்டபத் தில் பெருமாளுக்கும், ஆண்டாளுக்கும் ஆரத்தி காட்டி பிரபந்தச் சாற்றுமுறை நிகழ்த்துவர். அப்போது நாச்சியார் திருமொழிப் பாடல்கள் பாடப்பெறும். அடுத்துச் சர்க்கரைப் பொங்கலையும் புளியோதரையையும் படையலாகப் படைப்பர்.

அப்போது வெற்றிலை, பாக்கு, பழங்கள் ஆகிய பொருள்களை வைத்துத் தேங்காய் உடைத்து மேளதாளங்கள் முழங்கக் கற்பூர ஆரத்தி காட்டுவர். இறுதியாகப் பிரபந்தக் குழுவினர் களுக்கும் மெய்யன்பர்களுக்கும் தெய்வப் படையலை வழங்குவர்.

விழா நடைபெறும் ஒன்பது நாட்களிலும் ஆண்டாள் சிற்றாலயத்தில் பந்தல் அமைத்து மாவிலைத் தோரணங்கள் கட்டி வண்ண விளக்குகளால் அலங்காரம் செய்வர். வாழை மரங்கள் கட்டுவர்; பெருமாளுக்குச் சிறப்பாக அலங்காரமும் செய்வர். இத் திருவிழா இக் கோயிலில் சிறப்பாக நடத்தப் பெறுகின்றது.

இத் திங்களில் வெள்ளியன்று வரும் திருவோணக்கோளன்று வரலட்சுமி நோன்பு எனப்படும் ஒருநாள் திருவிழாவும் நடைபெறும்.

காலையில் வழக்கம்போல் பெருமாளுக்குத் திருமுழுக்கு நடத்தப்பெறுகின்றது. தாயார், மூலவர், பெருமாள் ஆகிய மூவருக்கும் மந்திரத்தாலானத் திருமுழுக்கு நிகழ்த்துவர்; தாயாருக்குப் புத்தாடை, அணிகலன்கள், மலர்மாலைகள் முதலியன அணிவிப்பர். மேலும் போற்றிகள் போற்றுவர்; வெண்பொங்கல் படைப்பர்; இஃது உபயதாரால் நடத்தப் பெறும் திருவிழாவாகும்.

ஏறக்குறைய அறுபது ஆண்டுகளாகச் சிவகுல சிவராமய்யா என்பவரின் குடும்பத்தினர் இத் திருவிழாவை நடத்தி வருகின்றனர். இன்று சிவராமய்யாவின் திருமகனார் சிவகுல கிருட்டிணமூர்த்தி அவர்கள் இத் திருவிழாவை நடத்தி வருகின்றனர்.

மாலையில் ஐந்து மணிக்குத் தாயார் சிற்றாலயத்தில் தாயார் உற்சவரைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து பட்டாடைகள் உடுத்தி சிறப்பு அணிகலன்களை அணிவித்து மலர்மாலைகளைச் சூட்டுவர். மலரால் சடையும் தைத்து அணிவிப்பர்.

பின் தாயாரைக் கோயிலின் திருச்சுற்றிற்கு எடுத்துச் சென்று, சம்பங்கிவலம் எனப்படும் பூந்தோட்ட திருச்சுற்றை மூன்றுமுறை வலமாகச் சென்று திருவீதிவுலாவிற்கு எழுந்தருளச் செய்வர். பின் இரண்டாவது கோபுரம் வழியாக முக

மண்டபத்திற்குச் சென்று பெருமாளுக்கு எதிரில் கேடயத்தை நிற்கவைத்து திருநீராட்டு வழிபாடும், மாலை மாற்றல் வழிபாடும் இருவருக்கும் நடத்தப்படும். அப்போது மேளதாள முழக்கத்துடன் கற்பூர ஆரத்தி நடைபெறும்.

அடுத்துத் தாயார் சிற்றாலயத்திற்குத் தாயாரை எழுந்தருளச் செய்து ஊஞ்சலில் வைத்து ஆட்டியவாறு ஊஞ்சற் பாடல்களைப் பாடுவர். பின் நாச்சியார் திருமொழி எனும் பிரபந்தச் சாற்றுமுறை பாடி கற்பூர ஆரத்தி காட்டி ஊஞ்சல் சேவையை முடிப்பர். இதில் சர்க்கரைப் பொங்கல், தோசை, புளியோதரை முதலியவற்றையும் படைப்பர்.

இத் திருவிழாவின் உபயதாரரான திரு. சி. கிருட்டிண மூர்த்தி அவர்களுக்குப் பரிவட்டம் மாலை ஆகியவற்றால் சிறப்புச் செய்வர். பின் பிரபந்தக் குழுவினருக்கும், மெய்யன்பர்களுக்கும் தெய்வப் படையல் வழங்குவர்.

மெய்யன்பர்கள் வரலட்சுமி விரதத்தை முன்னிட்டுக் கோயிலுக்குச் சென்று பெருமாளையும் தாயாரையும் போற்றி செய்வதும், கற்பூர ஆரத்தி காட்டியும் அகல் விளக்குகள் ஏற்றியும் வணங்குவர்.

இத் திருவிழாவின் சிறப்பு என்னவென்றால் அருள்மிகு பத்மாவதித் தாயார் அருள் தருபவர் (வரம் தருபவர்) ஆகையால் இந்நந்நாளில் கன்னிப் பெண்கள் நோன்பிருந்து நோன்புக் கயிறு அணிந்துத் தாயாரிடம் வேண்டுதல் பெற்று சரடு அணிந்துக்கொண்டால் விரைவிலேயே அக் கன்னிப் பெண்களுக்குத் திருமணம் நடைபெறும் என்பது நம்பிக்கை யாகவும், வழக்கமாகவும், மரபாகவும் இருந்துவருவதாகும்.

### 4.12 40 ஆவணித் திருவிழா

ஆவணித் திங்களில் கண்ணன் பிறந்த நாள் (கிருட்டிண ஜெயந்தி) திருவிழா நடைபெறும்.

அன்று மாலையில் ஐந்து மணிக்குக் கண்ணன் உற்சவருக்குப் பெருமாள் சிற்றாலயத்தில் திருமுழுக்குச் செய்து, பட்டாடை உடுத்தி அணிகலன்கள் அணிவித்து மலர்மாலைகளைச் சூட்டி, மகாமண்டபத்தில் உள்ள வெள்ளி சிம்மாசனத்தின்மீது எழுந்தருளச் செய்வர். பிறகு தூப தீப வழிபாடுகளுடன் கண்ணனுக்குத் தோமாலை சேவை செய்வர்.

கோகுலாட்டமியை முன்னிட்டு அவருக்கு வெண்ணெய், நாவற்பழம், வெல்லம் ஆகியன. கலந்த எள்பொடி, வெல்லத்துடன் கலந்த சுக்குப்பொடி ஆகிய வற்றைப் படைப்பர். மேலும் சர்க்கரைப் பொங்கலையும் படைப்பர். அப்போது ஓதுவரால் பிரபந்தச் சாற்று முறை நிகழ்த்தப்பெறும். மெய்யன்பர்களுக்குப் புனித நீரும் தெய்வப் படையலும் வழங்குவர்.

மறுநாள் காலையில் எட்டு மணிக்குச் சிறிய கேடயத்தில் கண்ணனை எழுந்தருளச்செய்து மாடவீதிவுலாவும், பெரிய திருவீதிவுலாவும் நிகழ்த்துவர்.

### 4-12-4-1 சறுக்கு மரம் ஏறும் விழா

இவ்விழா நடைபெறும் நாளில் மாலை ஐந்து மணிக்குப் பெருமாள் ஆலயத்தில் சிறிய கேடயத்தில் கண்ணனை எழுந்தருளச் செய்வர். பின் மாடவீதிவுலாச் சென்று பதினாறு தூண் மண்டபத்தில் கொண்டுவந்து நிறுத்துவர். அங்கு அமைக்கப்பட்டுள்ள சறுக்கு மரத்தின் உச்சியில் ஆடைகள், தேங்காய், தின்பண்டங்கள் சில்லரைகாசுகள் ஆகிய நான்கும் சேர்ந்த முடிப்பைக் கட்டி வைத்திருப்பர்.

அம் முடிப்பைப் பெற எவரேனும் அச் சறுக்கு மரத்தில் ஏறும் சமயத்தில் அவர் ஏறாதவாறு முகத்தில் மஞ்சள் நீரைத் தெளிப்பர். மரமும் வழவழப்பாக இருக்கும், நீர் பட்டதும் மரம் வழுக்கும். இத் தடங்கலைக் கடந்து அச் சறுக்கு மரத்தின் மேல் ஏறி அம் முடிப்பைப் பெற்றால்தான் அஃது அவருக்கு உரிமையாகும். வெற்றி பெற்றவருக்கு மாலை அணிவித்துச் சிறப்புச் செய்வர்.

### 4-12-4-2 உரியடி விழா

பதினாறு தூண் மண்டபத்தின் உச்சியில் பாலும் வெண்ணெயும் உள்ள ஒரு மண்பாண்டத்தைக் கயிற்றுடன் கட்டித் தொங்கவிடுவர். கயிற்றின் மறுமுனையை மெய்யன்பர் கள் பிடித்திருப்பர். அந்த மண்பாண்டத்தைத் தடியால் அடித்து உடைக்கும் மெய்யன்பனுக்கு இறைவன்மீது சாத்தப் பட்டிருக்கும் மலர்ச்சரங்களை எடுத்து அணிவிப்பர்.

அப்போட்டியில் உள்ளவர்கள் அம் மண்பாண்டத்தைக் கம்பால் அடிக்க முயலும்போது அக் கயிற்றைப் பிடித்திருப்பவர் மேலே இழுத்துவிடுவர். இறுதியில் போட்டியாளர் தமக்கு ஏற்ற சூழ்நிலையில் அம் மண்பாண்டத்தைக் கம்பால் அடித்து உடைப்பார். வெற்றிபெற்றவருக்கு அர்ச்சகர் சடாரி சாய்த்துச் சிறப்புச் செய்வர்.

அன்று வழக்கம்போல் சிறிய திருவடிக்கு மாலை சூட்டி, சடாரி சாய்த்து பெரிய திருவீதிவுலா வருவர். பின் பெருமாள் உற்சவஉலா நடைபெறும். உலா கோயிலுக்குத் திரும்பியதும் ஆரத்தி காட்டி பிரபந்தச் சாற்றுமுறை நிகழ்த்துவர். அப்போது புளியோதரையும், வெல்லத் தோசையும் படைப்பர். இறுதியில் பிரபந்தக் குழுவினருக்கும், மெய்யன்பர்களுக்கும் தெய்வப் படையல் வழங்குவர்.

### 4-12-5 புரட்டாசித் திருவிழா

இத் திங்களில் தேசிகர் பிறந்த திருவோணக்கோளில் பத்து நாட்கள் வேகாந்த தேசிகருக்குச் சாற்றுமுறைத் திருவிழா நடைபெறும். இத் திருவிழா திருவோணக் கோளிற்கு ஒன்பது நாட்களுக்கு முன்பு தொடங்கி கோளன்று பத்தாவது நாள் திருவிழா நடைபெறும்.

அன்று காலையில் வேதாந்த தேசிகருக்கு ஏகாந்தத் திருமுழுக்கு நிகழ்த்துவர். வழக்கம்போல் காலை வேளை பூசைக்குரிய படையலைப் படைப்பர்.

அன்று மாலையில் கேடயத்தில் வேதாந்த தேசிகரை எழுந்தருளச் செய்து அவருக்குப் பட்டாடை உடுத்தி மலர் சூட்டி அணிகலன்கள் அணிவித்து, குடை, சாமரம், தீவட்டி முதலியவற்றுடன் ஆரத்தி காட்டுவர். உலாத் தொடங்கி உலா மாடவீதியில் வரும் சமயத்தில் வடகலை குழுவினர் பிரபந்தத்தையும், யசூர் திருமறையையும் ஓதுவர். பின்பு புளியோதரை படையலைப் படைத்து ஆரத்தி காட்டுவர். இறுதியாகப் பிரபந்தக் குழுவினருக்கும், மெய்யன்பர்களுக்கும் தெய்வப் படையல் வழங்குவர். இவ்வாறு ஒன்பது நாட்களில் திருவிழா நடைபெறும்.

பத்தாவது நாளன்று சாற்றுமுறையினை முடிக்கும் தருவாயில் காலையில் தேசிகருக்கும் பெருமாள் உற்சவருக்கும்

மந்திரத்துடன் திருமுழுக்கு நடைபெறும். அப்போது இறைவனுக்கு அலங்காரம்செய்து படையல் படைப்பர்.

மாலையில் தேசிகர் உற்சவரையும், பெருமாள் உற்சவரையும் இறைவன் சந்நிதியில் தனித்தனியாக கேடயத்தில் எழுந்தருளச் செய்வர். சிறப்பாக அணிகலன்களாலும், மலர்மாலைகளாலும் அலங்காரம் செய்வர். பின் கற்பூர ஆரத்தி காட்டி உலாவைத்தொடங்குவர். மாடவீதி உலா சென்று திரும்பியதும் சிறிய திருவடிக்கு மரியாதை செய்வர். பின்பு தேசிகர் சிற்றாலயத்திற்கு உற்சவரைக் கொண்டு வருவர். அங்குப் பெருமாளையும், தேசிகரையும் எழுந்தருளச்செய்வர். அப்போது வடகலை ஆச்சாரியர்களால் பிரபந்தம் பாடப் பெறும்.

உற்சவருக்கு அர்ச்சகர்கள் நற்பலனைத் தரும் திருமறைகள் ஓதிச் சாற்றுமுறையை முடிப்பர். பின் சர்க்கரைப் பொங்கல் சுண்டல், புளியோதரை, தோசை ஆகியவற்றைப் படைப்பர். பின்பு ஆரத்தி காட்டுவர். புனிதநீர், சடாரிசேவை தெய்வப் படையல் ஆகியவற்றைப் பிரபந்தக் குழுவினருக்கும் பக்தர் களுக்கும் வழங்குவர்.

பின்பு உற்சவ மூர்த்திகளைக் கோயிலுள் எழுந்தருளச் செய்வர். திருமறை குழுவினர் தேசிகர் அருளிய அமுர்த ரஞ்சனியில் உள்ள மங்கள சாசனப் பாசுரங்களைப் பாடுவர். இத்துடன் இத்திருவிழா முடிவுறும்.

4-12-6-0 ஐப்பசித் திருவிழா

ஐப்பசித் திங்களில் வரும் அமாவாசையன்று பெருமாளுக்கு ஆத்தானத் திருவிழா ஒருநாள் விழாவாக நடத்தப்படுகிறது. அன்று விடியற்காலை கோயிற் பரிவாரங்களுடன் அர்ச்சகர் இல்லத்திற்கு எண்ணெய், சிகைக்காய்த்தூள் ஆகியவற்றை எடுத்துச் சென்று மரியாதைச்செய்வர். பிறகு கோயிலில் உற்சவருக்குத் தனித்திருமுழுக்குச் செய்வர். இவ்வழிபாடு கோயில் நிர்வாகத்தினரால் செய்யப்படும் மரியாதையாகும். இது தொன்றுதொட்டு நடத்தப்பெற்றுவருகிறது.

மாலையில் முகமண்டபத்தை மாவிலைத் தோரணங் களாலும், வண்ண விளக்குகளாலும் அலங்கரிப்பர். தூண்களுக்கு வாழை மரங்களைக் கட்டுவர்.

பின் முகமண்டபத்தில் பெருமாள் உற்சவரை முத்துப் பல்லக்கில் எழுந்தருளச் செய்வர். மூலவருக்கும், உற்சவருக்கும் புதிதாடைகள், மலர்மாலைகள், பரிவட்டம் ஆகியவற்றைச் சாத்தி நற்பலன் தரும் திருமறைகளை ஓதுவர். பிறகு மஞ்சளரிசியை பக்தர்களுக்கு வழங்குவர். அடுத்து புளியோதரையைப் படைப்பர். பிரபந்தச் சாற்றுமுறை முடிவுற்றதும் இசை முழக்கத்துடன் ஆரத்தி காட்டி பிரபந்தக் குழுவினருக்கும் பக்தர்களுக்கும் தெய்வப்படையல் வழங்குவர். இத் திருவிழாவில் பக்தர்கள் பெருமளவில் பெருமானின் அருளைப் பெறக் கோயிலுக்கு வருகை தருவர்.

### 4·12·6·1 தெப்பத் திருவிழா

ஐப்பசித் திங்களில்வரும் முழுமதி நாள் முடிய ஐந்து நாட்களும் தெப்பத்திருவிழா நடத்துவர். முதல் நாள் இராமருக்கும், இரண்டாம் நாள் ஆண்டாள் தாயாருக்கும் மற்ற மூன்று நாட்கள் பெருமாளுக்கும் தாமரைத் திருச்குளத்தில் தெப்பத்திருவிழா நடத்தப்பெறும்.

அன்று காலையில் பெருமாளுக்குத் தனித் திருமுழுக்கு நடத்துவர். வெண்பொங்கலைப் படையலாகப் படைப்பர். மாலையில் பெருமாளைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து பட்டாடை உடுத்தி, அணிகலன்கள் அணிவித்து, மலர்மாலை களைச் சூட்டி பெரிய திருவீதிவுலாவிற்கு எடுத்துச் செல்வர். பிறகு வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட தெப்பத்தில் பெருமாளை எழுந்தருளச் செய்வர். முதல் நாளன்று மூன்று சுற்றும், இரண்டு மூன்று, நான்காவது நாட்களில் ஐந்து சுற்றும், ஐந்தாவது நாளன்று ஏழு சுற்றும் திருக்குளத்தில் வலம் வருவர். அப்பொழுது திருமறை ஓதி நாதசுரத்தை இசைப்பர்.

தெப்பம் ஒவ்வொரு முனை வரும்போதும் ஆரத்தி காட்டுவர். தெப்பத் திருவிழா முடிவுற்றதும் வீதிகளில் திருவீதி வுலா சென்று கோயிலில் இறைவனை நிறுத்துவர். இறுதியாக ஆரத்திகாட்டி திருவிழாவினை முடித்து வைப்பர்.

### 4·12·7 கார்த்திகைத் திருவிழா

கார்த்திகைத் திங்களில் வரும் கிருத்திகைக் கோளன்று பெருமாளுக்குக் கார்த்திகை விளக்குத் திருவிழா நடத்துவர்

அன்று இரவு பூசையின்போது தோமாலை சேவை முடிந்ததும் மகாமண்டபத்தில் உற்சவரின் முன்னிலையில் மண்ணால் ஆன மடக்குகளிலும் 100 அகல்களிலும் நெய், கடலை எண்ணெய் ஆகியவற்றை ஊற்றிப் பஞ்சுத்திரிகளால் விளக்குகளை ஏற்றுவர் பின்பு திருமறை ஓதுவர். மேள இசை முழக்கத்துக்கிடையே பெருமாள் கோயிலிலும் மற்றும் தாயார் ஆண்டாள், வேள்விச் சாலை, வரதராசப்பெருமாள், பெரிய திருவடி, சிறிய திருவடி, மடப்பள்ளி, நாச்சியார், தேசிகர் ஆகிய சிற்றாலயங்களிலும் விளக்குகளை ஏற்றி வைப்பர்.

சிற்றாலயப்படிகளில் அகல் விளக்குகளை வரிசை வரிசையாக வைப்பர். கோபுரங்களிலும் மடக்கு, அகல் விளக்குகளை ஏற்றி வைப்பர். பக்தர்களும் சிற்றாலயத் திருச்சுற்றுகளிலுள்ள அகல், மடக்குகளில் தாம் கொண்டுவந்த எண்ணெயை ஊற்றி அகல் மடக்கு விளக்குகளை ஏற்றுவர்.

அன்று சில விளக்குகளுடன் பெருமாள் உற்சவர் உலா புறப்பட்டு மாடவீதி வலம் செல்லும். அவ்வாறு செல்லும்போது, சிறிய திருவடி சிற்றாலயங்களில் பெருமாளைக் கொண்டுவந்து வைத்து விளக்குகளையேற்றி வழிபடுவர். பின் பெருமாளைக் கோயிலுக்குக் கொண்டுவருவர். அப்பொழுது பெருமாளுக்குப் பொங்கல் படைப்பர். வழக்கம்போல் பெருமாளுக்குப் படைத்த படையலை திருமறை குழுவினருக்கும் பக்தர்களுக்கும் வழங்குவர்.

கார்த்திகை விளக்குவிழா பற்றி மறைமலையடிகள் "கார்த்திகைத் திங்களில் முழுமதியானது அறுமீனைச் சேர்ந்த நாளின் இராக்காலத்து நடுவிலே ஊரிற் தெருவெங்கும், விளக்குகளை வரிசை வரிசையாக ஏற்றி வைத்து மலர்மாலை களைத் தொங்க விடுதல், முதலாகிய ஒப்பனைகளைச் செய்து ஒளி வடிவினையாகிய எல்லாம் வல்ல இறைவனை வழிபடும் திருவிழா பண்டைக்காலந்தொட்டே இன்றைய வரையில் தென் தமிழ்நாட்டிலுள்ள தமிழ் மக்களால் கொண்டாடப்பட்டு வருகின்றது"[50] என்று கூறுகிறார்.

மறைமலையடிகளின் கருத்தினை நோக்கும்போது கார்த்திகை விளக்கு விழாவினைப் பழங்காலத்திலிருந்தே தமிழ் மக்கள் கொண்டாடிவருகின்றனர் என்பது புலனாகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிலிருந்தே விளக்கு

விழாவினை கோயில்களிலும், இல்லங்களிலும் கொண்டாடி வந்துள்ளனர்.

இறைவன் ஐம்பூதங்களிலும் விளங்குகிறான். அவ் வைம்பூதங்களுள் ஒன்று தீயாகும். எனவே இத் தீயினை வழிபடும் நோக்கில் மக்கள் விளக்குவிழாவினைக் கொண்டாடி வருகின்றனர். இதே அடிப்படையில் கார்த்திகைத் திங்களில் கிருத்திகைக் கோளன்று திருவண்ணாமலையில் சிறப்பாக விளக்கு விழாவினைக் கொண்டாடி வருகின்றனர்.

அந் நந்நாளில் சிவாலயங்களிலும், மற்ற ஆலயங்களிலும் இல்லங்களிலும் விளக்குகளை ஏற்றித் தீவடியிலுள்ள இறைவனை வணங்குவர்.

"விளக்கில் இறைவனை இருத்தி வழிபடும் விழாவாக இதைச் சைவரும் கொண்டாடினர். கார்த்திகைக்கு முன்னாளாகிய பரணியில் தொடங்கி கார்த்திகையில் பேரொளிப் பிழம்பாக இறைவனைக் காணும் விழாவாக இது அமைகிறது. இந்தக் கருத்துத்தான் இன்றும் திருவண்ணா மலையில் இறைவனைத் தீம்பிழம்பானான் என்பர் சைவர்.[51]

மேற்கூறிய கருத்து இறைவன் தீம்பிழம்பானான் என்பதனைக் கொண்டாடும் விழாவாக விளக்குவிழா விளங்கு கிறது என்பதனைக் குறிப்பிடுகிறது. இவ் விழாவைக் கார்த்திகைத் திங்களில் கிருத்திகைக் கோளில் கொண்டாடி வருகின்றனர்.

விளக்குவிழாவை இன்றைக்கு ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளாக மக்கள் கொண்டாடி வருகின்றனர் என்பதை அகநானூற்றுப் பாடல் ஒன்று பின்வருமாறு விளக்குகிறது.

''மழைகளால் நீங்கிய மகாவிசும்பிற்
குறுமுயல் மறுநிறங்கிரை மதி நிறைந்து
அறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்
மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடன் அயர வருகதில் லம்ம"[52]

இப் பாடலை நோக்குமிடத்துத் தமிழர்கள் இவ் விளக்கு விழாவினைப் பழங்காலந் தொட்டே கொண்டாடி வருகின்றனர் என்பது திண்ணமாயிற்று. அப் பண்பாட்டினை

யும்—அவ் வழிமுறையினையும் இன்றும் தமிழர்கள் பின்பற்றி வருகின்றார்கள் என்பதற்கு விழாக்களைக் கொண்டாடி வருவதே சான்றாக அமைகிறது.

### 4-12-8 மார்கழித் திருவிழா

மார்கழித் திங்களில்வரும் மூலக்கோளில் தொடங்கி உத்திரட்டாதி கோள் முடிய இத் திருவிழா ஏழு நாட்கள் நடைபெறும். ஆண்டாள் தாயாருக்குக் காலை ஏழு மணிக்குத் திருநீராட்டு உற்சவம் நடைபெறும்.

தாமரைத் திருக்குளத்தின் அருகில் அமைக்கப்பட்டுள்ள நீராட்டு மண்டபத்தில் ஆண்டாள் உற்சவத் தாயாரை எழுந்தருளச் செய்து திருமுழுக்கு ச்செய்வர்.

இத் திங்களில் முதல்நாள் விடியற் காலையில் பூசை முடிவுற்றதும் ஆண்டாளைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து வழக்கம்போல் அனைத்து வழிபாடுகளையும் செய்வர். குளக்கரையில் அமைந்துள்ள நீராட்டு மண்டபத்தில் எழுந்தருளச் செய்வர்.

திருநீராட்டு மண்டபத்தில் உற்சவரின் ஆடை அணிகலன் களைக் களைந்து திருக்குளத்திலிருந்து புதிய நீரைக் கொண்டுவந்து பால், தயிர், இளநீர் ஆகியவற்றால் திருமுழுக்குச் செய்வர். பின்பு உற்சவரை அலங்கரிப்பர். தயிர்ச் சோற்றைப் படையலாகப் படைப்பர். அப்போது நீராட்டம் என்னும் பிரபந்தப் பாடல்களைப் பாடுவர்.

மாலையில் ஐந்து மணிக்கு உற்சவமூர்த்தியை எழுந்தருளச் செய்து திருமறை ஓதி, பிரபந்தப் பாடல்களைப் பாடி கோயில் பரிவாரங்களுடன் பெரிய திருவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

திருவீதி உலா முடிவுற்றதும் பெருமாளைக் கோயிலுள் எழுந்தருளச் செய்வர். சிறிய கோபுரத்தின் வாயிலில் கேடயத்தை நிறுத்திப் பெருமாளுக்கும் ஆண்டாள் தாயாருக்கும் மாலை மாற்றல் வழிபாட்டை நிகழ்த்துவர். பின் திருச்சுற்றிலுள்ள ஆண்டாள் சிற்றாலயத்தின் முன் ஆண்டாள் தாயாரை எழுந்தருளச் செய்து உலாவை முடிப்பர்.

இவ்வாறே மற்ற ஆறு நாட்களிலும் உற்சவத்தை நடத்துவர்.

கடைசி நாளன்று மாலையில் பெருமாளையும், ஆண்டாள் தாயாரையும் ஒரே கேடயத்தில் ஒன்றாக எழுந்தருளச் செய்து வழக்கம்போல் அனைத்து வழிபாட்டு முறைகளுடனும், கோயில் பரிவாரங்களுடனும் பெரிய திருவீதி உலாவிற்கு எடுத்துச் செல்வர்.

நெசவாளர் குடும்பத்தினர் பெரும்பான்மையினர் வசிக்கும் சாலியர் வீதியில் அமைந்துள்ள வீரராகவர் கோயிலில் இத் திருவிழாவை நடத்திக் கேடயத்தை அங்குள்ள போகி மண்டபத்தில் இறக்குவர். அப்பொழுது அன்றைய உபயதாரர் களான சாலிய நெசவாளக் குடும்பத்தினர் பெருமாளுக்கும் ஆண்டாள் தாயாருக்கும் புதிய கைத்தறி ஆடைகளை அன்பளிப்பாக அளிப்பர். அப் புத்தாடைகளை அர்ச்சகர் பெற்றுக்கொண்டு பெருமாளுக்கும், ஆண்டாள் தாயாருக்கும் அணிவிப்பர். பின் ஆரத்தி காட்டி பெருமாளை ஏனைய திருவீதிகளில் உலாவாகக் கொண்டு செல்வர்.

இத் திங்களில் திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி முதலிய பாடல்கள் விடியற் காலையில் பாடுவர்.

''மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாள்''

..............................

பாரோர் புகழ்ப் படிந்தேலோர் எம்பாவாய்''[53]

''கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான்

....................................................

அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே''[54]

இத்திங்களில் பெண்கள் நொன்பு இருப்பர். அதை மார்கழி நோன்பு என்றே அழைப்பர்.

நோன்பு பற்றி பரமசிவானந்தம் ''தமிழ் நாட்டு மக்கள் இம் மார்கழித் திங்களை விழாத் திங்களாகவே கொண்டாடு வார்கள். இத்திங்களின் ஆரம்ப நாள் முதல் இறுதிநாள் வரை மக்கள் விடியற் காலையில் எழுந்து விழா ஆற்றுவர். ஆடவரும், பெண்டிரும், தூயநீரில் மூழ்குவர். அத்திங்களில் ஆண்டாள் எழுதிய திருப்பாவை, பாடப்பெறும்''[55]

''மாதங்களில் சிறந்து விளங்குவது மார்கழிமாதமாகும். மக்கள் மனத்திலுள்ள மாசுகளையும், புற அழுக்குகளையும் போக்கும் திங்கள் இதுவாகும். 'கண்ணன் நான் திங்களில்

மார்கழியாக இருக்கிறேன்' என்று கூறியதாக பகவத்கீதை கூறுகிறது''[56] என்று கூறுகிறார்.

மார்கழித்திங்களில் இப்பொழுதும் பெண்கள் விடியிற் காலையில் எழுந்து குளித்துவிட்டுக் கோயில்களுக்குச் சென்று இறைவனை வழிபடுகின்றனர். அதோடு குழுக்களாகவும் அமர்ந்து, திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி ஆகிய பாடல் களைப் பாடுவர். பின் அக்குழுவினர் வீதிவீதியாகப் பாடல் களைப் பாடிக்கொண்டே செல்வர்.

### 3-12-9-0 தைத்திருவிழா

மார்கழித்திருவிழா முடிவுற்றதும் தைத்திங்களில் பெரு மாளுக்குப் பாரிவேட்டை உற்சவம் நடத்துவர் நாராயணன் வேட்டையாட நாராயணவனத்திற்கு எழுந்தருளி பத்மா வதியைத் திருமணம் செய்துகொண்டதால் அதைக் கருத்தில் கொண்டு இப் பாரிவேட்டை உற்சவத்தை நடத்துவர்.

மாட்டுப்பொங்கல் அன்று மாலை ஐந்து மணிக்குப் பெருமாளைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து அவருக்குப் பட்டாடை அணிகலன்கள் மலர் மாலை அணிவித்து வில்லும், அம்பும் சாத்தி வேட்டையாடும் திருக்கோலத்தில் பெரிய திருவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

பின் தாமரைத் திருக்குளத்தின் அருகே இருக்கும் அரச மரத்தடியில் பெருமாளை நிறுத்தி பெருமாளிடமிருந்து அம்பை எடுத்து மூன்று முறை அம்புகளை மரத்தின்மேல் அர்ச்சகர் எய்துவார். பின் பெருமாள் உற்சவரைக் கேடயத்தில் வைத்து மரத்தினை மூன்று முறை வலம் வரச் செய்வர். அர்ச்சகர் அம்மரத்திற்கும், கற்பூர ஆரத்திகாட்டி பின் ஏனைய பெரிய திருவீதி உலாவை முடித்துக்கொண்டு இறைவன் உற்ச வரைக் கோயிலுக்கு கொண்டுவருவர். வழக்கம்போல் இத் திருவிழாவிலும் அனைத்து வழிபாடுகளும் மரியாதைகளும் நடைபெறும்.

### 4-12-9-1 இரதசப்தமி திருவிழா

இரதசப்தமி என்னும் திருவிழா தைத்திங்களில் மிகச் சிறப்பாக நடத்தப்பெறும். இவ்விழா சப்தமி ஒரையன்று நடத்தப்பெறுகிறது. இவவிழாவின் நோக்கம் என்னவெனில்

அன்று சூரியன் ஏழு குதிரைகள் பூட்டிய இரதத்தின்மேல் வடக்கு முகம் நோக்கிப்பெருமாளைத் தொழுவதற்கு வருகிறார் என்பதாகும். இம்மரபைக் குறிக்கவே சப்தமி ஒரையன்று இத்திருக்கோயிலில் விடியற் காலையில் பூசையும் பெருமாளுக்கு திருமுழுக்கும் நடத்தப்பெறுகின்றன. அதன்பின் பெருமாள் உபயநாச்சியார்களுடன் ஏழு ஊர்திகளில் எழுந்தருளி திருவீதி உலா வருவார்.

ஊர்தித் தத்துவத்தைப் பற்றி நசன் ஆலயங்களும் ஆகமங்களும்"[57] என்ற நூலில் கூறியுள்ள கருத்து நோக்கத் தக்கது.

முதல் ஊர்தி: சூரிய பிரபை

இவ்வூர்தித் திருவிழா விடியற்காலை ஐந்து மணிக்குத் தொடங்குகிறது. மண்டபத்திலிருந்து பெருமாள் உற்சவரை எடுத்துச்சென்று கோபுர தரிசனம் செய்துகொண்டும் இராச ஆரத்தி, தேசிகர் மரியாதை ஆகியவற்றைப் பெற்றுக்கொண்டும் பெரிய திருவீதிஉலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

இத் திருவீதி உலா முடிந்ததும் கோயிலில் அமைந்துள்ள ஊர்தி மண்டபத்தில் இறைவனை எழுந்தருளச் செய்து ஆரத்தி காட்டி இத் திருவிழாவை முடித்துவைப்பர்.

இரண்டாவது ஊர்தி: பாம்பு ஊர்தி

இவ்வூர்தி திருவிழா காலையில் ஏழுமணிக்குப் பெருமாள், உபயநாச்சியார்களுடன் பாம்பு ஊர்தியில் எழுந்தருளச்செய்து முன்கூறிய முறைகளையும் வழிபாடுகளையும் பின்பற்றிப் பெரிய திருவீதிவுலாவிற்கு எடுத்துச்செல்வர்.

மூன்றாவது: அன்ன ஊர்தி

முற்பகல் ஒன்பது மணிக்கு அன்ன ஊர்தியில் பெருமாளை மட்டும் அலங்காரத்துடன் எழுந்தருளச்செய்து வழக்கம்போல் அனைத்து வழிபாடுகளுடனும் கோயில் பரிவாரங்களுடனும் பெரிய திருவீதி உலாவிற்கு எடுத்துச்செல்வர்.

நான்காவது: சிம்ம ஊர்தி

முற்பகல் பதினோரு மணிக்குச் சிம்ம ஊர்தியில் பெருமாளை மட்டும் அலங்கரித்து முறைப்படி வழிபாடு களுடனும் கோயில் பரிவாரங்களுடனும் திருவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

ஐந்தாவது : கற்பகத்தரு ஊர்தி

நண்பகல் பன்னிரண்டு மணிக்குப் பெருமாளுடன், உபய நாச்சியார்களையும் எழுந்தருளச் செய்வர். ஆடை, அணிகலன், மலர்மாலைகள் ஆகியவற்றை அணிவிப்பர். வழக்கம்போல் வழிபாடு கருடன், திருவீதி உலாச் சென்று கோயிலுக்குத் திருப்பிக் கொண்டுவருவர். ஊர்தி மண்டபத்திலிருந்து உற்சவ மூர்த்திகளைச் சிற்றாலயத்திற்கு எழுந்தருளச் செய்வர். உற்சவத் திருமேனிகளுக்குத் திருமுழுக்குச் செய்து அலங்காரம் செய்வர். நண்பகல் பூசையுடன் படையல் படைப்பர்.

ஆறாவது ஊர்தி : முத்துப்பல்லக்கு

பிற்பகல் நான்கு மணிக்கு முத்துப்பல்லக்கில் பெருமாளுடன் உபய நாச்சியார்களையும் எழுந்தருளச் செய்வர். சிறப்புப் பட்டாடைகள் அணிகலன், மலர்மாலைகள் ஆகியவற்றால் அலங்காரம் செய்வர். பின்பு பெருமாளை முத்துப்பல்லக்கில் திருவீதி உலாவிற்காக எழுந்தருளச் செய்வர்.

ஏழாவது ஊர்தி : சந்திரப் பிரபை

மாலை ஐந்து மணிக்கு ஊர்தி மண்டபத்தில் பெருமாளை அலங்காரம் செய்து சந்திரப் பிரபையில் திருவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர். பக்தர்கள் தரும் ஆரத்தியை அர்ச்சகர் பெருமாளுக்குக் காட்டுவார். பின்பு பெருமாளைக் கோயிலுக்கு எடுத்துவருவர். இத்துடன் இரதசப்தமி என்பதற்கேற்ப ஏழு ஊர்திகளில் பெருமாளைப் பெரிய திருவீதி உலாவிற்கு எடுத்துச் செல்வர்.

இத் திருவிழாவில் எல்லா ஊர்தி உற்சவங்களிலும் திருமறையும் பிரபந்தப் பாடல்களும் பாடப்பெறும். மற்றும் எல்லாக் கோயில் பரிவாரங்களும் இடம் பெற்றிருக்கும்.

பிரபையின் விளக்கம்

ஒவ்வொரு கோயிலிலும் மூர்த்திகளுக்குப் பிரபை இருக்கும். இப் பிரபையிலும் இறைவன் திருவீதி உலா வருவார். திருச்சுற்று வலமும் நடைபெறும்.

இப் பிரபையின் விளக்கத்தை நசன், ''உயிர்களின் கண்களை உற்று நோக்கினால் அவற்றின் கருவிழிகள் வட்ட

வடிவமான கண்ணாடிபோல அமைந்துள்ளதைக் காணலாம். ஒவ்வொரு விழியின் நடுவிலும் ஆன்ம ஒளி பிரகாசிப்பதைக் காண்கிறோம். இந்த ஒளியின் நடுவில் ஊசி முனையளவிலும் பல மடங்கு சிறிய பொன்னொளி உண்டு. இதுவே இறை ஒளி யாகும். இந்த உண்மையைத் தெரிவிப்பதே இப் பிரபை யாகும்"[58] என்று கூறுகிறார்.

### சடாரி

ஒவ்வொரு வைணவக் கோயிலிலும் பக்தர்களின் தலையில் சடாரி சாத்துவது வழக்கமாகும். இதன் கருத்தை நசன் பின்வருமாறு கூறுகிறார். "சடம் என்பது ஒருவகை காற்று. அதன் உணர்ச்சியால் ஞானம் மங்கி அஞ்ஞானம் ஏற்படும். அரி என்றால் பகை. அஞ்ஞானத்தை அழிப்பது சடாரி யாகும்"[59] மேலும் சடாரி, பாதுகை, ஆழ்வார் எல்லாம் ஒரே பொருளைக் குறிக்கும்.

## 4-11-12 பங்குனித் திருவிழா

பங்குனித் திங்களில் வரும் உத்திரக்கோள் முடிய ஏழு நாட்களில் பங்குனி உத்திரத் திருவிழா நடத்தப்பெறும். இத் திருவிழா அருள்மிகு பத்மாவதித் தாயாருக்குச் செய்யப் பெறும் சிறப்புத் திருவிழாவாகும்.

இப் பங்குனி உத்திரத்திருவிழாவைப்பற்றி பரம சிவானந்தம் கூறும் கருத்தாவது :

"ஆண்டுதோறும் இப் பங்குனி உத்திரத் திருவிழா காஞ்சிபுரம், கபாலீசுவரத்தில் நடைபெறுவதைக் காண்கின்ற மக்கள் மிகப் பலர். ஆண்டுதோறும் ஆண்டவனுக்கு திருமணமா? என்று பரிகசிப்பவர் ஒருபுறம் இருப்பினும் அம் மண நிகழ்ச்சியின் உட்பொருள் அறிந்து ஒன்றிய இன்ப வாழ்வுக்கு வழிகோலும் அடியவர் இந் நாட்டில் இன்று மட்டுமின்றி இன்றைக்கு ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னுமிருந்தனர். மயிலையிலே இப் பங்குனி உத்திரத் திருவிழா சிறப்பாக நடைபெற்று வந்தது ஏழாம் நூற்றாண்டிலே"[60] என்று கூறுகிறார்.

பரமசிவானந்தத்தின் கருத்தினை நோக்கும்போது பங்குனி உத்திரத் திருவிழா ஏழாம் நூற்றாண்டிலிருந்து நடைபெற்று வருகிறது என்பது புலனாகிறது.

பங்குனித் திங்களில் உத்திரக்கோளன்று காலையில் தாயாருக்குத் திருமுழுக்கும் அலங்காரமும் செய்வர். பின்பு படையல் படைப்பர். மாலையில் தாயார் சிற்றாலயத்தில் தாயார் உற்சவரைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து ஆடை, அணிகலன்களையும், மலர்மாலைகளையும் அணிவிப்பர். மேள இசையுடன் கோயில் திருச்சுற்றில் கேடயத்தில் தாயாரை எழுந்தருளச்செய்து வலம் வருவர். மூன்றாவது வலம் வரும்போது பெருமாள் சந்நிதிக்கு எதிர்ப்புறத்தில் கேடயத்தை நிறுத்தி மலர்மாலை மாற்றல் வழிபாட்டினைச் செய்வர்.

தாயார் சிற்றாலயத்தில் கேடயத்தை ஊஞ்சலில் எழுந்தருளச் செய்து, தாயாரை ஊஞ்சலில் வைத்து ஆட்டி ஊஞ்சல் பாடலைப் பாடுவர். ஆரத்தி காட்டும்போது மங்களப்பண் இசைப்பர். சடாரி சாய்த்து, புனிதநீர் தெய்வப் படையல் பிரபந்தக் குழுவினருக்கும், பக்தர்களுக்கும் வழங்குவர்.

மேற்கூறிய முறையில் திருவிழா ஆறு நாட்கள் தொடர்ந்து நடைபெறும்.

ஏழாம் நாள் காலையில் தாயார் சிற்றாலயத்தில் உற்சவப் பெருமாளுக்கும், உற்சவத் தாயாருக்கும் அலங்காரம் நடைபெற்றதும் வெண்பொங்கல் படைப்பர். திருமஞ்சனம் முடிவுறும் தருவாயில் நீராட்டப் பிரபந்தப் பாடலை ஓதுவார்கள் பாடுவர்.

மாலையில் பெருமாளையும், தாயாரையும் தனித்தனிக் கேடயங்களில் எழுந்தருளச் செய்து ஆடை அணிகலன்கள், மலர்மாலைகள் ஆகியவற்றை அணிவித்துத் திருச்சுற்றில் மூன்று முறை வலம் வருவர்.

தாயார் சிற்றாலயத்திற்கு எதிர்ப்புறத்தில் இரண்டு கேடயங்களையும் எதிர் எதிரே நிறுத்தி மூன்றுமுறை பெருமாளுக்கும், தாயாருக்கும் மாலை மாற்றல் வழிபாடு நிகழ்த்துவர். உற்சவர்களை ஊஞ்சலில் எழுந்தருளச் செய்து ஊஞ்சலாடச் செய்வர். அடுத்து இரவு நேர பூசை நடத்துவர்.

இரவு ஒன்பது மணியளவில் தாயார் சிற்றாலயக் கருவறையில் கட்டில் ஒன்றமைத்து அதில் பட்டுமெத்தை, தலையணை முதலியவற்றைவைத்து மலர்த் தோரணங்கள் அமைத்துப்

பெருமாளையும், உபயநாச்சியார்களையும், தாயார் உற்சவரை யும் அப் படுக்கையில் எழுந்தருளச் செய்வர். விளக்குகள் ஏற்றி பழங்களுடன் பாலையும் சேர்த்து படையலாகப் படைப்பர். மேள இசையுடன் ஆரத்தி காட்டுவர். இவ் வழிபாட்டினைக் காண உள்ளூரிலிருந்தும், வெளியூர்களிலிருந்தும் பக்தர்கள் வருவர்.

## 4-13-0 வைகாசிப் பெருந்திருவிழா (பிரம்மோற்சவம்)

வைகாசித் திங்களில் வரும் திருவோணக் கோளிற்குப் பத்து நாட்களுக்குமுன் இவ்விழா தொடங்குகிறது. பத்தாம் நாளன்று துவஜா அவரோஹணத்துடன் பெருந்திருவிழா சிறப்பாக நடைபெறுகின்றது.

### 4-13-1-0 முதல்நாள் திருவிழா அங்குரார்பணம்

பெருந்திருவிழா நடைபெறுவதற்கு முன்பு செய்யப்படும் வழிபாடு அங்குரார்பணமாகும். இவ்வழிபாட்டை அன்று இரவு எட்டு மணிக்கு நடத்துவர். சேனை முதலியார் மேற்பார்வை யில் பிரம்மா இப்பெருந்திருவிழாவை நடத்தி வைப்பதாகக் கருதுவர். இவ் வழிபாடு ஒன்பது நாட்கள் நடக்கும். ஓமம் செய்து குடத்தில் பெருமாளின் சக்தியை உருவேற்றம் செய்வர்.

### 4-13-1-1 சேனை முதலியாரின் பணிகள் இவ்வழிபாட்டில் அமையும்

கிராமச் சுற்றுப்புறச் சூழல் சுகாதாரமாக இருக்க மேற்கொள்வது. திருவிழாவை எவ்வித இடையூறுமின்றிசெய்து தருவது. அங்குரார்ப்பணத்திற்கும், பத்துநாள் விழாவிற்குத் தேவையான பொருட்களையும் சேகரித்துத் தருதல், ஊர்தி களையும், தேரினையும் இடையூறின்றி ஓட்டுதல், இரவு எட்டு மணிக்குச் சேனை முதலியார் திருவீதி உலா சென்று அங்குரார்ப்பணத்திற்குப் புற்றுமண் பாலிகைகள் ஆகிய வற்றைக் கொண்டு வருதல், வாசனைப் பொருட்களைச் சேகரித்து வைத்தல் இவை சேனை முதலியாரின் பணி களாகும்.

ஒன்பது கலசங்களை அமைத்து ஆரத்தி காட்டிப் படையல் படைத்து அங்குரார்ப்பணத்தை நடத்துவர்.

நாள்தோறும் பூசைகளும் ஓமமும் ஒன்பது நாட்களுக்கும் நடத்தப்படும். கோயில் பரிவாரங்களுடன் மேளதாள இசை முழங்கல், யசூர் திருமறை ஓதுதல் ஆகியன முறைப்படி பத்து நாட்களிலும் நிகழும். ஆழ்வார்களின் திவ்வியப்பிரபந்தமும் தென்னாட்டு வழக்கப்படி பாடப்பெறும்.

பெருமாளுக்கும், சேனை முதலியாருக்கும் தூபதீப கற்பூர ஆரத்தி காட்டி புளியோதரை படையல் படைப்பர்.

வைக்கோலில் மனித உருவம் செய்து கோயிலுக்கும், பெருமாளுக்கும் பெருந்திருவிழாவில் எவ்வித இடையூறும் ஏற்படாமல் இருக்க கோயில் மாட வீதிகளிலும் பெரிய திருவீதிகளிலும் கண்ணேறு கழிப்பர். அம் மனித உருவத்தைக் கொளுத்தி இழுத்துச் செல்வர். இக் கண்ணேறு பொம்மைக்கு மந்திர உருவேற்றம் செய்வர். இந் நிகழ்ச்சி முடிவுற்றதும் பெருமாளுக்குத் தனிச்சேவை நடத்துவர். பால், பழம் ஆகியன வற்றைப் படையலாகப் படைப்பர். கற்பூர ஆரத்தி காட்டி இத் தனிச் சேவையினை முடிப்பர்.

புற்று மண்ணில் மேதினி என்ற தேவதையின் உருவம் செய்து அத் தேவதையை மந்திர உச்சாடனம் செய்தபிறகு அதைப்பல பாகங்களாக வெட்டி பாலிகையில் நவதானியத் துடன் நிரப்பி பத்து நாட்கள் தண்ணீர் விட்டுச் செழிப்பாக வளர்ப்பர்.

### 4-13-1-2 அங்குரார்ப்பணத்தின் பயன்கள்

பாலிகையில் வளர்கின்ற நாற்று எவ்வளவு செழிப்பாக வளர்கிறதோ அந்த அளவிற்குக் கிராமம் மழைவளமும், பயிர் வளமும் பெறும் என்ற நம்பிக்கை நெடுங்காலமாக மக்களிடையே இருந்துவருகிறது. மேலும் மக்கள் நலமுடன் இருக்கவும் கால்நடைகளின் வளர்ச்சிச் சிறப்பாக இருக்கவும் இதைச் செய்வர். மேலும் வளர்ச்சியடைந்த நாற்றைக் கண்டதும் கோயிலில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் திருவிழாவும் நடைபெறும் என்று கருதுவர்.

இந்நாற்றின் வளர்ச்சிக்கு நீர் ஊற்றி வளர்த்தால் மட்டும் போதாது என்றும், சிறப்பாக வேள்வியையும் நடத்தினால்தான் பயன் உண்டு என்ற நம்பிக்கையும் இருந்துவருவது தெரிகிறது.

## 4-13-2-0 இரண்டாம் நாள் திருவிழா

### 4-13-2-1 கொடியேற்றுதல்

அன்று விடியற்காலை மூன்றுமணிக்குத் திருப்பள்ளி எழுச்சியுடன் திருக்கோயிலின் கதவு அர்ச்சகரால் திறக்கப்பெறும். விடியற்காலை 3-30 மணிமுதல் நான்குமணிவரை திருப்பள்ளியெழுச்சி நடைபெறும் நேரத்தில் போக வெங்கடேசுவர மூர்த்தியைத் திருப்பள்ளியெழுப்பி எப்போதும் அவர் இருக்கும் இடத்தில் வைப்பர்.

அகண்ட தீபாராதனையுடன் தொடங்கி, சிறிய திருவடி சிற்றாலயத்திலிருந்து திருமுழுக்குக் குடத்தை மரியாதைகளுடன் பெருமாள் கோயிலுக்கு உதவியாளர் உதவியுடன் எடுத்துவருவர். பின் இடம், பாத்திரம் ஆகியவற்றைத் தூய்மை செய்து குடத்தில் புதிய நீர் வைக்கப்பெறும். கோயில் மணி ஒலியுடன் பூசை ஆரம்பமாகி பதினைந்து மணித்துளி நேரம் நடைபெறும்.

தோமாலை சேவை நான்கு மணியிலிருந்து 4-30 மணிவரை மேளதாளங்கள் முழங்க நடைபெறும்.

தோமாலை சேவை என்றால் இறைவனுக்குக் காலைச் சடங்களைச் செய்வித்தலாகும். பெருமாளுக்கு ஐந்து கிண்ணங்களின் மூலம் நீரை எடுத்து நீராட்டுதல், கைகால்களைக் கழுவுதல், வாய் கொப்பளித்தல் முதலிய காலைப்பணிகளைச் செய்வர்.

இத் தோமாலை சேவை முடிவுற்றதும் மலர் அலங்காரம் செய்வர். இறுதியில் அர்ச்சகர் ஓரை நாள், கோள்களுடன் சங்கல்பம் செய்து அன்றைய பூசையைத் துவக்குவார். தூப, தீப, கோள் கலச கற்பூரஆரத்தி ஆகியனவற்றைக் காட்டுவார். திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை முதலியனவற்றை ஓதுவர். ஆச்சாரியருக்கும், அத்தியாபகருக்கும் சடாரி சாத்துவர்.

கோயில்களில் திருவிழாக்களின் முக்கிய அங்கங்களாகப் பதினெட்டுச் சடங்குகள் செய்யப்பெறும். அவை "வ்ருஷயாகம், துவஜா அவ்ரோகணம், பிருஷத்தாளம், அங்குரம், யாகசாலை அமைத்தல், அஸ்தரயாகம், பலிதானம், யானக்கரமம், பரிவேஷம், நீராஜனம், கௌதுகம், தீர்த்த ஸங்கரஹணம்,

சூர்ணோத்ஸவம், தீர்த்தகம், அவரோஹணம், ஸ்நபனம், திருக் கல்யாணம், பவித்ரோத்ஸவம் என்பனவாகும்''[61]

மேற்கூறிய பதினெட்டுச் சடங்குகளையும் பெருந் திருவிழாவின்போது இக் கோயிலிலும் பின்பற்றிச் செய்து வருகின்றனர்.

"துவஜாரோஹணத்தால் சகல ஜீவன்களுக்கும் சுகம், பேரிடாணத்தால் தேவர்களுக்குப் பிரிதி, அங்குரார்ப்பணம் (பாலிகை தெளித்தல்) சர்வசம்பத்தை உண்டாக்கும்" என்று வாதுள ஆகமத்தில் கூறப்பட்டுள்ளது இங்குக் குறிப்பிடத் தக்கது.[62]

ஆன்மாக்கள் முக்தி, இன்பம் பெற இறைவன் கொடி கட்டி உற்சவம் கொண்டருள்கிறார்.

"கொடிகள் ஒரு குறிக்கோளுடன் ஏற்றப்படுகின்றன. ஏற்றப்படும் கொடி ஏற்றிவிப்பவரது உறுதியைக் குறிக்கும். ஓர் உணர்ச்சியை ஊட்டும். கருத்தில் ஒற்றுமை, ஒன்றுபட்ட முயற்சி இவைகளின் சின்னமே கொடி. கொடியைக் காணும் தோறும் உணர்ச்சியெழுகின்ற காரணத்தால் கொடி ஏற்றுதல், வணக்கம் செய்தல், வாழ்த்துதல் இன்றியமையாததாயிற்று.

சிவபெருமானுக்கு ரிஷபக்கொடி
திருமாலுக்குக் கருடக்கொடி
பிரம்மாவிற்கு அன்னக்கொடி''[63]

இக் கருத்துக்கேற்றமுறையில் ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு (தேசிய) நாட்டுக்கொடி இருக்கும் அக் கொடி அந் நாட்டில் என்றும் பறந்துக் கொண்டிருக்கும். சுதந்திர நாள், குடியரசுநாள் ஆகிய நாட்களில் தேசிய கொடியைப் பறக்க விடுகின்றனர்.

"பறக்கும் கொடி நம் உயிரின் நிலையைக் குறியீடாகக் காட்டுகிறது. உயிர்கள் உடலின்றி தனித்து ஆணவத்தோடு ஒடுங்கி நின்று யாதொரு அறிவும், செயலும் இன்றி இருக்க இறைவன் உயிர்களிடம் வைத்த அருளால் கலையினால் ஆணவத்தைச் சிறிது நீக்கலும் அறிவும், இச்சையும் விளங்கி உடலைப்பெறும் பக்குவ நிலையை உயிர்கள் பெறுகின்றன

என்பது சாஸ்திரம். அதைக் கேவல நிலை என்பர். பின் உடல் கருவி, போகப்பொருள் விளங்கும் அவை உலகம் முதலியன ஏற்படும். இதனைப் பறக்கும்கொடி காட்டும் என்று நசன் குறிப்பிடுகிறார்.''[64]

"இக் கொடி ஏற்றப்படும் துவஜஸ்தம்பம் பற்றி இனி கவனிப்போம். துவஜஸ்தம்பத்தின் உயரம் ஆலயத்திற்கு ஆலயம் மாறுபட்டுக் காணப்படும். பொதுவாக கோபுர உயரத்திற்கு முக்கால் பங்கு உயர அளவில் அவை அமைக்கப்படும். துவஜஸ்தம்பத்தின் மொத்த அளவில் ஐந்தில் ஒருபாகம் பூமிக்குள் வைத்து ஸ்தாபனம் செய்யப்படுகிறது. துவஜஸ் தம்பத்தின் அடிப்பகுதி அகலமாகவும், சில இடங்களில் சதுரமாகவும் இருக்கும். இது சதமப்பீடம் எனப்படும். அநேகமாக சதமப்பீடம் பித்தளைத் தட்டால் செய்யப்பட்டிருக்கும். சில புகழ்பெற்ற ஆலயங்களில் துவஜ ஸ்தம்பம் முழுவதுமே பித்தளை அல்லது செப்புத்தகடு வேயப்பெற்று தங்க முலாம் பூசப்பட்டிருக்கும். சில ஸ்தம்பங்களில் கணுக்கள் செதுக்கப் பட்டுக் கலையழகுடன் விளங்கும்[65]'' என்று நசன் கூறுகிறார்.

கொலு வழிபாடு விடியற்காலை 4-30 மணி முதல் 4-40 மணிவரை நடைபெறும்.

கொலுவிற்குப்பின் சீனிவாசமூர்த்தியை முகமண்டபத்தில் உள்ள வெள்ளி சிம்மாசனத்தில் எழுந்தருளச் செய்வர். அப்போது பாத்யா அர்கியம் என்ற வழிபாடு செய்து மலர் மாலைகளை அணிவித்து தூப தீபங்கள் காட்டுவர். பின் பஞ்சாங்க சிரவணம் வாசிப்பர். ஐந்துவகை நிலைகளான ஓரை, நாள், கோள், யோகம், கணம் முதலியவற்றைப் படிப்பர். இவற்றோடு அக் கோயிலின் வருமானக்கணக்கு திருமறை விற்பன்னரால் அறிவிக்கப்பெறும்.

வருமானத்தைக் கணக்கு அறிவிக்கப்பெற்ற பின் பெருமாளுக்கு எள் பொடியைப் படையலாகப் படைப்பர்.

மாத்ராதானம் எனப்படும் அரிசியையும் பெருமாளுக்குப் படைப்பர். பின் தீபாராதனையுடன் இவ்வழிபாட்டினை முடிப்பர்.

4-13-2-2 ஆயிரத்தெட்டுப் போற்றி வழிபாடு

இவ்வழிபாட்டின்போது அர்ச்சகர் ஆமைவடிவில் அமைந்த பீடத்தில் (மணையில்) அமர்ந்து மகா சங்கல்பத்தில் கிராம மக்களின் நலன், அரசின் நலன் ஆகியவற்றை வாழ்த்திக் கற்பூர ஆரத்தியுடன் முடிப்பர். பின் ஆயிரத்தெட்டுப் போற்றிகள் பாடுவார்.

பெருமாளுக்குத் தயிர்ச்சோறும், வெறுஞ்சோறும் படைய லாகப் படைப்பர். அப் படையலைச் சுற்றுப்புறச் சிற்றாலயங் களிலும் மேளதாளங்கள் முழங்க படைப்பர். பின் சிறிய திருவடியான அநுமனுக்கும் கோயில் பரிவாரங்களுடன் சென்று படையலைப் படைப்பர். மேலும் பெருமாள் ஆலயத்திலுள்ள பலிதேவதைகளுக்கும் திருவமுது படைப்பர். பெருமாள் ஆலயத்தில் சாத்துமுறை நடத்துவர். இச் சமயத்தில் நாலாயிர திவ்வியப் பிரபந்தச் சாத்துமுறை செய்து தீபாராதனை செய்வர்.

அர்ச்சகர் பெருமாளுக்குப் பயன்படுத்திய புனித நீரைப் பிரபந்த ஓதுவாருக்குத் தருவார். பின்பு தெய்வத்திருப்பாதம் (சடாரி) சாய்த்துக் காலை வழிபாட்டினை முடிப்பார்.

பெருமாள் உற்சவ மூர்த்தியைக் கேடயத்தில் மகாமண்டபத்தில் எழுந்தருளச் செய்வார். பெருமாளுடன் சேனாதிபதியையும், சக்கரத்தாழ்வாரையும் தனித்தனிக் கேடயத்தில் எழுந்தருளச் செய்வார். அங்கு முதன்மை கங்கணப் பட்டரான சௌரிராஜ பட்டாச்சாரியாருக்குப் பரிவட்டம், மேல் சாற்று, இரட்ச்சா பந்தனம் ஆகியவற்றுடன் மாலை அணிவித்து மரியாதை செய்வார். பட்டர் அன்றாடப் பலிசாய்த்தபின் இறைவன் திருவீதிவுலா புறப்படுவதற்குப் பெருமாளை எழுந்தருளச் செய்வர்.

இராச கோபுரத்தின் எதிர்த்திசையில் அமைந்துள்ள பிரம்ம பலி பீடத்திலிருந்து பெருந்திருவிழா பலி உருவேற்றம் தொடங்கப்பெறும்.

பத்துநாள் திருவிழாவினை எட்டுத் திக்குப்பாலகர்களும் தம் மேற்பார்வையில் நடத்துவர். அவ்வெட்டு திக்குப் பாலகர்கள் ஆவோர், பிரம்மா, இந்திரன், அக்கினி, தெற்கு

திசையில் இயமன், வருணன், காற்று, குபேரன், சிவன் ஆகியோர்.

பிரம்ம பலி பீடத்தில் பிரம்மாவை உருவேற்றிப் படையல் படைத்து புனிதநீர் தந்து, கங்கணபட்டர் திருவிழாவிற்கு அழைப்பார். பக்கத்திலுள்ள இந்திரனுக்கும் மேற்கூறிய முறையில் வரவேற்பு அளித்துப் படையல் படைத்தும் கடவுள் வாழ்த்துப் பாடியும் அழைப்பார்.

அதற்கடுத்து இராசகோபுரத்தில் நிற்கும் உற்சவ மூர்த்திகளுக்கு இராச ஆரத்தி காட்டிய பிரபந்தப் பாராயணத்தைத் தொடக்கிவைப்பர். வலது பக்கம் உள்ள வேதாந்த தேசிகருக்குப் பெருமாள் அணிந்துள்ள மலர்மாலை, சடாரி முதலியவற்றால் மரியாதை செய்வார். வேதாந்த தேசிகர் சிற்றாலயத்தில் திருமறை ஓதுபவருக்குச் சடாரி சாய்த்துத் திருமறை ஓதத் தொடங்குவர்.

வேறெந்த வைணவத் திருக்கோயில்களிலும் நடைபெறாத மரியாதை இக் கோயிலில் வேதாந்த தேசிகருக்கு வழிவழியாக நடைபெற்று வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

திருமறை ஓதத் தொடங்கியதும் அக்னிமூலையில் மேற்கூறிய வழிபாடுகளுடன் அக்னி தேவதையை வரவேற்பர். இங்கு ஒவ்வொரு தேவதைகளுக்கும் அவரவர்களுக்கு விருப்பமுள்ள இசைகள் இசைக்கப்பெறும். இத்துடன் இன்றைய சிறப்பு பலி வழிபாடு முடிவுறும்.

பெருமாள் உற்சவமூர்த்தி திருவீதி உலாவில் சிறியதிருவடி, சிற்றாலயத்தின் முன் நிறுத்தப்பெற்று அவருக்கும் மாலை சூட்டி சடாரி சாய்த்து பெரிய திருவீதியுலாவைத் தொடங்குவர். திருவீதியுலா முடிவுற்றதும் பெருமாளை ஊர்தி மண்டபத்தில் எழுந்தருளச் செய்வர்.

கொடி மரத்தின் அருகில் துவஜ தண்டம் எனப்படும் கருடன் உருவம் பொறித்த நீளமான வெண்ணிற ஆடையைப் பட்டுக்கயிற்றால் பெருமாளுக்கு அணிவிப்பர். பின் கருடன்மீது பாடப்பெற்றுள்ள பாடல்களைப் பாடுவர். அதனுடன் சேனாதிபதி சக்கரத்தாழ்வார், தசாவதாரம் முதலியவர் மீது பாடப்பெற்றுள்ள பாடல்களையும் பாடுவர்.

அப் பிரபந்தப் பாடல்களோடு திருமறைகளையும் ஓதுவார். அன்று காலையில் (நன்னாளில் அமைந்த நல்லோரையில்) 8-15 மணிக்குக் கோயில் நிர்வாக அதிகாரியின் முன்னிலையில் பக்தர்கள் சூழ்ந்திருக்க திருமறை ஒலியுடன் மேளதாளங்கள் முழங்கவும் மணி ஓசையுடனும் கொடி ஏற்றப்பெறும்.

கொடி ஏற்றுவதற்கு நாராயணவனத்தில் தொன்றுதொட்டு வசித்துவரும் பட்டு சாலிய நெசவாள குடும்பத்தில் பிறந்த எவரேனும் ஒருவர் ஆண்டுதோறும் சுமார் பத்து மீட்டர் நீளமுள்ள வெண்ணிற ஆடை, நூல்கயிறு ஆகியவற்றை அன்பளிப்பாகத் தந்துவருகின்றனர்.

கொடி மரத்திலுள்ள கருடாழ்வாருக்குத் திருமுழுக்குச் செய்து ஆடை அணிவித்து, மலர்மாலை சாத்தி மஞ்சளரிசியுடன் சந்தனம், குங்குமம் வைத்துத் திருகாப்புக் கட்டுவர்.

பெருமாள் உற்சவமூர்த்திக்கும், கொடிமரத்திலுள்ள கருடனுக்கும் தீபாராதனை செய்து பெருமாளுக்கு வெண் பொங்கல் படையலைப்படைப்பர். இப் படையலையே கொடி மரத்திற்கும் படைத்து இருக்குத் திருமறையினை ஓதுவர். தெய்வப் படையலைக் கங்கணப்பட்டர், அதிகாரிகள், பக்தர்கள் முதலியோருக்கு வழங்குவார்.

இவ்வழிபாடு முடிவுற்றதும் இக் கிராமத்தில் பட்டுச் சாலியர் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் பெருமாளுக்கும், வேதாந்த தேசிகருக்கும் கைத்தறி வெண்ணிற ஆடையை அன்பளிப்பாக அளிப்பர். இந் நிகழ்ச்சிக்குக் கோயில் நிர்வாகத்தினர் அவர்கள் இல்லத்திற்குக் கோயில் பரிவாரங்களுடன் சென்று அவர்களைக் கோயிலுக்கு அழைத்துவருவர்.

பெருமாளுக்குக் கொண்டுவந்த வெண்ணிற ஆடையை முதன்முதலில் உற்சவமூர்த்திக்கு அணிவித்து அதே மரியாதைகளுடன் அதை எடுத்துச்சென்று தேசிகருக்கும் அணிவிப்பர். அங்குப் பிரபந்தச் சாத்து முறையும் நடத்தப்பெறும்.

கைத்தறி ஆடைகளை அளித்தவருக்குப் பெருமாளின் முன்னிலையில் அர்ச்சகர் போற்றி செய்து பரிவட்டம் காட்டி சடாரி சாய்ப்பார். இவ் வழிபாட்டினைப் பின்பற்றிப் பெருமாளுக்குத் தனியாகப் பொங்கல் செய்து படைத்து உபயதாரர்களுக்குக் கொடுப்பார். கண்காணிப்பாளர் முன்னிலையில்

திருமறை ஓதுபவரும், அத்தியாபகரும் மந்திரத்தோடு மலர்களால் போற்றிச் செய்து இவ்இனிய கொடியேற்று விழாவினை முடிப்பர்.

கோயில் நிர்வாகத்தினர் அளிக்கும் கைத்தறி ஆடையை மஞ்சள் நீரில் நனைத்து அதனைக் கங்கணபட்டருக்கு அளிப்பர். அவர் இவ்வாடையுடன் பத்து நாட்கள் வேள்வியைச் செய்வார்.

உற்சவ மூர்த்தியைத் திருக்கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அப்பொழுது முதலில் புண்ணியாவசனம் செய்து பின் திருமறை முழக்கத்துடன் பால், தயிர் மற்றும் திருமுழுக்குப் பொருட்களால் இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்து தூப, தீப ஆரத்தி காட்டி அப்போது மந்திரங்களை ஓதுவர். சந்தனக்காப்பு அணிவித்தும் ஆரத்தி காட்டியும் சிறப்புத் திருமுழுக்கினை முடிப்பர்.

திருமுழுக்குப் புனித நீரினை அர்ச்சகர் அனைவருக்கும் தெளிப்பார். நீராட்டம் என்ற திராவிட திருமறை ஓதுவார். திருமுழுக்கிற்காகப் பொங்கல் தயிர்ச்சோறு, வடை, பருப்பு, பானகம் ஆகியவற்றைச் செய்து படைப்பர்.

பின் உற்சவ மூர்த்திக்குச் சிறப்பு அலங்காரம் செய்து ஆடை அணிகலன்கள் மலர்மாலைகள் ஆகியவற்றை அணிவிப்பர். 11-30 மணி முதல் 12-00 மணி வரை நண்பகல் பூசையை நடத்தி இறைவனுக்குப் புளியோதரை படையலைப் படைப்பர். இத்துடன் அன்றைய காலை வழிபாடு நிறைவுறும்.

மாலையில் கீழ்வருமாறு வழிபாடுகளை நிகழ்த்தப்பெறும்.

மாலை 4 மணிக்குக் கோயில் கதவைத் திறப்பர். 4-00மணி முதல் 5-30 மணிவரை பக்தர்கள் இறைவன் அருளைப் பெறுவர். 5-30 மணிமுதல் 5-45 மணி வரை தோமாலை சேவை நடத்தப் பெறும்.

5-45 மணி முதல் 6-15 மணிவரை படையல் படைப்பர்.

6-15 மணி முதல் 6-20 மணிவரை சிறப்புப் பலி இடப்படும்.

6-20 மணி முதல் 9-30 மணி வரை பக்தர்கள் இறைவன் அருளைப் பெறுவர் (தர்மதரிசனம்). இச் சமயத்தில் 6-30 மணி முதல் திருக்கல்யாண மண்டபத்திலிருந்து பெருமாள் உற்சவ

மூர்த்தியைக் கொடி மரத்தின் இடது பக்கத்திலுள்ள ஊஞ்சல் மண்டபத்திற்கு எடுத்துச் சென்று ஊஞ்சலில் எழுந்தருளச் செய்வர்.

6 30 மணிமுதல் 7-30 மணிவரை பெருமாளுக்கு வெள்ளிக் குடையினாலும், வெண் சாமரத்தாலும் நாதசுர இசையோடு வழிபாடு நடைபெறும்.

6-30 மணிக்கு ஆரத்திகாட்டி ஊஞ்சல் சேவையைமுடிப்பர். பெருமாள் உற்சவரை மண்டபத்திற்கு எடுத்துச்சென்று பாம்பு ஊர்தியில் எழுந்தருளச் செய்வர்.

இரவு 8-15 மணிக்குப் பாம்பு ஊர்தியில் பெருமாள் திருவீதி வுலாவிற்குப் புறப்படுவார். இதற்கு முன் பெரிய திருச்சுற்றின் வழியாக வலம் வந்து இராசகோபுரத்தில் பக்தர்களுக்குத் தரிசனம் தருவார். இராசகோபுர ஆரத்தியுடன் பிரபந்தம் ஓதுதலும் தேசிகருக்கு மலர்மாலை மரியாதை செய்தலும் திருமறை ஓதுதலும் நிகழ்த்தப்பெறும். பின் மாடவீதிவுலா வந்து சிறிய திருவடிக்கு மரியாதை செய்தபின் பெரிய திருவீதிவுலா நடைபெறும். அச் சமயத்தில் சாலியர் வீதியில் உள்ள கங்கைகொண்டான் மண்டபத்தில் பெருமாளை எழுந்தருளச் செய்வர்.

கோயிலிலிருந்து தளிகையைக் கோயில் மரியாதையுடன் மண்டபபடி எனப்படும் படையலுக்காகக் கங்கைகொண்டான் மண்டபத்திற்கு எடுத்துச் செல்வர். இறைவனுக்கு அப் படையலைப் படைத்து ஆரத்தி காட்டியதும் மீதமுள்ள திருவீதி களுக்கு வீதிஉலா புறப்பட்டுத் தேர்வீதி வழியாக உலாவினை முடித்துக்கொண்டு பதினாறு தூண் மண்டபத்திற்குப் பெருமாளை எழுந்தருளச் செய்வர்.

பின் மேளதாளங்கள் முழங்க மங்கல ஒலியுடன் பெருமாளை மூன்று முறை வலம் வருவர். அம் மண்டபத்தி லிருந்து கோயிலிலுள்ள ஊர்தி மண்டபத்திற்குப் பெருமாளை எருந்தருளச் செய்வர். அங்குப் பெருமாளுக்கு ஆரத்திகாட்டி இனிதே இரவு ஊர்தி உற்சவ வழிபாட்டினை முடிப்பர்.

பிறகு ஊர்தி மண்டபத்திலிருந்து பெருமாளைக் கேடயத்தில் வைத்துக் கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். மூலவர் ஆலயத்தில் போக சீனிவாச மூர்த்திக்கு ஊஞ்சல் படுக்கையமைத்து பால், பழம் ஆகியவற்றைப் படைய

லாகப் படைத்துப் படுக்கைக்கு எழுந்தருளச் செய்வர். இச் சமயத்தில் பால், பழங்களுடன் இனிப்பும் சோறும் கலந்த படையலை உற்சவமூர்த்திக்குப் படைத்து அங்கு அவரையும் சயனாசனத்தில் அமர்த்தியதும் ஆரத்தி காட்டி நள்ளிரவு வழிபாட்டை முடித்துக் கோயிலைச் சாத்திவிடுவர்.

### 4-13-3 மூன்றாம் நாள் திருவிழா

இவ்விழா நாளன்று காலை ஐந்து மணிக்குத் திருப்பள்ளி யெழுச்சியுடன் கோயில் திறக்கப்படும். போக சீனிவாச மூர்த்தியை எழுந்தருளச் செய்வர். தோமாலை சேவையை ஆரம்பிப்பார். மூலவருக்குத் தூபதீப ஆரத்தி காட்டி ஆயிரத் தெட்டுப் போற்றிகள் போறறுவர்.

சந்நிதிக்குத் தளியைக் கொண்டுவந்து காலைப் படையலைப் படைப்பர். பெருமாளின் சர்வதரிசனத்தைக் காலை முதல் நண்பகல் 11-30 வரை பக்தர்கள் காணலாம்.

காலைப்பூசை முடிவுற்றதும் கல்யாண மண்டபத்தில் உள்ள உற்சவரைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து ஊர்தி மண்டபத்திற்கு எடுத்துச்செல்வர். அவ்வூர்தி மண்டபத்தில் பெருமாளைச் சிறிய பாம்பு ஊர்தியில் எழுந்தருளச் செய்து அலங்காரம் செய்வர். பிறகு பெரிய திருச்சுற்று வலம் வந்து இராச கோபுரத்தில் இராச ஆரத்தி காட்டியதும் கோபுர தரிசனம் நடைபெறும்.

பின் வேதாந்த தேசிகருக்கு மரியாதை செய்து மாடவீதி உலா சென்று ஆஞ்சநேயருக்கும் மலர்மாலை மரியாதை செய்து வழக்கம்போல் பெரிய திருவீதி உலா தொடரும். கங்கை கொண்டான் மண்டபத்தில் முன்போல் படையல் கொணர்ந்து படைக்கப்பெறும். அங்கிருந்து பெருமாள் உற்சவர் திருவீதி உலா சென்று கோயிலின் எதிர்ப்புறத்தில் உள்ள பதினாறு தூண் மண்டபத்தை வந்தடையும்.

அம் மண்டபத்தில் பிரபந்தத்தை முடித்துப் பெருமாளை ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்து கற்பூர ஆரத்தி காட்டி காலை உற்சவத்தை முடிப்பர்.

முந்திய நாள் நடத்தப்பெற்ற வழிபாடுகள் யாவும் இன்றும் காலை, மாலை வேளைகளில் நடத்தப்பெறும்.

அன்றிரவு அன்ன ஊர்தியில் பெருமாளை எழுந்தருளச் செய்து திருவீதிஉலா கொண்டுவருவர். மற்ற முக்கிய வழிபாடு கள், படையல்கள் யாவும் முந்திய நாள் நடைபெற்ற முறையில் இன்றும் நடைபெறும்.

## சிறப்பு வழிபாடு

இவ்வூரின் தெற்கு மாட வீதியில் வசித்துவந்த திருமதி சலபூரி சுப்பம்மாள் தன் இல்லத்தைக் கோயிலுக்கு உயில் எழுதிக் கொடுத்துள்ளார். அவருக்குத் தேவத்தானத்தார் மரியாதை செய்து வருகின்றனர். பெருந்திருவிழாவின் இரண்டாம் நாள் திருவிழாவில் காலையில் நடைபெறும் பாம்பு ஊர்தி திருவிழாவிற்கு நிரந்தரமான உபயதாரராக திருமதி சுப்பம்மாள் அவர்களைக் கோயில் நிர்வாகத்தினர் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

அவருக்கு அன்று காலை பெருமாள் பெரிய திருவீதிஉலா புறப்படும் சமயத்தில் பரிவட்டம், மலர் மாலை, வெள்ளிக்கம்பு ஆகியவற்றைக் கொடுப்பர். அதோடு சடாரியும் சாய்ப்பர். புனித நீரையும் தெய்வப்படையலையும் அளித்து உபயதாரருக் குரிய மரியாதைகள் யாவையும் செய்வர்.

## 4.13-4 நான்காம் நாள் திருவிழா

விடியற்காலை ஐந்துமணிக்குக் கோயில் திறக்கப்பட்டு அன்றாட பூசை, தோமாலை சேவை படையல்படைத்தல், பலியிடுதல் ஆகியவை நடைபெறும்.

காலையில் 7-30 மணிக்கு உற்சவமூர்த்தியைக் கல்யாண மண்டபத்திலிருந்து ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். பின்பு அங்குப் பெருமாளை அலங்காரம் செய்வர். இறைவனைச் சிம்ம ஊர்தியில் எழுந்தருளச்செய்து திருவீதி உலாவிற்கு எடுத்துச்செல்வர். திருவீதி உலாவை முடித்துக் கொண்டு இறைவனை ஊர்தி மண்டபத்திற்குக் கொண்டுவந்து அங்கு ஆரத்திகாட்டி கல்யாண மண்டபத்தில் எழுந்தருளச் செய்வர்.

கல்யாணமண்டபத்தில் பெருமாளுக்கு ஆடைஅணிகலன் களைக் களைந்து திருமஞ்சனம் செய்வர். பிறகு நண்பகல் பூசை நடைபெறும்.

மாலை வேளை பூசை, இரவு பூசை ஆகியவற்றை நடத்துவர்.

மாலையில் பெருமாளை ஊஞ்சல் மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்து ஊஞ்சல் சேவை நடத்துவர். ஊஞ்சல் சேவை முடிவுற்றதும் பெருமாளை ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குப் பெருமாளை முத்துப்பல்லக்கில் வைத்து அலங்காரம் செய்து பெரிய திருவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர். கங்கைகொண்டான் மண்டபத்தில் படையல் படைத்து ஆரத்தி காட்டிச் சாத்துமுறை நடைபெறும்.

திருவீதி உலாவை முடித்துக்கொண்டு பெருமாள் ஊர்தி மண்டபத்திற்குத் திரும்பக் கொண்டுவந்ததும் இவ்வுற்சவத்தை முடித்து வைப்பர். ஊர்தி மண்டபத்திலிருந்து கல்யாண மண்டபத்திற்குப் பெருமாளை எழுந்தருளச் செய்து அங்கு ஏகாந்த சேவை செய்வர். பின் திருப்பள்ளிக்கு எழுந்தருளச் செய்வர். இத்துடன் அன்றைய வழிபாடுகள் முடிவுறும் பின் கோயில் சாத்தப்பெறும்.

### 4-13-5 ஐந்தாம் நாள் திருவிழா

இவ்விழா நாளன்று காலை ஐந்துமணிக்குத் திருப்பள்ளி யெழுச்சியுடன் கோயில் திறக்கப்பட்டு தோமாலை சேவை, திருமுழுக்கு காலை பசை, ஆயிரத்தெட்டுப் போற்றிகள் மற்றும் மற்ற வழிபாடுகள் தொடர்ந்து நடைபெறும். அடுத்து தர்ம தரிசனம் நடைபெறும். கல்யாண மண்டபத்திலிருந்து உற்சவ மூர்த்தியை ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குப் பெருமாளுக்குக் கற்பகத்தருவில் அலங்காரம் செய்வர் பின் பெருமாளைத் திருவீதி உலாவிற்கு எடுத்துச் செல்வர். பதினாறு தூண் மண்டபத்திலும், கங்கைகொண்டான் மண்டபத்திலும் பெருமாளுக்குப் படையல் படைத்து ஆரத்தி காட்டுவர்.

திருவீதி உலாவை முடித்துக்கொண்டு பெருமாளை ஊர்தி மண்டபத்திற்குக் கொண்டு வருவர். அங்கிருந்து கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்து ஆடை அணிகலன்களைக் களைவர். பின் பெருமாளுக்கு மந்திரம் ஓதி திருமுழுக்குச் செய்வர். வெண்பொங்கல், தயிர்ச்சோறு, வடைபருப்பு, பானகம் ஆகியவற்றால் படையல் படைப்பர். இத்துடன் காலை வழிபாடு முடிவுற்றுக் கோயிலைச் சாத்துவர்.

மாலை நான்கு மணிக்குக் கோயிலைத் திறப்பர். மாலை நேர வழிபாடு, இரவு வழிபாடுகளை முடித்து, கிராம பலியிடுவர்.

ஊஞ்சல் மண்டபத்தில் இறைவனுக்கு ஊஞ்சல் சேவை நடத்தி ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குச் சர்வ பூபாள ஊர்தியில் பெருமாளுக்கு அலங்காரம் செய்து திருவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர். பின் திருவீதி உலாவை முடித்துக்கொண்டு ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குப் பெருமாளுக்கு ஆரத்தி காட்டி கல்யாண மண்டபத்திற்கு எடுத்துச்செல்வர். அங்கு இரவு வழிபாடுகள் நடத்தியதும் திருப்பள்ளிக் கொள்ளச் செய்வர். பின் கோயிலைச் சாத்துவர்.

### 4-13-6 ஆறாம் நாள் திருவிழா

அன்று விடியற்காலை நான்கு மணிக்குத் திருப்பள்ளி யெழுச்சியுடன் கோயில் திறக்கப்பட்டு வழக்கம்போல் அன்றாட வழிபாடுகள் நிகழ்த்தப்பெறும். பின் பெருமாளைப் பல்லக்கில் எழுந்தருளச் செய்து மோகினி அவதார அலங்காரம் செய்வர்.

இவ்விழாவின் நிரந்தர உபயதாரரான அமரர் கஞ்சமம்மாள் அவர்களின் பேரன் திரு குமார் அவர்களின் முன்னிலையில் இவ்விழா துவங்கப்பெறும். அன்று திருகுமார் அவர்களுக்குப் பரிவட்டம், மலர்மாலை, வெள்ளிக்கம்பு ஆகியவற்றை அடையாளமாக அளிப்பர். இத் திருவிழாவில் வழக்கம்போல் அல்லாமல் பெருமாளைக் கல்யாணமண்டபத்திற்குப் பல்லக்கில் எழுந்தருளச் செய்வர். அங்குச் சர்க்கரர் ஆரத்தி காட்டி வழிபாட்டினை முடிப்பர்.

அடுத்த நடைமுறையில் உள்ளவாறு அன்றாட வழிபாடு கள் நடைபெறும்.

பெருமாளுக்குத் திருமுழுக்கு முடிந்தவுடன் சிறப்பு அலங்காரம் செய்வர். அத்துடன் இறைவனுக்கு வைகுண்ட முடி எனப்படும் திருக்கையினைச் சாத்துவர்.

வைரமும், மாணிக்கமும் பதிக்கப்பெற்றுச் சிறந்த வேலைப் பாடுகளுடன் செய்யப்பட்ட மிக அழகான வலது உள்ளங்கை உருவத்தைச் சிறப்பான திருவிழா நாட்களில் மட்டும் இறைவ னுக்கு சாத்துவர்.

மாலையில் பெருமாளைக் கல்யாண மண்டபத்திலிருந்து ஊஞ்சல் மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்து ஊஞ்சல் சேவையை நிகழ்த்துவர். அங்கிருந்து ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்து கருட ஊர்தியில் வைத்துச் சிறப்பு அலங்காரம் செய்வர்.

பெருமாளுக்குப் பைரவ ஆடையும் கருடனுக்கு வேட்டியும் மேலாடையும் உடுத்திச் சிறப்பாக அலங்காரம் செய்வர். ஊர்தி மண்டபத்தில் கருட சேவைக்காகப பெருமாளுக்குப் படையல் படைப்பர்.

இரவு 8-30 மணிக்குத் திருமலை திருப்பதி தேவத்தான துணை நிர்வாக அலுவலர் ஆகியோரின் முன்னிலையில் பெருமாளுக்குச் சர்க்கார் ஆரத்தி காட்டுவர். பின் திருவீதி உலா சென்று இராசகோபுர வாயிலின் வழியாக இறைவனைக் கோயிலுக்குக் கொண்டுவருவர்.

இராசகோபுர வாயிலில் பெருமாளுக்கு வெண்மையான துணியால் கண்ணேறு கழித்து அதன்பின் சிதறுத் தேங்காய் உடைத்து இராச ஆரத்தியைப் பெருமாளுக்குக் காட்டுவர். உலாவின் போது பிரபந்தப் பாராயணமும் திருமறையும் ஓதப் பெறும்.

இலாயில் எனப்படும் இரட்டைத் தீவட்டியையும் பெரிய குடைகளையும் பெருமாள் திருவீதி உலா செல்லும்போது உடன் எடுத்துச் செல்வர்.

இராச கோபுர வாயிலிலிருந்து பெருமாளை எடுத்துக் கொண்டு தேசிகர் சிற்றாலயத்தை அடைவர். அங்குத் தேசிகர் சிற்றாலயத்தை அடைவர். அங்குத் தேசிகர் மரியாதை பெற்று திருவீதி உலாவைத் துவக்குவர்.

பெருமாளின் உலா கடைத் தெருவிற்கு வந்ததும் ஊர் செல்வந்தர்கள் சிலர் தனிப்பட்ட முறையில் அவரவர் விருப்பப்படி வாணவேடிக்கைகளை மிகச் சிறப்பாக நடத்துவர். பெருமாள் உற்சவர் வீதி உலாவை முடித்துக்கொண்டு கோயிலை வந்தடைந்ததும் ஆரத்தி காட்டிப் பள்ளிகொள்ளச் செய்வர். பின் கோயிலைச் சாத்துவர்.

**4-13-7 ஏழாவது நாள் திருவிழா**

விடியற்சாலை நான்கு மணிக்குப் பெருமாள் திருப்பள்ளி யெழுச்சியுடன் அன்றைய வழிபாடு தொடங்கும். வழக்கம்

போல் நடைபெற வேண்டிய காலை வழிபாடுகள் நடைபெறும். அன்று காலையில் பெருமாளைத் திருவீதி உலாவிற்காக அநுமார் ஊர்தியில் எழுந்தருளச் செய்து சிறப்பாக அலங்காரம் செய்வர். உற்சவருக்கு ஆரத்தி காட்டியதும் உற்சவரை திருவீதிவுலாவிற்கு எடுத்துச் செல்வர். வழியில் தேசிகரின் மரியாதையைப் பெற்று உலாவை முடித்துக்கொண்டு உற்சவரைக் கோயிலுக்குக் கொண்டு வருவர். திருவீதி உலாவில் பிரபந்தப் பாடல்களைப் பாடுவர். கோயிலை வந்ததடைந்ததும் பெருமாள் உற்சவரை ஊர்தி மண்டபத் திலிருந்து கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர்.

நண்பகல் பூசை, மாலைவேளை பூசை, இரவு பூசை ஆகியன வழக்கம் போல் நடைபெறும். பின் பெருமாளின் தர்ம தரிசனமும் நடைபெறும்.

மாலை 6-30 மணிக்கு வழக்கத்திற்கு மாறாக யானை ஊர்தித் திருவிழாவை முன்னிட்டு ஊஞ்சல் சேவைக்குப் பதில் வசந்தோற்சவம் நடைபெறும்.

இரவு 7-30 மணிக்குப் பெருமாளைக் கல்யாண மண்டபத் திலிருந்து ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்கு பெருமாளுக்குச் சிறப்பாக மலர் அலங்காரம் செய்து யானை ஊர்தியில் எழுந்தருளச் செய்வர். ஆரத்தி காட்டி திருவீதி உலாவிற்காக இராசகோபுர வாயிலுக்குக் கொண்டு வருவர். அடுத்து இராசகோபுர வாயிலில் சர்க்கார் ஆரத்தி காட்டுவர். அங்கிருந்து உற்சவரைச் சிற்றாலயத்திற்கு எடுத்துச் சென்று தேசிகர் மரியாதை பெறுவர். பின் திருவீதி உலா புறப்படும்.

திருவீதிஉலா முடிவுற்றதும் உற்சவரைக் கோயிலுக்குக் கொண்டுவருவர். அங்குள்ள ஊர்தி மண்டபத்தில் ஆரத்தி காட்டிக் கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குப் பெருமாளைப் பள்ளிகொள்ளச் செய்வர். பின் கோயில் சாத்தப்படும்.

### 4-13-8 எட்டாம் நாள் திருவிழா

அன்று விடியற்காலையில் 3-30 மணிக்குத் திருப்பள்ளி யெழுச்சி நடைபெறும். பின் வழக்கம்போல் அன்றாட வழிபாடுகள் ஒன்றன்பின் ஒன்றாக நடத்தப்பெறும்

காலை திருவீதி உலாவிற்காகப் பெருமாளை ஊர்தி மண்டபத்தில் உள்ள சூரிய பிரபையில் எழுந்தருளச் செய்வர். திருவீதி உலாவை முடித்துக்கொண்டு ஊர்தி மண்டபத்திற்கு பெருமாள் உற்சவரைக் கொண்டுவருவர். ஆரத்தி காட்டி கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர்.

மறுநாள் நடைபெறவிருக்கும் தேர்த்திருவிழாவை முன்னிட்டுக் கோயிலிலிருந்து தேரின் தங்கக் கலசத்திற்குத் திருமஞ்சனம் செய்து கலசத்திற்கு ஆடை மலர் மாலைகள் அணிவித்து ஆரத்தி காட்டுவர். பின் தேர் இழுக்க ஏற்பாடு செய்த ஒப்பந்தத் தலைவர் தலையின்மீது கலசத்தை வைத்துக் கொண்டு தேருக்கென்று உள்ள மேளதாளங்கள் முழங்க மாடவீதி உலா வந்து தேரின் உச்சியில் கலசத்தை வைப்பர். இந்நிகழ்ச்சி ஒரு நல்லோரையில் நிகழ்த்தப்பெறும்.

அன்றைய தினமே தேர் முழுவதையும் அலங்காரம் செய்வர். தேருக்குரிய வேலைப்பாடுகளுடன் கூடிய ஆடைகளால் தேரை அலங்கரிப்பர்.

நண்பகல் பூசை நடைபெற்றதும் கோயிலைச் சாத்துவர். மாலை நான்கு மணி முதல் 5-30 மணி வரை தர்ம தரிசனம் நடைபெறும்.

நாள்தோறும் நடைபெறும் வழிபாடுகள் அன்றும் நடைபெறும். பெருமாளுக்குச் சேவை நடந்ததும் ஊர்தி மண்டபத்திற்குப் பெருமாளை எழுந்தருளச் செய்வர். அங்குச் சுதந்திரப் பிரபையில் பெருமாளை வைத்து அலங்காரம் செய்து இராசகோபுர வாயிலை அடைந்ததும் அங்குக் கோபுர ஆரத்திக் காட்டுவர். தேசிகர் மரியாதைப் பெற சிற்றாலயம் செல்வர். அங்கிருந்து திருவீதி உலா சென்று உலாவை முடித்துக்கொண்டு உற்சவரைக் கோயிலுக்குக் கொண்டு வருவர். அங்கு ஆரத்தி காட்டி பள்ளிகொள்ளச் செய்வர்.

### 4-13-9 ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழா

அன்று விடியற் காலை மூன்று மணிக்குத் திருப்பள்ளி யெழுச்சியுடன் கோயில் திறக்கப்படும்.

காலை நான்கு மணிக்கு இராமருக்குத் திருமுழுக்கு நடத்தியதும் காலை வழிபாடுகள் நடைபெறும்.

கல்யாண மண்டபத்தில் கேருக்கென்று தனியாக உள்ள பீடத்தில் உற்சவமூர்த்தியை எழுந்தருளச் செய்வர். பின் மலர் அலங்காரத்துடன் பெருமாளை மாடவிதி உலாவரச் செய்வர். உலா முடிவுற்றதும் தேர் மண்டபத்தின் மேல் பெருமாளை எடுத்துச் சென்று இறக்கி வைப்பர்.

சரியாக 5-30 மணிக்கு நல்லோரையில் திருமறை, பிரபந்த முழக்கங்களாலும் மேளதாள இசைகளுடனும் பெருமாளைத் தேரில் எழுந்தருளச் செய்வர். அங்கு யாத்திராதானம் எனப்படும் சடங்கைச் செய்வர்.

பின் ஆரத்தி காட்டி, மீண்டும் திருமறையை ஓதிப் பிரபந்தப் பாடல்களைப் பாடுவர். திருமலை திருப்பதி தேவத்தான துணை நிர்வாக அலுவலகர் மற்றும் இக்கோயில் நிர்வாக அலுவலகர் ஆகியோரர் முன்னிலையில் பெருமாளுக்குச் சர்க்கார் ஆரத்தி காட்டப்பெறும். தேரோட்டிக்குப் பரிவட்டம் சாட்டி ஆடை அணிவித்து மலர்மாலை சாத்தி ஆரத்தி காட்டுவர்.

தேரை இழுக்கும் முன் ஒவ்வொரு தேர்க்காலிலும் ஒவ்வொரு எலுமிச்சம் பழத்தை வைப்பர். சிதறுத்தேங்காயையும் உடைப்பர். பூசணிக்காயை எடுத்துக்கொண்டு வந்து தேர் முன் உடைத்து கண்ணேறு கழிப்பர்.

சரியாக 6-30 மணிக்கு நல்லோரையில் ஊர்மக்களும், வெளியூர் பக்தர்களும் வடம் பிடித்துத் தேரை இழுப்பர். அப்பொழுது தேர்க்காலில் உள்ள எலுமிச்சம்பழம் நசுங்கும்.

தேரடிக்கு நேராக உள்ள கடைத்தெரு முனையில் மூலப்படி எனப்படும் தோசையைப் படையலாகப் படைப்பர். பெருமாளுக்கு முனை ஆரத்தி காட்டுவர். கடைத்தெரு வழியாகத் தேர் உலா செல்லும் சாவடி முனையில் வந்தடைந்ததும் அங்கும் முன்போல் படையல் படைத்து ஆரத்தி காட்டுவர். இதே போல் வணிகர் வீதி முனையில் தேர் நிற்கும்போது படையலைப் படைத்து ஆரத்தி காட்டுவர்.

காலை 9-30 மணிக்குத் தேர் கங்கை கொண்டான் மண்டபத்திற்கு அருகில் வந்தடையும்.

கோயிலில் அன்று மட்டும் காலை ஆறு மணிமுதல் ஒரு மணி வரையும் மாலை மூன்று மணி முதல் ஆறு மணிவரையும்

மற்றும் ஏழுமணி முதல் இரவு 9-30 மணி வரையும் பெருமாளின் சர்வதர்ம தரிசனம் நடைபெறும்.

மாலை நான்கு மணிக்குக் கங்கை கொண்டான் மண்டபத்தின் அருகிலிருந்து சர்க்கார் ஆரத்தி காட்டப் பெற்று தேர் புறப்பட்டு உலாவை முடித்துக்கொண்டு 5-30 மணிக்குத் தேர் நிலையை வந்தடையும். அங்குத் திருமறையும், பிரபந்தச் சாற்று முறையையும் ஓதி உலாவை முடிப்பர்.

தேரோட்டிக்குத் திருச்சடாரி மரியாதை கொடுத்து அவருக்கு அணிவித்திருந்த பரிவட்டம் களையப்படும்

திருமலை திருப்பதி தேவத்தான துணை நிர்வாக அலுவலகர், நாராயணவனம் கோயில் நிர்வாக அலுவலகர் ஆகிய இருவருக்கும் சர்க்கார் ஆரத்தி காட்டப்பெறும்.

பின் தேரிலிருந்து பெருமாளைத் தேர்மண்டபத்தில் இறக்கி வைப்பர். அங்குத் தேர்ப்படையல் படைப்பர். அம் மண்டபத்திலிருந்து பெருமாளைத் தேர் வலம் வரச்செய்து கல்யாண மண்டபத்திற்கு எடுத்துச் செல்வர். அங்கு ஆடை அணிகலன்களைக் களைவர்.

மாலை ஆறுமணிமுதல் 6-45 மணி வரை பெருமாளுக்குத் திருமஞ்சனம் நடத்துவர். பின் அவருக்கு அலங்காரம் செய்வர்.

இரவு எட்டு மணிக்கு பெருமாள் உற்சவரை ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குக் குதிரை ஊர்தியில் வைத்து அலங்காரம் செய்து 8-30 மணிக்குத் திருவீதி உலா வருவர்.

உற்சவருக்கு இராச கோபுர வாயிலில் ஆரத்தி கொடுத்து, தேசிகர் சிற்றாலயத்திற்கு எடுத்துச் சென்று தேசிகர் மரியாதையைப் பெற்றுத் திருவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

தெற்கு மாடவீதியில் அக்னி முனையில் பெருமாள் உலா வந்து நிற்கும்போது ஏற்கனவே அழகு செய்யப்பட்டுள்ள பீடத்தில் திருமங்கையாழ்வாரை வைத்துத் திருக்கோயிலில் இருந்து அங்கு எடுத்து வருவர். தெற்கு மாடவீதியில் குதிரை ஊர்தியில் எழுந்தருளியிருக்கும் பெருமாளை ஒருமுறை வலம் வந்து பெருமாளுக்கு நேராக எதிரில் திருமங்கை யாழ்வாரை எழுந்தருளச் செய்வர். உடனே அங்கு ஆழ்வாரையும்,

பெருமாளையும் எடுத்துக்கொண்டு எதிரெதிரே ஓடுவர். இவ் வழிபாட்டிற்கு ஏசல் எனப் பெயர்.

திருமங்கையாழ்வார் ஒடிவந்ததும் இறைவனிடமிருக்கும் ஆடை அணிகலன்கள், பரிவட்டம் மலர் மாலை, சாமரம் குடை ஆகியவற்றை ஆழ்வாருக்கு வழங்கி இருவருக்கும் ஆரத்தி காட்டுவர். பின் பெருமாளைத் திருமங்கையாழ்வார் வலம் வருவார். அங்கு அவர் அருளிச் செய்த பெரிய திருமொழிப் பாடல்கள் பாடப்பெறும். பின் திருச்சடாரியைப் பிரபந்தக் குழுவினருக்குச் சாப்பர். அடுத்து பெருமாளை மாடவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர். மாடவீதி உலா முடிவுற்றதும் பெருமாளைக் கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர்.

இரவு பத்து மணிக்குக் கல்யாண மண்டபத்தில் உபய நாச்சியார், உற்சவ மூர்த்தி, அருள்மிகு பத்மாவதித்தாயார் ஆகியோரை எழுந்தருளச் செய்வர். பின் அலுவலகர்களின் முன்னிலையில் திருமண உற்சவம் நடைபெறும். பெருமாளுக்கு வெண்பொங்கல், புளியோதரை, சர்க்கரைப் பொங்கல் முதலிய வற்றைப் படையலாகப் படைத்து ஆரத்தி காட்டுவர்.

#### 4-13-10 பத்தாம் நாள் திருவிழா

இவ்விழா நாளன்று விடியற்காலை நான்கு மணிக்குத் திருப்பள்ளியெழுச்சியுடன் சோபிகல் திறக்கப்பெறும். பின் பெருமாளுக்குக் காலை திருமுழுக்கு அலங்காரம், பூசை படையல் நடத்தப்பெறும். இனற்றோடு வழக்கம் போல் அன்றாடம் நடத்தப்பெறும். வழிபாடுகளை ஒன்றன்பின் ஒன்றாக நடத்துவர்.

காலை 7-30 மணிக்கு உற்சவரைக் கல்யாண மண்டபத்தி லிருந்து ஊர்தி மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குப் பல்லக்கில் அலங்காரம் செய்து திருவீதி உலாவிற்குச் செல்ல இராசகோபுர வாயிலை வந்தடையும். அங்கு ஆரத்தி பெற்று தேசிகர் சிற்றாலயத்திற்குச் சென்று தேசிகர் மரியாதை ஏற்று திருவீதி உலா சென்று உலாவை முடித்துக்கொண்டு கோயிலுக் குக் கொண்டு வருவர்.

மகா மண்டபத்தில் உபயநாச்சியாரை ஏற்கனவே எழுந்தருளச் செய்திருப்பர். அப்பொழுது முகமண்டபத்தின்

கதவு ஒருமுறை மூடி திறக்கப்படும். கங்கணப்பட்டருக்குப் பல்லக்கு அருகில் பரிவட்டம், மாலை சாத்தி மரியாதை செய்வர். பெருமாளுக்கும் தாயாருக்கும் நடுவில் நின்று அவர்கள் இருவரின் வாக்குவாதங்களின் வாசகங்களைப் பட்டர் வாசிப்பார்.

அவர்கள் இருவரும் சமாதானம் ஆனதும் பூச்செண்டுகளை மாற்றிக்கொள்வர். தோசைப் படையலை படைத்து ஆரத்தி காட்டுவர். பின் கங்கணபட்டருக்குத் திருச்சடாரியும் மலர் மாலையும் சாத்தி மரியாதை செய்வர்.

பின்பு பெருமாளைக் கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குப் பெருமாளுக்கு மந்திரத்தாலானத் திருமஞ்சனம் நடைபெறும். சக்கரத் தாழ்வாருக்கும் திருநீராட்டு செய்யப்பெறும்.

இந்நிகழ்ச்சிக்குப்பின் பெருமாளுக்குப் பட்டாடைகள் அணிவித்து மலர் அலங்காரம் செய்து படையலைப் படைப்பர். பெருமாள் கோயிலிலிருந்து பலி புறப்பட்டு உட்திருச்சுற்றில் நித்திய பலியிட்டு உற்சவ மூர்த்திகளுடன் இராசகோபுர வாயிலுக்குக் கொண்டுவருவர். அங்கு இராசகோபுர ஆரத்தி ஆனவுடன் கோபுரத்தின் எதிரில் உள்ள பிரம்ம பலிபீடத்தின் முன் பிரம்ம உருவேற்றம் செய்வர். அப்போது பலிச்சோறிட்டு அவரைப் போற்றிச் செய்யும் செய்யுளையும் மந்திரத்தையும் சொல்வர்.

பக்கத்திலுள்ள இந்திரனுக்கும் மேற்கூறிய முறையில் பூசைகளும் வழிபாடுகளும் நடத்தப்பெறும். பின் தேசிகரின் மரியாதையைப் பெற்றுக் கொண்டு அக்னி முனைக்குப் பெருமாள் உற்சவரைக் கொண்டுவருவர். அங்கு அக்னிக்கும் பூசை செய்து அவரையும் வழியனுப்பி வைப்பர்.

இயமன், நைருதி, வருணன், காற்று, குபேரன், ஈசானியர் ஆகியோருக்கும் மேற்கூறிய முறையில் பூசைகள் நடத்தி வழியனுப்பி விழாநடத்துவர்.

பின் பெருமாளின் திருவீதி உலாவை முடித்துக்கொண்டு ஊர்தி மண்டபத்திற்குக் கொண்டுவருவர்.

கொடி மரத்தின் அருகில் கங்கணபட்டர் செய்யுளையும், கொடிமரத்திற்குரிய கருடாழ்வார்க்குரிய செய்யுளையும்

பாடுவார். மற்றும் சக்கரத்தாழ்வார், தசாவதாரம், சேனாதிபதி முதலானோர்களின்மீது பாடப்பெற்ற செய்யுட்களையும், திருமறை பிரபந்தப் பாடல்களையும் பாடி இரவு 9-30 கொடியை இறக்குவர்.

ஊர்தி மண்டபத்தில் உற்சவமூர்த்தியின் முன்னிலையில் கங்கணபட்டர் யசூர் உருக்கு சாம அதர்வன ஆகிய நான்கு திருமறைகளையும் ஓதிப் பிரபந்தப் பாடல்களையும் பாடி, மந்திரத்தையும் ஓதுவார்.

அங்கிருந்து பெருமாள் திருச்சுற்று வலம் வந்து மகா மண்டபத்தில் அவரை எழுந்தருளச் செய்வதோடு அன்றைய திருவிழா முடிவுறும்.

வேள்விச் சாலையிலுள்ள பெரிய கலசத்தைக் கங்கண பட்டர் சிரோ ஆடை அணிந்து தன் தலையில் சுமந்தவண்ணம் கோயில் பரிவாரங்களோடு மேளதாளங்கள் முழங்க திருச்சுற்று வலம் வந்து கொடிமரத்தையும் வலம் வருவார். பின் அர்ச்சகர் வேள்விச் சாலையிலுள்ள அங்குரார்ப்பண பாலிகையில் இட்ட நவதானியப் புற்களைப் பறித்து பெருமாளிடம் உள்ள மஞ்சளரிசியில் கலந்து மூலவருக்கு முன் மந்திர அட்சதையை யும் குடத்தையும் வைப்பார்.

அங்குப் பெருந்திருவிழாவின் சிறப்புப் படையலான சர்க்கரைப் பொங்கலையும், பச்சைப்பயறு சுண்டலையும் படைப்பர்.

கலசத்தில் பத்து நாட்களிலும் வேள்வி செய்ததன்மூலம் உருவேற்றப்பட்ட கலாசக்தியை மூலவருக்குச் சேர்ப்பர். பின் இப்பெருந்திருவிழா முடிக்கப்பட்டதற்காக கங்கணபட்டருக்கு தீர்த்தம், சடாரி, மாலை அணிவித்து மற்றும் நிர்வாகத்தாரால் பெருமாளின் சேஷவஸ்திரத்தை அர்ச்சகருக்கு பரிமானமாக அணிவித்து அவரை குடை, தீவட்டி, மேளஇசை போன்ற உபசாரங்களுடன் அர்ச்சகர் திருமாளிகைக்கு அழைத்து சென்றுவிடுவார்கள். அத்துடன் அப்பெருந்திருவிழா முடிவுறும்.

## 4-14-0 விழா வகைப்பாடு (சிறப்பு நிலை)

திருமால் பத்மாவதித் தாயார், ஆண்டாள், ஆழ்வார்கள், ஆசாரியார்கள் ஆகியோருக்கு இத் திருக்கோயிலில் நடத்தப் பெறும் விழாக்கள் இங்கு விளக்கப்பெறுகின்றன.

### 4-14-1 திருமால்

திருமால், விஷ்ணு, பெருமாள் என்று இறைவனைப் பல வகைப் பெயர்களால் அழைப்பர். அவரின் திரு அவதாரங்களை பும் தேவர்கள், முனிவர்கள், மானிடர் ஆகியோர் வழிவழியாக வழிபட்டு வருகின்றனர். இவ் விஷ்ணு வழிபாடு பல திரு அவதாரங்களின் காரணமாகவும் அதன் சிறப்பாலும் வழிபாடு செய்யப்பட்டு வருகின்றது. அருள்மிகு வெங்கடேசுவர பெருமாள் என்கின்ற சீனிவாசர் திருமலையிலும், நாராயண வனத்திலும், சீனிவாசமங்காபுரத்திலும். அப்பளாய குண்டா விலும், துவாரகா திருமலையிலும், உப்பிலியப்பனிலும் விஷ்ணு வின் திரு அவதாரங்கள் சிறப்போடு வழிபடப்பெறுகின்றன.

### 4-14-2 தாயார்

திருமால் வைகுண்டத்தில் காட்சியளிக்கும் திருமாலின் துணைவியரான திருமகள் திரு அவதார வடிவத்தில் தன்னுடைய திருமார்பில் வைத்து அருள்புரிந்து வருகிறார். முப்பணிகளில் ஒன்றான காத்தல் பணியைத் திருமாலும், திருமகளும் செவ்வனே செய்துவருகின்றனர்.

உலக நன்மைக்குச் செல்வம், உணவுப் பொருட்கள், உடல் நலம், வீரம், மக்கட்பேறு, வெற்றி, சிறப்பு முதலியவற்றை அளிக்கவல்ல சக்தி வைகுண்டத்தில் அமர்ந்திருக்கும் நாராயண னின் துணைவியாரிடம் உள்ளது. ஆகையால் ஒவ்வொரு வைணவத் திருக்கோயில்களிலும் மூர்த்தியுடன் திருமகளும் எழுந்தருளியுள்ளார். திருமகள் ஒருவரே என்றாலும் பல்வேறு திருத்தலங்களில் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்பெறு கின்றனர்.

நாராயணவனத் திருக்கோயிலில் பெருமாளுடன் அருள்மிகு பத்மாவதித் தாயார் தனிச் சந்நிதியில் எழுந்தருளி யுள்ளார்.

இப் பத்மாவதித் தாயாருக்கு அருள்தரும் பல இயல்புகள் இருந்தாலும் சிறப்பாக மணமாகாத கன்னிப்பெண்களுக்கு மணம் உண்டாகும் அருளைத் தந்தருள்கிறார். அடுத்து மக்கட்பேறு உண்டாகும் அருளையும் தந்துவருகிறார். இக் காரணங்களால் இத் திருத்தலத்தில் உள்ள திருக்குளம்

இவ்வம்மையார் பெயராலேயே அழைக்கப்பட்டு வருகின்றது. தாமரைத் திருக்குளம் என்று அதன் பெயராகும்.

இவ்வாறு அருள்புரியும் தாயாருக்கு இத் திருத்தலத்திற்கே உரிய சிறப்பு வழிபாடுகள் வழிவழியாக நடந்துவருகின்றன. ஆடித்திங்களில் வரும் வரலட்சுமி விரதம் சிறப்பாக ஒரு நாள் விழாவாக நடைபெறுகின்றது.

வரலட்சுமி விரத விழாவன்று தாயாருக்குச் சிறப்புத் திருமுழுக்குச் செய்யப்பெற்று அலங்காரம் செய்யப்பெற்று ஆடை, அணிகலன்கள் அணியப்பெற்று, குடை, சாமரம், தீவட்டி, பிரபந்தம் வண்ண விளக்குகள், வான வேடிக்கைகள் சிறப்பு இசை, மேளதாளம் ஆகியவற்றுடன் விழா சிறப்பாக நடைபெறுகின்றது. இதோடு சிறப்புப் படையலும் படைக்கப் படும். மாலையில் பெருமாளுக்கும் பத்மாவதித் தாயாருக்கும் மலர் மாலை மாற்றல் வழிபாடு நடத்தப்பெறுகின்றது.

பங்குனித் திங்களில் வரும் உத்திரத்தன்று தாயாருக்குக் காலையில் திருமுழுக்கு அலங்காரம் செய்து படையல் படைக்கப் பெறுகின்றது. மாலையில் திருவீதி உலாவும், அதையடுத்துத் தாயார் சந்நிதியிலேயே பெருமாளுக்கும் தாயாருக்கும் சேர்க்கை வழிபாடும் பள்ளியறை வழிபாடும் நடத்தப்பெறு கின்றன.

இவ்வழிபாட்டில் மக்கட்பேறு அடையாதவர்களும் மணமாகாத கன்னிப் பெண்களும் வேண்டுதல் செய்து கொண்டால் அவரவர் வேண்டுதலுக்கேற்ப பலன் கிடைத்து அருள் பெறுவர் என்ற நம்பிக்கை உள்ளது. இன்றும் மக்கள் இதே நம்பிக்கையைப் பின்பற்றி வருகின்றனர்.

தாயாருக்கு நடக்கும் திருமுழுக்குச் சமயத்திலும் திருவீதி உலா நடைபெறும் நேரத்திலும் நாச்சியார் திருமொழி சாற்று முறையாக ஓதுவார்களால் ஓதப்பெறுகிறது. சிறப்பு மேள தாளங்கள் முழக்கப்பெறுகின்றன.

## 4-14-3-0 ஆழ்வார்கள்

திருமாலைப் போற்றிப் பாடிய பன்னிரு ஆழ்வார்கள் இத்திருக்கோயிலிலும் எழுந்தருளிக் காட்சியளிக்கின்றனர். இவ்வாழ்வார்களுக்கு நாள்தோறும் இருவேளைகளிலும் பூசை கள் நடத்திப் படையல் படைக்கின்றனர்.

### 4-14-3-1 திருமங்கையாழ்வார்

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான திருமங்கையாழ்வாரை மட்டும் பெருந் திருவிழாவில் எட்டாவது நாளன்று மாலையில் குதிரை ஊர்தி திருவீதிவுலாவின்போது கேடயத்தில் எழுந்தருளச் செய்வர். தெற்கு மாட வீதியில் பெருமாளுக்கும் திருமங்கையாழ்வாருக்கும் ஏசல் விழா என்னும் களவாடும் சடங்கு செய்யப்பெறுகின்றது. இச்சடங்கின்போது ஆழ்வார் இறைவனிடம் அடிபணிவது மரபாக உள்ளது. அடிபணிந்த பின் ஆழ்வார் இறைவனுடன் பெரிய திருவீதி உலா சென்று அனைத்து வழிபாடுகளுடன் கோயிலுக்குத் திரும்பியதும் இருவரையும் எழுந்தருளச் செய்வர். இத்துடன் திருமங்கை யாழ்வார் உற்சவம் விழா முடிவுறும்.

ஏனைய ஆழ்வார்களுக்கு உற்சவர்கள் இல்லாததால் இத் திருக்கோயிலில் சாற்றுமுறை உற்சவங்கள் நடைபெறுவதில்லை. ஆனால் பன்னிரு ஆழ்வார்களும் மூலவர்களாக எழுந்தருளி யுள்ளனர்.

### 4-14-3-2 ஆண்டாள்

திருவில்லிபுத்தூரில் தோன்றிய ஆண்டாள் பெரியாழ்வார் மகளாக வளர்க்கப்பட்டாள். வளர்ந்து சூடிகொடுத்த நாச்சியார் என்று பெயர் பெற்று அரங்கநாதனை மணந்து கொண்டார். அத் திருத்தலத்தின் அருட்சிறப்பைப் பல்வேறு இடங்களில் பரப்ப முயற்சி செய்தார். அதனால் வைணவத் திருத்தலங்கள் அனைத்திலும் ஆண்டாள் திருமேனியினை அமைத்துள்ளனர்.

இத் திருக்கோயிலில் ஆண்டாளுக்கு ஆடித் திங்களில் வரும் பூரம்கோளில் ஒன்பது நாட்கள் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றுவருகின்றது.

மார்கழித் திங்களில் ஏழு நாட்கள் ஆண்டாளுக்கு நீராட்டு விழா திருத்தாமரைக் குளத்தில் நடைபெறுகின்றது. மேற்கூறிய இரண்டு திருவிழாக்களும் பெரிய திருவீதிவுலா விழாவாக நடத்தப் பெறுகின்றது. வழக்கம்போல் இத் திருவீதி உலாவிலும் சாமரம், குடைபிடித்தல், படையல், மறை பாராயணம், பிரபந்தம் ஓதுதல், மேள இசை முழங்கல் முதலிய நிகழ்ச்சிகள் நிகழ்த்தப்பெறுகின்றன.

ஐப்பசித் திங்களில் வரும் முழுமதி நாளுக்கு ஐந்து நாட்கள் தொடங்கி முழுமதி நாள்வரை தெப்பத் திருவிழா நடைபெறும். ஐந்து நாட்களுள் முதல் நாளன்று ஆண்டாளுக்குத் தெப்பத் திருவிழா நடத்தப்பெறுகின்றது. இத் திருவிழாவில் பெருமாள் பெரிய திருவீதிவுலாச் சென்று தாமரைத் திருக்குளத்தில் அமைந்திருக்கும் தெப்பத்தில் ஆண்டாளை எழுந்தருளச் செய்து தெப்பத்திருவுலா நடைபெறும். அங்கு அனைத்து வழிபாடுகளும் நடத்தப்பெற்றபின் திருவீதிவுலாச் சென்று ஆண்டாளை கோயிலுக்கு எழுந்தருளச் செய்வர்.

வைணவ சமய வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்கள் பலர் உள்ளனர். அவர்களில் பலர் பல வகைகளில் சேவை செய்துள்ளனர். சிலர் வைணவக் கோயில் வளர்ச்சிக்கும் வழிபாடுகளின் வளர்ச்சிக்கும் பாடுபட்டுள்ளனர். அவ் வைணவச் சடங்குகளைக் குன்றாமல் பாதுகாத்தவர்கள் சிலர் ஆவர். வைணவம் சம்பந்தப்பட்ட நூல்களைச் சிலர் எழுதினர். அவர்களுள் ஆண்டாள் அம்மையார், திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய நூல்களை அருளிச் செய்து உள்ளார்.

இத் திருக்கோயிலில் ஆண்டாளுக்குத் திருவிழா நடைபெறும் முறை இங்கு விளக்கப்பெறுகிறது.

ஆடித்திங்களில் வரும் பூரக்கோளைத் திருவாடிப்பூரம் என்றழைப்பர். அன்று ஆண்டாளுக்குத் திருமணம் நடைபெற்றதால் இத்திங்களில் பத்து நாட்கள் திருவிழா பல வைணவத் திருக்கோயில்களில் நெடுங்காலமாக நடைபெற்று வருகின்றது. அவ் வைணவத் திருக்கோயில்களில் ஒன்றான இந் நாராயண வனத்தில் திருவிழா சிறப்பாக நடத்தப்பட்டுவருகின்றது.

## முதல் நாள் திருவிழா

அன்று காலை எட்டுமணிக்கு ஆண்டாள் சந்நிதியில் மூலவருக்கும், உற்சவருக்கும் சிறப்புத் திருமுழுக்கு நடைபெறும். அடுத்து படையல் படைக்கப்பெற்று, சாற்று முறை நடத்தி, மெய்யன்பர்களுக்குச் சடாரி சாய்த்து, புனித நீர், தெய்வப் படையல் அளிப்பர். முறைப்படி, கோயிலில் நித்திய பூசைகள் நடைபெறும்.

அன்று மாலை 5-30 மணியளவில் தாயாரைக் கேடயத்தில் ஆண்டாள் சந்நிதியின் முன் எழுந்தருளச் செய்து, சிறப்பு அணிகலன்கள், மலர்மாலைகள், அணிவித்துத் திருமறை முழக் கத்துடனும், பிரபந்தப் பாடல்களுடனும் ஆண்டாளைத் திருவீதி உலாவிற்கு எழுந்தருளச் செய்வர்.

உற்சவர் கோபுர வாசலுக்குச் சென்று அங்கு இராச ஆரத்தியைப் பெற்றுத் தேசிகருக்கு சிறப்புச் செய்து மாடவீதி வுலாச் சென்று சிறிய திருவடியாகிய அநுமனுக்கும் மாலை அணிவித்து அங்கிருந்து பெரிய திருவீதிவுலாத் தொடங்கி கங்கைகொண்டான் மண்டபம் வழியாக தேர் வீதியையடையும் அங்கிருந்து 16 தூண் மண்டபத்தை அடைந்து திரும்பும் முறை யில் முடிவு ஆரத்தி பெற்று அங்குப் பிரபந்தப் பாராயணம் முடித்துக் கோயிலுக்கு ஆண்டாள் சந்நிதிக்கு ஆண்டாளை எழுந்தருளச் செய்வர்.

ஆண்டாள் சந்நிதியில் திருமறை, சாற்றுமுறை முடித்து சர்க்கார் ஆரத்தி காட்டியதும் முதல் நாள் விழா முடிவடையும். கேடயத்திலிருந்து தாயாரைச் சந்நிதிக்கு எழுந்தருளச் செய்வர். அங்குச் சிறப்பு அணிகலன்களைக் களைந்து ஏகாந்த வழிபாடு நிகழ்த்துவர். இவ் வழிபாட்டில் சிறப்புப் படையலான புளியோதரையைப் படைப்பர். பிரபந்தக் குழுவினருக்குச் சடாரி சாய்த்து, தெய்வப்படையல் வழங்குவர். இத்துடன் முதல் நாள் திருவிழா முடிவுபெறும். இரண்டாம் நாள் முதல் எட்டாம் நாள் வரை மேற்கண்ட முறையில் வழிபாடுகள் நடைபெறும்.

## ஒன்பதாவது நாள் திருவிழா

காலையில் எட்டுமணிக்கு ஆண்டாள் சந்நிதியில் மூலவருக் கும், உற்சவருக்கும் திருமுழுக்கு நிகழ்த்தி புத்தாடைகளை அணிவித்து, கற்கள் பதிக்கப்பெற்ற தங்க மாங்காய் மாலையை யும், காசுமாலையையும் மங்கல நாணையும் அணிவிப்பர்.

இறைவனுக்குப் பிரபந்தப் பாடல்களைப் பாடியதும் திருமஞ்சனம் நடத்தி வெண்பொங்கல் படையலைப்படைப்பர். சர்க்கார் ஆரத்தி காட்டப்பெற்றதும் பிரபந்தக் குழுவினருக்குத் தெய்வப்படையல் அளிப்பர். இத்துடன் அன்றைய காலை வழிபாடு முடிவுபெறும்.

மாலையில் ஐந்து மணிக்குத் தனித்தனிக் கேடயங்களில் தாயாரையும், பெருமாளையும் எழுந்தருளச் செய்வர். அவர்களுக்குப் புத்தாடைகள், மலர் மாலைகள், சிறப்பு அணிகலன்கள் ஆகியவற்றை அணிவித்து அழகு செய்வர். ஆண்டாள் அம்மையாரை திருமணக்கோலத்தில் அமர்த்த மலரானான பின்புற சடையை யணிவிப்பர். அழகு செய்யப்பெற்ற கேடயத்தில் ஆண்டாள் அம்மையாரை எழுந்தருளச் செய்வர். திருவீதி வுலாச் செல்ல, இராச கோபுரவாசலில் சென்று இராச ஆரத்தி பெற்று, தேசிகர் சிறப்பும், சிறிய திருவடி சிறப்புப் பெற்று பெரிய திருவீதிவுலாவிற்குச் செல்லும். பின் உலாவினை முடித்துக்கொண்டு 16 தூண் மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்வர். அங்குப பெருமாளையும், தாயாரையும் எதிர் எதிரே நிற்க வைத்து மணச் சடங்குகளில் ஒன்றான மாலை மாற்றல் வழிபாட்டைச் செய்வர். மாலை மாற்றும்போது குடை, சாமரம் தீவட்டி முதலியவற்றுடன் பிரபந்தப்பாடலையும் பாடுவர். பின் பெருமாளையும் தாயாரையும் ஒன்றாக நிற்க வைத்து ஆரத்தி காட்டி பிரபந்தப் பாடல்களைப் பாடுவர்.

இறுதியாக உலா கோயிலுக்குள் சென்று ஆண்டாள் சந்நிதியை அடையும். அங்கு உற்சவரின் முன்னிலையில் பிரபந்தப் பாடல்களைப் பாடுவர். பின் சர்க்கரைப் பொங்கலை படையலாகப் படைப்பர். பிரபந்தக் குழுவினருக்குச் சடாரி சாய்த்து தெய்வப்படையல் அளிப்பர். சர்க்கார் ஆரத்தி ஆனவுடன் கோயில் அதிகாரிக்குப் பரிவட்டமும், சடாரியும் சாய்ப்பர். அதன்பின் அனைவருக்கும் புனிதநீர், தெய்வப் படையல் கொடுப்பர். இறுதியாக மெய்யன்பர்கள் இறைவனின் அருளைப் பெறுவர்.

## 4-15-0 ஆசாரியர்கள்

வைணவ மதத்தைப் பரப்புவதற்காகவும், அதன் சிறப்புகளை வழிவழியாக மக்களுக்குத் தெரிவிக்கவும், இறைவனால் தோற்றுவிக்கப்பட்டவர்களின் முக்கியமானவர்கள் ஆசாரியர்களாவர். அவர்கள்,

1. இராமானுச ஆச்சாரியார் (உடையவர்) 2. வேதாந்த தேசிகர் 3. மணவாள மாமுனிகள் ஆவர்.

## 4-15_1 இராமானுச ஆசாரியார்

இவர் திருப்பெரும்புதூரில் பிறந்து வளர்ந்து கல்வி கற்றார். சமய நெறிகளில் இளமை காலத்திலேயே ஈடுபாடுகொண்டு வைணவ சமயத்தில் மதச் சம்பந்தமான பழக்க வழக்கங்கள் குன்றிய நிலைமையிலிருக்கும்போதும் புத்தமதத்தின் தாக்கம் அதிகமாக இருந்தபோதும் இராமானுசர் வைணவத்தின் வளர்ச்சிக்கு மாணவர்களைத் தன்னுடன் அழைத்துச் சென்று இந்தியா முழுவதும் சுற்றி வைணவச் சமயத்தை வளர்க்கப் பாடுபட்டார்.

பல வைணவத் திருக்கோயில்களைக் கட்டும்படி மன்னர் களிடம் வேண்டிக்கொண்டார். திருமறைக்கு உரை எழுதினார். அதனால் இவருக்கு உரையாசிரியர் என்ற பெயரும் உண்டு.

இத் திருக்கோயில் சந்நிதி மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. இத் திருக்கோயிலிலுள்ள மகா மண்டபத்தில் இறைவனுக்கு இடதுபுறம் அமைந்த சந்நிதியில் இராமானுசர் (உடையவர்) எழுந்தருளியுள்ளார். இவருக்குச் சித்திரைத் திங்களில் வரும் திருவோணக் கோளிற்கு முன் ஒன்பது நாட்களிலிருந்து உற்சவமும் சாற்றுமுறையும் தொடங்கி திருவோணக் கோள் முடிய பத்து நாட்கள் திருவிழா நடைபெறுகின்றது. இப் பத்து நாட்களிலும் இரண்டு வேளைகளிலும் பூசை நடத்திப் படையல் படைப்பர்.

இராமானுசர் நூற்றந்தாதி எனப்படும் திருவந்தாதியைப் பத்து நாட்களிலும் சாற்றுமுறையாக ஓதுவர்.

## 4-15-2 வேதாந்த தேசிகர்

வைணவத் திருக்கோயில் வழிபாடுகளில் இரண்டு நெறி முறைகள் தோன்றின. அவை 1. தென்கலை 2. வடகலை ஆகும். இவர் வடகலை வழிபாட்டிற்கு முதன்மையானவராக வும் தலைவராகவும் புகழ் பெற்று விளங்கினார். இவர் காஞ்சி யில் தோன்றித் திருவந்திபுரத்தில் திருமறைகள் கற்று அங்கிருந்து வைணவ வழிபாட்டின் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வந்தார்.

இத் திருக்கோயில் வழிபாட்டின்படி வடகலையின் நோக்கங்களைப் பின்பற்றி வழிபாடுகள் நடத்தப்பட்டு வருகின்றன. இத் திருக்கோயிலில் வைகாணச ஆகமமுறை

பூசை நடந்தாலும் இவ்வூரில் பெரும்பாலான வைணவர்கள் மிக பக்தியோடு இவருக்குத் தொன்றுதொட்டு சாற்றுமுறை பூசை, வழிபாடு, வைகாணச ஆசாரியர்களால் வழிபாடு செய்யப்பெறுகின்றது. வேதாந்த தேசிகருக்குப் புரட்டாசித் திங்களில் வரும் திருவோணக் கோளிற்கு ஒன்பது நாட்கள் முன் தொடங்கி அக்கோள் வரை பத்து நாட்கள் தேசிகர் சாற்றுமுறையெனும் சிறப்புத் திருவிழா நடைபெறுகின்றது

காலையில் மூலவருக்கும் உற்சவருக்கும் திருமஞ்சனமும் நடைபெறும். மாலையில் தேசிகர் சந்நிதியிலிருந்த தேசிகரைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து மாடவீதிவுலா, உற்சவம் நடைபெறும். வழக்கம்போல் எல்லா வழிபாடுகளையும் நடத்துவர். கடைசி நாள் மாலையில் இறைவனை ஒரு கேடயத்திலும், தேசிகரை மற்றொரு கேடயத்திலும் எழுந்தருளச் செய்து அவர்களுக்குச் சிறப்பான ஆடைகள், மலர்மாலைகள், அணிகலன்கள் முதலியவற்றை அணிவித்து மாடவீதிவுலாவாகச் சென்று திரும்பி தேசிகர் சந்நிதிக்கு எழுந்தருளச் செய்வர்.

அங்கு அன்றைய உற்சவத்தின் உபயதாரரான திருமலை மடப்பள்ளி நிலக்கிழார் கல்யாண அய்யங்கார் என்பவரின் மூலமாகவும் மற்றும் இவ்வூரிலுள்ள வைணவ சமூகத்தினராலும் சிறப்பாக தேசிகருக்குச் சாற்றுமுறை செய்யப்பெறுகின்றது.

சர்க்கரைப் பொங்கல், சுண்டல், புளியோதரை, தோசை முதலியவற்றைப் படையலாகப் படைப்பர். உற்சவருக்குப் போர்வை, பரிவட்டம், திருமாலினி மாலை அணிவித்து அர்ச்சகரால் நற்பலன் தரும் திருமந்திரங்கள் ஓதப்பெறும். புனித நீர், சடாரி முதலியவற்றை வைணவக் குழுவினருக்கு அளிக்கப்பெறும். பிரபந்தக் குழுவினர்களுக்குத் தெய்வப் படையல் தந்ததும் மெய்யன்பர்களுக்கு அளிப்பர். இறுதியாக பெருமாள், தேசிகர் உற்சவரை கோயிலுக்குள் எழுந்தருளச் செய்வர்.

## தேசிகர் சந்நிதியின் சிறப்பு

இத் திருக்கோயில் வடகலை வழிபாட்டின் வழிமுறையில் நடைபெறுவதால் தேசிகர் சந்நிதியைச் சிறப்பாக அமைத்து, பூசை, வழிபாடுகள் செய்து படையல்கள் படைப்பர். எல்லா உற்சவங்களிலும் உலா இராச கோபுரத்தையடைந்து இராச ஆரத்தி பெற்று நேராக வலப்புறம் அமைந்துள்ள தேசிகர் சந்நிதி

முன் நிறுத்தி இறைவனிடமிருந்து மலர்மாலை, சடாரி, குடை, சாமரம் தீவட்டி முதலிய வழிபாடுகளுடன் தேசிகருக்குச் சிறப்பு உபசாரம் தரப்பெறுகின்றது. இவ்விடைக்காலத்தில் வேறு யாருடைய ஆரத்தியையும் காட்டுவது கூடாது. மற்ற கோயில் களில் இராச ஆரத்தி ஆனவுடன் மெய்யன்பர்களின் ஆரத்தி இறைவனுக்குக் காட்டப்பெறுகிறது. ஆனால் இக்கோயிலில் மட்டும் தேசிகருக்கு ஆரத்தி காட்டியபின்தான் மெய்யன்பர் களின் ஆரத்தி பெருமாளுக்குக் காட்டப் பெறுவது மரபாக இருந்துவருகின்றது.

### 4-15-3 மணவாள மாமுனிகள்

இவரைத் தென்கலை வைணவ வழிபாட்டிற்குச் சிறப்பாகக் குறிப்பிடுவர். இருவரும் வைணவச் சமயத்தின் வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்களில் ஒருவராகத் திகழ்கிறார். இவர் சிக்கல்கிடாரம் எனும் ஊரில் மூலக்கோளில் பிறந்தார்.

மணவாளமாமுனிக்கு ஆவணித் திங்களில் வரும் மூலக் கோளன்று மாலையில் ஒருநாள் உற்சவம் நடைபெறும். இவர் திருவாய்மொழி நூற்றந்தாதியில் 11வது பாடலாக நேரிசை வெண்பாவைப் பாடியுள்ளார். இச் சாற்றுமுறைக்கு உபயதார ராக ஒய்வு பெற்ற ஆசிரியர் திரு. ஏ வி. திருவேங்கட ஆச்சாரியர் அவர்கள் விளங்குகிறார். இவருக்குச் சாற்றுமுறை முடிந்ததும், உபயதாரர் மரியாதையான பரிவட்டம், ஆழ்வார் அணிந்தமாலை, முதலியவற்றை திருவேங்கட ஆச்சாரிக்குத் தரப்படுகின்றது.

அன்று இறைவனுக்குப் புளியோதரைப் படையல் படைத்து முதலில் ஒதுவாருக்கு வழங்குவர். பின் மெய்யன்பர்களுக்கும் வழங்குவர். இத்திருக்கோயிலில் மணவாளமாமுனி மூலவர் மட்டுமே எழுந்தருளச் செய்யப்பட்டுள்ளது ஆகவே சாற்று முறை மட்டுமே நடத்தப்பெறுகின்றது.

# அடிக்குறிப்புகள்

1. க. காந்தி. தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் ப.51
2. மேலது ப. 52.
3. M. Arunachalam, Festivals of TamilNadu Introduction p. 9
4. மேலது ப. 9
5. கழகப் புலவர் குழுவினர் தொ. ஆ. கழகத் தமிழ் அகராதி, ப. 858.
6. மதுரைத் தமிழ்ப் பேரகராதி (இ. பா) ப. 610.
7. A. Chidambaranatha Chettiar (C. E.) English Tamil Dict.) p. 380.
8. The World Book Dictionary Vol-1 p. 788.
"Festivals means, A day or special time of rejoicing or feasting often in memory of same great happening.
9. The Grolier-Dictionary Vol-1 p. 442.
"An occassion for feasting or celebration especially, a day or time of religious significance that recurs at regular intervals.
10. தி. சு. அவனாசிலிங்கம் (ப.ஆ) தமிழ் கலைக்களஞ்சியம் தொ. 9. ப. 419.
11. Edwen. R. A. Seligman. Encyclopedia of the Social Sciences Vol-5 p, 816.
12. ச. கு. கணபதி அய்யர். தினமணி தீபாவளி சிறப்பிதழ் ப. 1. 21. 10. 87.
13. கலித்தொகை 83:14.
14. பரிபாடல் 11;78.
15. புறநானூறு பா. 22:1-6.
16. க. காந்தி மு. நூ. ப. 53.
17. திருக்குறள் பா. 18.
18. புறநானூறு பா. 212.
19. இறையனார் அகப்பொருள். 70.
20. புறநானூறு பா. 30.
21. திருமுருகாற்றுப்படை வரி. 220,

22. பரிபாடல் பா. 70.
23. அகநானூறு பா. 61.
24. புறநானூறு பா. 372.
25. மேலது பா. 9.
26. மேலது பா. 84.
27. குறுந்தொகை பா. 10.
28. மேலது பா. 41.
29. மேலது பா. 41.
30. மேலது பா. 125.
31. அகநானூறு பா. 115.
32. புறநானூறு பா. 212.
33. பட்டினப்பாலை வரி. 214-215.
34. சிறுபாணாற்றுப்படை வரி. 201.
35. புறநானூறு பா. 65.
36. மேலது பா. 34.
37. அ. மு. பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும். பா 382
38. ஆசிரியர். காமகோடி. ஆன்மீக திங்களிதழ் சனவரி-88 ப. 9.
39. கணபதி ஐயர், தீபாவளி தின சிறப்பிதழ் தினமணி. ப. 1 27-10-87. சென்னைப் பதிப்பு.
40. பி. ஸ்ரீ. பண்டிகை—விரதம் விழா முன்னுரை.
41. M. Arunachalam-Festivals of Tamil Nadu p. 41 The Fasting even if it to be one day or foregoing of one meal, has the Satutancy, effect of an internal toring up of the human system.
42. ப அருணாசலம். வைணவ சமயம். ப. 26.
43. புறநானூறு பா. 212.
44. நேர்க்காணல் பி. வெங்கடமுனிசெட்டி. நாள். 10-6-88
45. ஆண்டாள், நாச்சியார் திருமொழி. பா. 509.
46. நம்மாழ்வார், திருவாய்மொழி பிரபந்தம் பா. 3200.
47. மேலது பா. 2937.
48 மேலது பா. 2924.
49 மேலது பா. 3203.
50. மறைமலையடிகள் தமிழர் மதம் ப. 178.

51. அ. மு. பரமசிவானந்தம். தமிழ்நாட்டு விழாக்கள். ப 79-80
52. அகநானூறு பா. 161 கசுக.
53. ஆண்டாள் திருப்பாவை பா. 474.
54. தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளியெழுச்சி ப. 210.
55 அ மு. பரமசிவானந்தம். மு நூ ப. 84-85.
56. மேலது ப. 83.
57 நசன். ஆலயங்களும் ஆகமங்களும் (பின்-1) பக். 137-139.
58. மேலது ப. 159.
59. மேலது ப. 144.
60. அ. மு. பரமசிவானந்தம். மு.நூ. பக். 106-107
61. நசன் மு. நூ. ப. 140
62. மேலது ப. 140.
63. மேலது ப. 141.
64 மேலது ப. 141.
65. மேலது ப. 142.

# முடிவுரை

முதல் இயலில் திருவேங்கடத்திற்குரிய சிறப்புகளும் பல நாராயணத்திற்கும் உண்டு என்று நிறுவப்பெற்றுள்ளது. வனம்போல் சோலைகள் சூழ்ந்த இந்தப் பகுதியில் பத்மாவதியைக் கண்டு காதலித்து மணம் கொண்டமையால் இவ்விடம் நாராயண வனம் என்று பெயர் பெற்றதென்பது தெளிவு செய்யப்பெற்றுள்ளது. ஆகாசராசனின் வேள்வியின் காரணமாகக் கிடைத்த பத்மாவதித் தாயாரையும் அவரது திருமணத்தையும் புராண அடிப்படையில் இவ்வியல் எடுத்துரைக்கிறது. பல்வேறு வகையான நம்பிக்கைகளை விளக்கி இறை நம்பிக்கையின் இன்றியமையாமையை நிறுவுகிறது. நம்பிக்கைக்கும் திருவிழாவிற்கும் உள்ள தொடர்பினைத் தெளிவுபடுத்துகிறது.

நாராயணவனம் கல்யாண வெங்கடேசுவரர் திருக்கோயிலால்தான் நாராயணவனம் தனிச் சிறப்புப் பெற்றுள்ளது என்றாலும் அவ்வூரே கோயில்கள் பல குடி கொண்ட ஊர் என்பது எடுத்து விளக்கப்பெற்றுள்ளது. கோயில் அமைப்பிற்கும் மானுட உடலுறுப்புகளின் அமைப்பிற்கும் இடையே உள்ள பொருத்தம் வைகாநச ஆகமப்படி எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. இந்த ஆகமக்கருத்திற்கு ஏற்ப கல்யாண வெங்கடேசுவர சுவாமி கோபுர அமைப்பு, திருமேனிகளின் இருப்பு எவ்வாறு அமைந்துள்ளன என்பது தெளிவு செய்யப் பெற்றுள்ளன.

வெங்கடேசுவர சுவாமி திருக்கோயிலின் வழிபாடுகள் ஆறு அடிப்படைகளில் வகுத்துரைக்கப் பெற்றுள்ளது. இத்தகு வழிபாடுகளில் நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் பெற்றுள்ள சிறப்பான இடம் ஆங்காங்கே எடுத்துக்காட்டி உறுதி செய்யப் பட்டுள்ளது.

கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள், திருமலை திருக்கோயில் திருவிழாக்களோடு ஒத்த சிறப்போடு நிகழ்வது நிறுவப்பெற்றுள்ளது. ஆழ்வார், ஆச்சாரியார்கள் பற்றிய விழாக்கள் இங்குச் சிறப்போடு நிகழ்வது எடுத்துரைக்கப்பெற்றுள்ளது.

இவ்வாறு திருப்பதி திருமலை தேவத்தானத்தாரின் மேலான்மையின்கீழ் வாழ்வும், வளமும் பெற்றுவரும் பல திருக்கோயில்கள் உள்ளன. இவை பற்றித் தனித்தனியாகவோ முழுமையாகவோ ஆய்வதற்கு இவ்வாய்வேடு ஒரு முன்னோடியாக அமையும்.

## பிற்சேர்க்கை

### துணை நூற்பட்டியல்

அண்ணங்கர ஆச்சாரியார் — நாச்சியார் திருமொழி

அண்ணங்கர ஆச்சாரியார், உரை, 1977. அணில் அச்சகம், சென்னை-14.

அருணாசலம் ப. — வைணவ சமயம்

மு.ப. சூலை, பாரி புத்தகப் பண்ணை, சூலை 1982. 59. டி.பி' கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5.

இராகவ அய்யங்கார் — சீனிவாசக் கல்யாணம்

சித்திரக் கதை, அக்டோபர்-1974. திருமலை திருப்பதி தேவத்தான வெளியீடு, திருமலை திருப்பதி தேவத்தான அச்சகம், திருப்பதி-1.

இராதா இராமநாதன் — பத்மாவதி சீனிவாசக் கல்யாணம்

மு.ப. டிசம்பர், 1981 16, கோட கொம்மல தெரு, திருப்பதி.

இராமசாமி செ.ரெ — காஞ்சி புராணம்

செ.ரெ. இராமசாமி உரை, 1957. சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை-1.

இராமநாதபிள்ளை ப. — தேவாரம்

அடங்கல் முறை மு.ப. 1970. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

இராமநாதபிள்ளை ப. — தாயுமானவரடிகள் திருப்பாடல்கள்

ப. இராமநாதபிள்ளை உரை, அக்டோபர் 1966. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பிராட்வே, சென்னை-1.

இராமநாதபிள்ளை ப. — திருவாசகம்

பா. இராமநாதபிள்ளை, விளக்கவுரை அக்டோபர்-1963. சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் பிராட்வே, சென்னை-1

இராமநாதபிள்ளை. ப — பெரிய புராணம்

ப. இராமநாதபிள்ளை, விளக்கவுரை, 1970. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பிராட்வே. சென்னை-1.

இளம்பூரணர் — தொல்காப்பியம் சொல்லதிகாரம்

இளம்பூரணர் உரை, இரண்டாம் பதிப்பு 1955. சைவ சித்தாந்த நூறபதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

இளம்பூரணர் — தொல்காப்பியம் (பொருளதிகாரம்)

இளம்பூரணர் உரை, மூன்றாம் பதிப்பு-1969. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

இளவழகனார் — நாலடியார்

இளவழகனார் உரை, 1963. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

கணபதி அய்யர் ச.கு. — நோன்பு-விரதம்

தினமணி, நாள். 21.10.1987. தீபாவளி தின சிறப்பிதழ், சென்னை பதிப்பு.

கலியாண சுந்தரனார் திரு.வி.க. — வாழ்க்கை வழி

நான்காம் பதிப்பு-1969. புனித நிலையம், 18. தாமோதர் தெரு சென்னை-6

காஞ்சி காமகோடி — நோன்பு

காமகோடி, (ஆன்மீக மாத இதழ்.) சனவரி 1988. 18. புகைவண்டி நிலைய சாலை, மேற்கு மாம்பலம், சென்னை-33.

காசிவிசுவநாதன் செட்டியார் — அகநானூறு (களற்றியானை நிரை)

நா.மு. வேங்கடசாமி நாட்டார் உரை, மு.ப. 1961. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

காசி விசுவநாதன் செட்டியார் — அகநானூறு

மணிமிடைப்பவளம், (நித்திலக்கோவை) நா.மு. வேங்கடசாமி நாட்டார் உரை. மு.ப. 1961. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

காந்தி க. — தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்

மு.ப. டிசம்பர் 1980. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அடையார், சென்னை-20.

காமாட்சிநாதன் — திருவருட்பா

புலவர் மா.க. காமாட்சிநாதன் உரை மு.ப. சனவரி 1974. தணிகைப் பதிப்பகம், 203, தம்புச் செட்டித்தெரு, சென்னை-1

குழந்தைவேல் முதலியார் — உலகநீதி

மு.ப. 1944. தெய்வமகள் விலாச அச்சகம், 24, தாண்டவராயப் பிள்ளைத் தெரு, சென்னை-1.

குழந்தைவேல் முதலியார் — கொன்றை வேந்தன்

மு.ப. 1944. தெய்வமகள் விலாச அச்சம், 24, தாண்டவராயப் பிள்ளைத் தெரு, சென்னை-1.

கைலாசபதி. க. — பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்
மு.ப. 1966. பாரி நிலையம், பிராட்வே, சென்னை-1.

கோபால கிருஷ்ணமாச்சாரியார் வை.மு. — கம்ப இராமாயணம்
வை.மு.கோ. உரை, மறுபதிப்பு-1961. வை.மு.கோ. கம்பெனி, 17. தெளிசிங்கபெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5

கோபாலகிருஷ்ணமாச்சாரியார் வை.மு. — நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்
வை. மு. கோ. உரை, டிசம்பர்-1962, கபீர் அச்சகம், திருவல்லிக்கேணி, சென்னை-5.

சாமிநாதய்யர் உ.வே. — ஐங்குறுநூறு (மூலமும் பழைய உரையும்)
உ.வே.சா. உரை, ஐந்தாம் பதிப்பு-1957. உ.வே.சா. பதிப்பு, உ.வே.சா. நூல் நிலையம், சென்னை-41

சாமிநாதய்யர் உ. வே. — புறப்பொருள் வெண்பாமாலை
உ. வே. சா உரை, 1966, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

சாமிநாதய்யர் .உ. வே. — சிலப்பதிகாரம்
அடியார்க்கு நல்லார் உரை, எட்டாம் பதிப்பு-1968. உ.வே.சா. பதிப்பு, உ.வே.சா. நூல் நிலையம், சென்னை-41.

சாமிநாதய்யர் உ. வே. — திருக்கோவையார்
உ.வே.சா. உரை, மு. ப. 1970. மாணிக்கவாசக வெளியீடு, சென்னை-1.

சாமிநாதய்யர் உ. வே. — பட்டினப்பாலை
உ. வே. சா. உரை, 1968. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

சாமிநாதய்யர் உ. வே. — பரிபாடல் (மூலமும் உரையும்)
பரிமேலழகர் உரை, மூன். பதி. 1968. உ. வே. சா. பதிப்பு, உ.வே.சா. நூல் நிலையம், சென்னை-41.

சித்பவானந்தர் — கடவுளின் வடிவங்கள்
1975. ஸ்ரீ இராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த் துறை.

சீனிவாசன் இரா. — சக்தி வழிபாடு
மு. ப. 1975. ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், கோர்ட் ரோடு, நாகர்கோயில்.

சுந்தரம்பிள்ளை, பேராசிரியர் — மதமும் தத்துவமும்
1954. சுப்பிரமணிய சாஸ்திரி அச்சகம், சென்னை-1.

சுப்புரெட்டியார் ந. — சைவ சமய விளக்கு

*மு. ப. செப்டம்பர், 1984. பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை-1.*

சுப்புரெட்டியார் ந. — திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்

*மு. ப. ஜூலை, 1976. பாரி நிலையம், 59, பிரகாசம் சாலை சென்னை-1.*

செந்துறைமுத்து புலவர் — திருவண்ணாமலை

*மு. ப. அக்டோபர், 1983. மாணிக்கவாசகம் பதிப்பகம், சிதம்பரம்.*

சேதுப்பிள்ளை ரா. பி. — ஊரும் பேரும்

*மூன்றாம் பதிப்பு, 1956. பழனியப்பா பிரதர்ஸ், சேப்பாக்கம், சென்னை-5.*

சேஷாச்சாரியார் வி. டி. — தேவாலயங்களும் மேதைகளும்

*மு. ப. 1985. திருமலை திருப்பதி தேவத்தான வெளியீடு, திருமலை திருப்பதி தேவத்தான அச்சகம், திருப்பதி-1.*

சோமசுந்தரனார் பொ. வே. — குறுந்தொகை

*பெருமழைப்புலவர் உரை, மறு. பதிப்பு. 1961 சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.*

சோமசுந்தரனார் பொ. வே. — சிறுபாணாற்றுப்படை

*பெருமாள் புலவர் உரை, மறு. பதிப்பு. 1967. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1.*

சோமசுந்தரனார் பொ. வே. — திருமுருகாற்றுப்படை

*பெருமழைப்புலவர் உரை, ஏழாம் பதிப்பு-1974. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.*

சோமசுந்தரம்பிள்ளை ஜெ. எம். — தமிழர் நாகரிகம்

*திருக்கோயில் அமைப்பு, சனவரி, 1968. செல்விப் பதிப்பகம், காரைக்குடி.*

சோமலெ — தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்

*1975. நேஷனல் புக் டிரஸ்ட் ஆப் இந்தியா, புதுதில்லி.*

திருமூலர் — திருமந்திரம்

*இரண்டாம் பதிப்பு, 1983. பழநியப்பா பிரதர்ஸ் வெளியீடு. சென்னை.*

துரைசாமி பிள்ளை அவ்வை — நற்றிணை

*அவ்வை. துரைசாமிப்பிள்ளை (உரை), மு ப. 1968. அருணா பதிப்பகம். தியாகராயநகர், சென்னை-17.*

தேவநேயன் ஞா. — பண்டைத்தமிழர் நாகரீகமும் பண்பாடும்

மு. ப. 1966. நேசமணி பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை-5.

தொண்டரடிப்பொடியாழ்வார் — நித்யானு ஸந்தான கிரமம்

1955. ஸ்ரீ மாலோல பதிப்பகம், சன்னதித் தெரு, திருவள்ளூர்.

நக்கீரர் — இறையனார் அகப்பொருள்

நக்கீரர் உரை, 1969. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1.

நசன் — ஆலயங்களும் ஆகமங்களும்

மு. ப. ஜூலை, 1983. பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மைலாப்பூர். சென்னை-4.

நசன் — ஏழுமலை ஆண்டவன்

மு. ப. ஏப்ரல், 1977. பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மைலாப்பூர், சென்னை-4.

நடராசன் அ. — இந்து சமயக் கையேடு

1979. திருமலை திருப்பதி தேவத்தான வெளியீடு, திருமலை திருப்பதி தேவத்தான அச்சகம், திருப்பதி-1.

நடராசன் எஸ். — தமிழர் பண்டிகைகளும் பண்பாடும்

மு. ப. சனவரி, 1976. பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மைலாப்பூர், சென்னை-4.

பஞ்சநாத பிள்ளை ஆர். — திருமலைக் கோயில் வரலாறு

மு.ப. 1942. சாது அச்சுக்கூட வெளியீடு, மைலாப்பூர், சென்னை-4.

பட்டாபிராமன் சொ. — விஷ்ணு தல மஞ்சரி

மு.ப. அக்டோபர் 1915. சாது அச்சுக் கூடம், மைலாப்பூர், சென்னை-4.

பரமசிவானந்தம் அ மு — சமுதாயமும் பண்பாடும்

1970. தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை-30.

பரமசிவானந்தம் அ.மு. — தமிழ்நாட்டு விழாக்கள்

மு.ப. ஏப்ரல் 1956. தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை 30-.

பாரதியார் — பாரதியார் கவிதைகள்

மு.ப. அக்டோபர் 1976. பூம்புகார் பிரசுரம், 63-பிராட்வே, சென்னை-1.

பாஸ்கரத் தொண்டைமான் (தொ மு) — தமிழ்க்கோயில்கள் தமிழர் பண்பாடு,

மு.ப. 1961. எஸ்.ஆர். சுப்பிரமணியபிள்ளை அச்சகம், திருநெல்வேலி-1.

பி ஸ்ரீ. — விழா விரதம் பண்டிகை

மு ப ஏப்ரல் 1960. அமுத நிலையம். தேனாம்பேட்டை, சென்னை-18

பி.ஸ்ரீ. — திருப்பாவை. (பி.ஸ்ரீ. விளக்கவுரை)

தி. லிட்டில் பிளவர் கம்பெனி. மு.ப. 1941. அரங்கநாதத்தெரு, தியாகராசநகர், சென்னை-17.

புலியூர்கேசிகன் — திருக்குறள்

பரிமேலழகர் உரை. மு.ப. அக்டோபர், 1976. பூம்புகார் பிரசுரம் 63 பிராட்வே சென்னை-1.

மணவாளமுனி — திருவாய்மொழி நூற்றந்தாதி,

கபீர் அச்சகம், டிசம்பர். 1962. திருவல்லிக்கேணி, சென்னை-5

மறைமலையடிகள் — தமிழர் மதம்

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், மு.ப. 1958. பிராட்வே, சென்னை-1.

மாருதிதாசன் — இந்து சமயக் கருத்துக்கள்

நர்மதா பதிப்பகம், மு.ப. டிசம்பர் 1981. 1. வியாசர் ராவ் தெரு. சென்னை-17.

மிழலைத் தொண்டன் — வாழ்வும் வழிபாடும்

ஹேமா பதிப்பகம், மு.ப. சூலை 1983. 8. துக்காராம் இரண்டாம் தெரு, தியாகராச நகர், சென்னை-17.

மீனாட்சி சுந்தரனார் தெ. பொ. — தமிழும் பிற பண்பாடும்

நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், மு.ப. மே. 1973. நலலதம்பிச் செட்டித் தெரு, சென்னை-2.

முருகவேள் ந. ரா. — திருக்கோயில்

திங்களிதழ். சனவரி 1977. மாலை-19. மணி-4.

திருக்கோயில்

திங்களிதழ் ஆகஸ்டு 1977. மாலை-19. மணி-11.

திருக்கோயில்

திங்களிதழ் நவம்பர் 1978. மாலை-21. மணி-2.

முத்துப்பிள்ளை ப. — வைணவத் தலங்கள்
பைலட் பதிப்பகம், மு.ப. செப்டம்பர் 1976. 32, ஐயப்பசெட்டி தெரு, மண்ணடி, சென்னை-1.

வரதராசன் மு. — நல்வாழ்வு
பாரி நிலையம், மு.ப. சூன். 1973. 88. பிரகாசம் சாலை. சென்னை-108.

வீரராகவ அய்யங்கார் — திருவேங்கடத் தலப்புராணம்
திருமலை திருப்பதி தேவத்தான வெளியீடு. 1977. திருமலை திருப்பதி தேவத்தான அச்சகம், திருப்பதி-1

வேதாந்த தேசிகர் — தேசிகர் பிரபந்தம்
தி. லிட்டில் பிளவர் கம்பெனி, மு.ப. 1941. அரங்கநாதன் தெரு, தியாகராச நகர், சென்னை-17.

## அகராதிகள்—கலைக்களஞ்சியம்—மலர்கள்

கந்தையா பிள்ளை, ந சி. (தொ.ஆ) — செந்தமிழ் அகராதி
மு.ப. 1962. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1

கதிரைவேற்பிள்ளை நா. (தொ.ஆ) — தமிழ் மொழி பேரகராதி
ஆசியா. எடிகேஷனல் சர்வீஸ் மறு பதிப்பு 1981. சி. 21/15. எஸ்.டி.ஏ. புதுதில்லி-16.

கழகப் புலவர் குழுவினர் (தொ.ஆ) — கழகத் தமிழ் அகராதி
இரண். ப. 1969. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1.

சண்முகப்பிள்ளை அ. (கட்.ஆ) — இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை
தொகுதி-3 1988. இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் அண்ணாமலை நகர்.

சோமலெ (பதி.ஆ) — இராமநாதசுவாமி திருக்கோயில் மகா கும்பாபிஷேக சிறப்புமலர்
மு.ப. பிப்ரவரி 1975. எண் : 9 குட்ஷெட் தெரு, மதுரை-1

பிங்கலமுனிவர் பிங்கல நிகண்டு
மு.ப. 1968. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை-1

முருகவேள் நா.ரா. — தமிழகத் திருக்கோயில்கள் (கட்டுரை)
ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு மலர், 1981. மதுரை-1 ஷே அண்டு கம்பெனி, சென்னை-1.

ஷேத்திரக்ஞர் பெ. — கலைக்களஞ்சியம்
தொகுதி-9 1963. தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை-1.

# ENGLISH BOOKS

ARUNACHALAM M. — FESTIVALS OF TAMIL NADU
First Ed., 1980. Gandhi Vidyalayam, Thiruchitrambalam Tanjore Dist.

CHANDRASEKAR A. — CENSUS OF INDIA 1961
Volume II Part VII-B (8), Fairs & Festivals, Chittoor Dist. A. P.

CHANDRASEKAR A.—EPIGRAPHICAL REPORT OF MADRAS
1925. History & Culture About, TTD Temples vol. IV, Madras-1.

KAMESWARA RAO B. — SELECT VIJAYANAGARA TEMPLES OF ROYALASEEMA, 1977.
Tirumala Tirupathi Dev, Publications T.T.D. Press, Tirupathi.

KAMESWARA RAO M. — TEMPLES IN AND AROUND CHITTOOR 1975. T. T. D. Publications, T.T.D. Press. Tirupathi.

KRISHNASWAMY IYENGAR S. — A HISTORY OF TIRUPATHI
1977. T.T.D. Publications, T.T.D. Press, Tirupathi.

KRISHNASWAMY T. — HISTORY OF TIRUMALA
F. E. 1980. T. T. D. Publications, T. T.D.Press, Tir upathi'

KRISHNA REDDY — TEMPLES IN CHITTOOR DISTRICT
1977. T.T.D. Publications, T.T.D. Press, Tirupathi

KRISHNA REDDY — MADRAS EPIGRAPHICAL REPORT GOVT. OF MADRAS, 1912. Madras.

RAMESHAN N. — THE TIRUMALA TEMPLE
1981. T.T.D. Publications, T.T.D. Press, Tirupathi.

SUBRAMANIYAM S. V., VEERASWAMY. V. — CULTURAL HERITAGE OF TAMIL, 1976.
International Institute of Tamil Studies, Adiyar, Madras-20

SUBRAMANIYA SASTRI SADHU. — TIRUPATI SRI VENKATESWARA 1981. T. T. D. Publications, T.T.D. Press, Tirupati.

VARADHACHARI V. — AGAMAS AND SOUTH INDIAN VAISHNAVISM, F. E. Feb. 1982. M. Rangacharya Memorial Trust, Triplicane, Madras-5.

## Dictionaries and Encyclopedia

CHIDABARANADHA CHETTIAR A. (C.E.) — ENGLISH TAMIL DICTIONARY F. E. 1965. University of Madras, Madras-5.

WILLIAM MARRIS. — THE GROLIER INTERNATIONAL DICTIONARY, 1981. Vol. 1, Houghton-Mifflion Co. Banbury—U. S. A.

WINSLOW M. — TAMIL ENGLISH DICTIONARY
Reprint, 1987. Asian Educational Service, C-21/15. S. T. A. New Delhi-16.

THE WORLD BOOK DICTIONARY
1976. Vol. 1, Clearance I, Barnahart, Robert-K-Barnahart, Scott Foresman & Co., U. S. A.

## Encyclopedia

SILLS DAVID—INTERNATIONAL ENCYCLOPEDIA OF SOCIAL SCIENCES, Reprint 1972. Vol 1 & 2, Collier Mac Millan Publishers, London.

WILLIAM BENTON — ENCYCLOPEDIA BRITANCA-INC
1972. Vol. 23, William Bentom, Chicago.
TAMIL LEXICON
1936, Vol. VI, Part-III University of Madras, Madras-5.

ఆవంద ఆచ్చారియార్ — అత్తిగిరి మహాత్మ్యము
1917 — శ్రీ వెంకటేశ ప్రచురణ, 11, తూర్పు మాడవీధి, చిన్న కాంచీపురము.

గోపీకృష్ణ — మన ఆలయముల చరిత్ర
ఆగస్టు, 1980 — తిరుమల తిరుపతి దేవస్థాన ప్రచురణ, తిరుమల తిరుపతి దేవస్థాన ముద్రణాలయము, తిరుపతి.

మోహన్ జి.యన్. — ఆంధ్ర ప్రదేశ్ లోని ప్రసిద్ధ పుణ్యక్షేత్రాలు, ప్రధాన దేవాలయములు
1981 — శ్రీనివాస ముద్రణాలయము, మలయనూరు పోస్టు, వయా.కళ్యాణదుర్గ. అనంతపూరు జిల్లా.

రంగాచార్య: ప్రచురణ ఆచార్యులు — విమానార్చన కల్పము
1921 — వైకానస విద్యా నిలయము, ఈగవారిపాళయం.

రంగాచార్య. టి. — భగవత్ అర్చకా ప్రకరణము
1982 — శ్రీ వెంకటేశ్వరస్వామి దేవస్థాన ప్రచురణ, ద్వారకా తిరుమల పోస్టు, ఏలూరు తాలూకా.

రామమూర్తి శర్మ. ఆర్.: అనువాద ఆచార్యులు — శ్రీ వెంకటేశ మహాత్మ్యము
1982 — తిరుమల తిరుపతి దేవస్థాన ప్రచురణ, తిరుమల తిరుపతి దేవస్థాన ముద్రణాలయము, తిరుపతి.

శ్రీనివాసరంగాచార్య. టి.: ప్రచురణ ఆచార్యులు
1809 — శ్రీ వెంకటేశ్వర మహాత్మ్యం, చెన్నపురి వర్తమాన తరంగిణి, ముద్రణాలయము, చెన్నపురి.

పొత్తూరి వెంకటేశ్వర రావు: ఎడిటర్
శుక్రవారం 25-7-1988 — తిరుమల తిరుపతి స్పెషల్, ఆంధ్రప్రభ – దినపత్రిక, మదరాసు ప్రచురణ.

# வடமொழிச் சொற்களுக்குத் தமிழ் விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | அகண்டம் | : | இறைவனிடம் எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கும் பெரிய விளக்கு. |
| 2. | அபிஷேகம் | : | திரு முழுக்கு / திருமஞ்சனம். |
| 3. | அத்தியாபகர் | : | பிரபந்தம் ஓதுபவர். |
| 4. | அர்ச்சகர் | : | இறைவனுக்குப் பூசனை செய்பவர். |
| 5. | அர்ச்சனை | : | போற்றி. |
| 6. | அர்சியம் | : | இறைவனின் கைகளைக் கழுவி விடுதல் |
| 7. | அலங்காரம் | : | அழகு செய்தல் |
| 8. | ஆசமனம் | : | இறைவனின் வாயைக் கொப்பளித்தல் |
| 9. | ஆலவட்டம் | : | வட்டவடிவமாக மயிலின் இறகாலோ, வெட்டிவேரினாலோ சேர்த்து பின்னப் பட்ட பிடியுள்ள விசிறியாகும். |
| 10. | ஆவஹானம் | : | உருவேற்றுதல் |
| 11. | ஆஸ்தானம் | : | உற்சவரை திருவீதிஉலா இல்லாமல் கருவறைக்கு வெளியே திருச்சுற்றில், ஊர்தியிலோ, கேடயத்திலோ வைத்து வழிபடுதலாகும். |
| 12. | உத்தரணி | : | புனிதநீர் தர பயன்படுத்தும் சிறிய கரண்டி. |
| 13. | உற்சவம் | : | சிறுந்திருவிழா |
| 14. | உற்சவர் | : | உலாத்திருமேனி |
| 15. | ஏகாந்தசேவை | : | இறைவனுக்குத் தனிமையில் நடைபெறும் வழிபாடு |
| 16. | ஒட்டியாணம் | : | பெண்கள் இடுப்பில் அணியும் அணிகலன் |
| 17. | ஒடமும் லாலியும் | : | தாலாட்டுப்பாடல் வகைகளில் ஒன்று |
| 18. | கங்கணம் | : | காப்புக் கட்டுதல் |
| 19. | கங்காளம் | : | பொன் அல்லது நூலான காப்பு |
| 20. | கிரீடம் | : | முடி |
| 21. | குராளம் | : | மூலவரின்மேல் புழுப்பூச்சிகள், கரப்பான் கள், ஒட்டடைகள் ஆகியவை விழாமல் இருக்க மேலே கட்டப்பட்ட ஒருவகை துணியாகும். |
| 22. | கொலு | : | இறைவன் சிம்மாசனத்தில் வீற்றிருப்பது |
| 23. | சகஸ்ரநாம அர்ச்சனை | : | ஆயிரத்தெட்டுப்போற்றி |
| 24. | சங்கல்பம் | : | ஒரு பணியைத் தொடங்குவதற்கு முன்பு அப்பணி வெற்றிகரமாக நடைபெற |

| | | | |
|---|---|---|---|
| | | | கோள், நாள், பெயர் முதலியவற்றின் வழியாக இறைவன் மீது வேண்டுதல் செய்வர். |
| 25. | சடாரி | : | இறைவனின் திருப்பாதம் பொறித்து கோபுரம் வடிவைக் கொண்டு அமைந்திருக்கும். |
| 26. | சடாரி | : | திருப்பாதம்/ |
| 27. | சந்நிதி | : | சிற்றாலயம் |
| 28. | சடோபச்சாரம் | : | இறைவனுக்குச் செய்யப்பெறும் ஆறு வகையான வழிபாடாகும். |
| 29. | சாமரம் | : | கவரிமானின் முடியால் செய்யப்பெற்ற வட்டவடிவமான பிடியமைந்ததாகும். |
| 30. | சாற்றுமுறை | : | திராவிட திருமறை ஓதுதல் |
| 31. | சிறிய திருவடி | : | அனுமன் |
| 32. | சுப்ரபாதம் | : | திருப்பள்ளியெழுச்சி |
| 33. | சுத்தான்னம் | : | வெறுஞ்சோறு |
| 34. | சுவாமி | : | தலைவன் (இறைவன்) |
| 35. | சூக்தம் | : | பிரார்த்தனைச் செய்யுள் ஸ்ரீதுதிப்பாடல் |
| 36. | சூரத்தேங்காய் | : | சிதறுத்தேங்காய் |
| 37. | தரிசனம் | : | இறைவனை வழிபாட்டு செய்தல் |
| 38. | தத்தியோதனம் | : | தயிர்ச்சோறு |
| 39. | திதி | : | ஓரை |
| 40. | திருச்சனம் | : | நாதசர வடிவை போன்ற குழல் |
| 41. | திரிவிதகிரியை | : | நித்தியம், நைமித்திகம், காமிகம் |
| 42. | தீபங்கள் | : | விளக்குகள் |
| 43. | தீர்த்தவாரி | : | திருநீராட்டு விழா |
| 44. | தீர்த்தம் | : | புனிதநீர் |
| 45. | துவார பாலகர்கள் | : | வாயிற் காவலர்கள் |
| 46. | துவார பாலிகைகள் | : | வாயிற் காவற் மகளிர் |
| 47. | தோமாலை சேவை | : | இறைவனுக்குத் திருமுழுக்கு நடைபெற்றதும் ஆடை அணிகலன்கள், மலர் ஆகியவற்றை அணிவித்தலாகும். |
| 48. | நிர்மால்யம் | : | இறைவனுக்கு அணிவிக்கப்பெற்ற மலர், சந்தனம், மஞ்சள் ஆகியவற்றைப் பூசை முடிந்தவுடனோ பூசையின் போதோ அகற்றி விடுவர். இந்நிகழ்ச்சிக்கு நிர்மால்யம் எனப்பெயர். |

49. நைவேத்தியம் : இறைவனுக்குப் படைக்கும் படையல்

50. பஞ்சாங்க ஸ்ரவணம் : அன்றைய தினத்தின் நாள், கோள், ஓரை, கர்ணம், யோகம் ஆகியவற்றைப்படித்து உலக நன்மைக்காக இறைவனிடம் ஆசிப் பெறுதல்.

51. பணியாரம் : இனிப்பு வகை

52. பரிமளம் : சந்தனக்குழைவு (குங்குமப்பூ. சந்தனம், பசசைக்கற்பூரம, மஞ்சள் கலந்த கலவை)

53. பலி சாய்த்தல் : பலி மூர்த்திகளுக்குத் திருவமுது படைத்தல்

54. பாத்யம் : இறைவனுக்குக் கால்களைக் கழுவிவிடுதல்

55. பிரசாதம் : தெய்வப்படையல்

56. பிரிதிஸ்டை : தோற்றுவித்தல் / அமைத்தல்

57. பெரிய திருவடி : கருடாழ்வார்

58. போட்டு நாச்சியார் : மடப்பள்ளி தாயார்

59. பௌர்ணமி : முழுமதிநாள்

60. மந்திரபுஷ்பம் : பலவகை மந்திரத்தாலான, செய்யுளா ளான கோர்வை. நான்கு திருமறைகள், உபநிஷத்துக்கள். பகவத்கீதை, இராமா யணம். மகாபாரதம், பாகவதம், வைகாணச ஆகமம் அந்த கோயிலின் புராணச் செய்யுட்கள், திராவிடமறை ஆகியவற்றால் இறைவனைத் துதி செய் வதாகும்.

61. மாத்ராதானம் : கொலு நடைபெறும்போது அர்ச்சருக்குத் தரும் அரிசி

62. மைகாப்பு : உலர்ந்த மாவிலையைக் கொளுத்திய சாம்பற் பொடி

63. வட்டில் : புனிதநீர் உள்ள வெள்ளிக்கிண்ணம்

64. வாகனம் : இறைவன் ஊர்ந்து செல்லும் ஊர்தி

65. ஸ்நானம் : நீராட்டுதல்

66. ஸ்பநனசீனிவாச மூர்த்தி : திருமுழுக்கின்போது பூசை செய்யும் மூர்த்தி

67. ஸ்நபன திருமஞ்சனம் : இறைவனுக்கு மந்திரத்தின் வழியாகத் திருமுழுக்குச் செய்தல்

68. ஹக்கு : பங்குரிமை

69. சுதந்திரம் : சுதந்திர உரிமை

# வாகன தத்துவம்

## திருக்கோயில் - திருவிழாக்கள்

வாகன தத்துவத்தைப் பற்றி நூலன் கூறும் கருத்து "உருவ வழிபாடுமுறை நாடெங்கும் பிரிசித்தமாயுள்ளது. பாமரர்களுக்கு அது ஏற்றமுறை என்ற காரணத்தால் ஞானிகளும், வேத சாஸ்திர விற்பன்னர்களும் புராணகர்த்தாக்களும் அதில் விஷேஷ அக்கறைக் காட்டி வசீகரமான வழிமுறைகளை வகுத்துள்ளார்கள்.

இவ்வித வழிமுறைகளில் தெய்வங்களுக்கும் மற்றுமுள்ள ஆவரண தேவதைகளுக்கும் தனித்தனியே வாகனங்களை அமைத்துக் கொடுத்திருப்பது நம் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் தன்மை பெற்றுள்ளது.

**விருஷ வாகனங்கள் :-** விருத்திக்கிரம சிருஷ்டிக்கோலம். கிளைகளும், இலைகளும் தத்துவங்கள் இறைவன்-வேர்.

**சூரியன் சந்திரன் :-** விருத்திக்கிரம ஸ்திதிக்கோலம்.

**அதிகாரநந்தி, பூதம், புருஷமிருகம் :-** விருத்திக் கிரம சம்ஹாரக் கோலம்

**நாகம் :-** மறைத்தல் தொழில். படத்தையும் மாணிக்கத்தையும் பாம்பு மறைத்து வைக்கும்.

**விருஷபம் :-** ஆன்மா, வெள்ளைநிறம், தூய்மையைக் காட்டும், சமம், விசாரம், சந்தோஷம், சாது சங்கம், நான்கு தர்மங்கள், கால்கள் அனுகிரகக் கோலம்.

**யானை :-** வயக்கிரம சிருஷ்டிக்கோலம் (ஒடுங்குமுறை) உலகப் பொருள்கள், அனைத்தும் ஒடுங்கி ஓரே பிண்டமாக யானையில் உடம்புபோல ஒடுங்குவதாகும். அதிலிருந்து திரும்ப தோன்றுவது வயத்தின் சிருஷ்டி தொடங்குவதைக் குறிக்கும். யானையின் பாதங்கள் உற்பவ ஜடத்துவம் சுவாசு சூஷ்மம், வாசி ஜீவத்வம், பிராண யாமம் இவைகளைக் குறிக்கிறது. இவை யானை போல ஆத்ம ஞானத்தில் தோன்றி துதிக்கையை யொத்த சுஷமனையில் நிற்கும்.

**இராவணன் :-** ஆவண மலம் முதிர்ந்த ஜீவாத்மா அவனுக்கு அருளியது காப்பாற்றுதலைக் குறிக்கும்.

**குதிரை :-** சம்ஹாரக்கோலம், தர்ம, அர்த்த, காம, மோக்ஷம், கால்கள், சிரியை, ஞானம், காதுகள், பரஞானம், அபரஞானம், கண்கள், விதி, முகம், வால், ஆகமங்கள், ஆபரணங்கள், மந்திரங்கள், கடிவாளம், சேணம் பிரணவம், உபநிஷத்து, வேதக்குதிரை.

శ్రీరస్తు శుభమస్తు అవిఘ్నమస్తు

స్వస్తిశ్రీ విజయ మాభ్యుదయ శాలివాహన శక వర్షంబుల్ 8వ మాసం 1685 అగు నేటి ఖరనామ సంవత్సరము కార్తీక బహుళ పంచమి బుధవారం పుష్యమి నక్షత్రం బ్రహ్మనామ యోగం తైతుల కరణం ఈ శుభ దినమునందు శ్రీమత్ అఖిలాండ కోటి బ్రహ్మాండ నాయకి అయిన శ్రీ పద్మవళ్ళి నాంచారమ్మ వారికి శ్రీమన్ మహా మండలేశ్వర కదారి సాళ్వమాక రాజా కావేరి రాజావారి ధర్మపత్ని అయిన శ్రీమన్ మహా మండలేశ్వర బొప్పరాజా వారలు నరసింహరాజా వారి పుత్రి అయిన రాజశ్రీ తిరుమలకొండ రత్నగర్భ సూక్తి మక్తామణమైన రాజశ్రీ గంగాంబగారు చేయించిన శాశ్వత విమాన జీర్ణోద్ధారణ ధర్మము.

## தமிழில் இதன் பொருள் வருமாறு

திருவருள் நல்லருள் நன்மையருள்

*நன்மையான வெற்றிவாகை சூடிய சாளிவாகன நூற்றாண்டில் சக ஆண்டு 8ம் மாதம் 1685 ஆன இன்று கர ஆண்டு கார்த்திகைத் திங்கள் முழுமதி நாள் பஞ்சமி ஓரை புதனன்று பூசக்கோளில் பிரம்மநாமயோகத்தில் தைத்துவ கரணம் அன்று ஸ்ரீமத் அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகி ஆன ஸ்ரீ பத்மவள்ளி நாச்சியார் அவர்களுக்கு, ஸ்ரீமன் மகாமண்டலேசுவர கத்தி சாள்வ மகாராசர் மகன் காவேரி அரசர் அவர்களின் தர்ம பத்தினி இல்லத்தாள ஆன ஸ்ரீமான் மகா மண்டலேசுவர பொப்ப ராசா அவர்களின் மகன் நரசிம்மாராசா அவர்களின் மகளான ராஜஸ்ரீ திருமலை கொண்ட (மலை) ரத்னகர்ப சூக்தி முக்தாமணியான ராஜஸ்ரீ கங்கமாம்பா அவர்களால் செய்யப்பெற்ற நிரந்தரமான விமான திருப்பணி (கருவறை கோபுரத்தின் திருப்பணி) தர்மம் செய்யப்பட்டது.*

## வேண்டுதலும், வேண்டுதல் நிறைவேற்றியவர்களின் பட்டியலும்

| வரிசை எண் | பெயரும் முகவரியும் | வேண்டுதலின் வகை | வேண்டுதலின் பலன் | கோயிலில் வேண்டுதலை நிறைவேற்றியது |
|---|---|---|---|---|
| 1. | எ. ஸ்ரீதர், தெற்கு மாடத் தெரு, நாராயணவனம் | தேர்வில் வெற்றி பெற இறைவனை வேண்டுதல். | வெற்றி பெறுதல். | இறைவனுக்கு திருமுழுக்குச் செய்தார். |
| 2. | எஸ். கிருட்டினசாமி அய்யர், 15/1, அஞ்சலகக் குடியிருப்பு மேற்கு மாம்பலம், சென்னை-33. | 30 வயது கடந்த மகளுக்குத் திருமணம் நடைபெறத் தாயாரை வேண்டுதல். | வேண்டுதல் செய்த 15 நாட்களில் திருமணம் நடந்ததாகக் கூறப்படுகிறது. | இறைவனுக்குக் கல்யாண உற்சவம் செய்யப்பெறுகிறது. |
| 3. | பத்மா ராசேந்திரன் என். 11, சீலார், சென்னை-7ɔ. | உடல் நலம் பெற வேண்டுதல், மற்றும் தன் மகளுக்குத் திருமணம் நடைபெற ஏற்பட்ட தடங்கலைப் போக்க வேண்டுதல். | உடல் நலம் அடைதல், மகளுக்குத் திருமணம் நடைபெற்றது. | இறைவனுக்குப் போற்றி செய்து திருமுழுக்கு நடத்துதல். |
| 4. | டி. கண்ணன், சன்னிதித் தெரு, காஞ்சிபுரம். | தன் சித்தப்பா மகளுக்குத் திருமணம் நடைபெற தாயாரிடம் வேண்டுதல். | வேண்டுதல் நிறைவேறி திருமணம் நடைபெறுகிறது. | பெருமாளுக்கும் தாயாருக்கும் மண உற்சவம் செய்தல். |
| 5. | டாக்டர் ஆர்.சத்தியநாராயணன் நகரம் சாலை, புத்தூர். | தன் மகளின் திருமணம் நடைபெற வேண்டுதல். | மகளின் திருமணம் நடைபெறுகிறது. | கல்யாண உற்சவம் செய்கிறார். |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. | ஆர். நரசிம்மராவ், வழக்குரைஞர், புத்தூர். | தன் மகன் வழக்குரைஞராக வேண்டுதல். | வழக்குரைஞரானார் | திருமுழுக்கு போற்றிகள் செய்தனர். |
| 7. | எ இலக்குமணசாமிமுதலியார், எ இராமசாமி முதலியார், முன்னாள் துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம், | இக்கோயிலுக்குப் பல முறை வந்து தன் குடும்பம் வளம்பெற வேண்டினர். | வாழ்வும் வளமும் பெற்றனர் | வெள்ளியிலான ஸ்படிகம் செய்து தந்து திருமுழுக்குச் செய்தனர். |
| 8. | வேமல. வேணுகோபால், தீர்த்த கட்டத் தெரு. திருப்பதி. | தன் மகள் திருமணம் தாமதம் அடைந்து வந்தது. உடனே நடைபெற வேண்தல் செய்தார். | திருமணம் நடந்தேறியது, | கல்யாண உற்சவம் செய்தார். |
| 9. | எ. இரமண செட்டி டி.கே. தெரு, திருப்பதி. | குழந்தைகள் நலமாக இருக்க வேண்டுதல். | நலமாக உள்ளனர். | உற்சவம் திருமுழுக்குச் செய்தனர். |
| 10 | எம். கே. பொன்னுசாமி, 45, நிசானி கேம்ப், துங்கையணை. | ஆசிரியர் பணி கிடைக்கவும், பல பட்டங்கள் பெறவும், பதவி உயர்வு கிடைக்கவும் வேண்டினர். | தன் வேண்டுதல் அனைத்தும் நிறைவேறியதாகக் கூறுகிறார். | உற்சவம், திருமுழுக்குச் செய்தார். |
| 11. | பீ. பிரபாகர், பாரத மாநில வங்கி புத்தூர். | பணி உயர்வு கிடைக்க வேண்டுதல் செய்தார். | பணி உயர்வு கிடைத்தது. | திருமுழுக்கும், உற்சவமும் செய்தார். |
| 12. | எம். கே. தயாளன், பாரத மாநில வங்கி, ஸ்ரீராமாபுரம், பெங்களூர் | பணி கிடைக்கவும், பணி உயர்வு கிடைக்கவும் வேண்டுதல். | வேண்டுதல் நிறைவேறுகிறது. | கல்யாண உற்சவம் செய்தார். |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | பி:எல், நரசிம்மம், ஓய்வு பெற்ற ஆசிரியர், நாராயணவனம். | தன் மகளுக்குத் திருமணம் நடைபெற இறைவனை வேண்டுதல். | வேண்டுதல் நிறை வேறுகிறது. | தாயாருக்குத் திரு முழுக்குச் செய்தல். |
| 14. | யாகப்பச் செட்டி நைனியப்ப நாயக்கர் தெரு, மைலாப்பூர், சென்னை-4. | பத்தி வியாபாரம் சிறப் பாக நடைபெற பெரு மாளை வேண்டுதல். | சிறப்பாக நடை பெற்றுவருகிறது. | இறைவனுக்குப் புத் தாடைகள் தந்து திருமுழுக்குச் செய் தார். |
| 15. | எ.ஆர். தாமோதரம், தோட்டப்பாதை, கீழ்ப்பாக்கம், சென்னை-10. | மகனுக்குத் திருமணம் நடைபெற தாயாரை வேண்டுதல் | நடைபெற்றது. | அம்மையாருக்குபுத் தாடை அணிவித் தார். |
| 16. | அர்ச்சகம். இரங்கம்மாள், தெற்கு மாட வீதி, நாராயணவனம். | பிள்ளைப்பேறு அடைய இறைவனை வேண்டுதல். | மகன் பிறந்தான். | சிறிய தேசிகர் பல்லக்குஅன்பளிப்பு தந்தார். |
| 17. | எஸ்.வி. வரதாச்சாரி, மஞ்சள் குங்குமம் கடை, ஆதியப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1. | தன் குடும்பம் வளமாக வும், நலமாகவும் இருக்க நாராயணனை வேண்டுதல். | வளமாக உள்ளனர். | ஆண்டுதோறும் யானைவாகன உலா உற்சவத்தை நடத்தி வருகிறார். |
| 18. | கே.வி. பெருமாள் முதலி, சாலைத் தெரு, நாராயணவனம். | வியாபாரம் சிறப்பாகத் நடைபெறவும் பிள்ளைப் பேறடையவும் வேண்டுதல் | மகன் பிறந்தான். வியாபாரம்சிறப்பாக நடைபெறுகின்றது. | இறைவனுக்குக் கல் யாண உற்சவம் செய்தார். |
| 19. | இரவிசங்கர், இரவி சில்க் மாளிகை, | தன் தங்கைக்குத் திரு மணம் நடைபெற பெரு | திருமணம் நடை பெற்றது | தாயாருக்குப் புத் தாடை அளித்து |

| | | | | |
|---|---|---|---|---|
| | சுந் தரம்முதலி தெரு, கொசப்பாளையம், ஆரணி | மாளிடம் வேண்டுதல். | | கல்யாண உற்சவம் செய்தார். |
| 20. | டி. கே. இரகு. சக்கரபாணித் தெரு, சத்தியாத் தோட்டம், சென்னை-93 | தன் தம்பிக்குத் திருமணம் நடைபெற திருமாலிடம் வேண்டினார். | திருமணம் நடைபெற்றது. | பெருமாளுக்குக் கல்யாண உற்சவம் செய்தார். |
| 21. | சுந்தரராசு, லைன்மேன், மின்சாரத்துறை. வாயல்பாடு. சித்தூர் | பிள்ளைப்பேறு அடைய தாயாரிடம் வேண்டுதல் செய்தார். | மகள் பிறந்தாள். | பெருமாளுக்கும், தாயாருக்கும் திருமுழுக்குச் செய்தார். |
| 22. | துளசிராம், வட்ட ஆய்வாளர், காவல்துறை, அனந்தபூர். | பிள்ளைப்பேறு அடைய வேண்டுதல். | மகன் பிறந்தான். | கல்யாண உற்சவம் நடத்தினார். |
| 23. | [illegible] நாராயண செட்டி, [illegible]த்தெரு, நாராயணவனம். | மகன்களுக்குத் திருமணம் தாமதமின்றி நடைபெற வேண்டுதல். | திருமணம் நடைபெற்றது. | இறைவனுக்குக் கல்யாண உற்சவம் நடத்தப்பட்டது. |

ஒவ்வொரு மகன் திருமணத்திற்கு முன்பு இறைவனுக்குக் கல்யாண உற்சவம் நடத்தி வருகிறார். வைகுண்ட ஏகாதசி உறசவத்தை ஆண்டு தோறும் நடத்தி வருகிறார். நாராயண செட்டியாரின் 60வது வயது, 75வது வயது நிறைவு விழாவிற்கு இறைவனுக்குக் கல்யாண உற்சவம் நடத்தினார்.



## அறிமுகம்

இந்நூலாசிரியர் ஆந்திர மாநிலத்திலுள்ள சித்தூர் மாவட்டம் புத்தூரில் மினனல். எ. முனுசாமி முதலியாருக்கும் மி. மு. ஒசூரம்மாளுக்கும் 16-6-1950ம் ஆண்டு திருமகனாய்த் தோன்றினார். இவ்வூரிலேயே பன்னிரண்டாம் வகுப்பு வரை கல்விப் பயின்றார். சித்தூரில் ஆசிரியர் பயிற்சியை முடித்தார். பின் 1973ம் ஆண்டு புத்தூர் துவக்கப்பள்ளி ஆசிரியர் பணியில் அமர்ந்தார் பணியில் இருந்து கொண்டே திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் இளங்கலைப் பட்டப்படிப்பை 1975ம் ஆண்டும் மைசூர் பல்கலைக் கழகத்தில் இளங்கல்வியியல் பட்டப் படிப்பை 1 79ம் ஆண்டு முடித்தார் 1979ம் ஆண்டு உயர்நிலைப் பள்ளி ஆசிரியராக நாராயணவனத்தில் சேர்ந்தார். தமிழ் மீது பேரார்வம் கொண்ட இவர் 198 ல் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழில் முதுகலைப் பட்டம் பெற்றார். 1984ல் கல்லூரி விரிவுரையாளரானார் கல்லூரி ஆசிரியராக பணியாற்றிய காலத்தில் முதுகலை கல்வியியல் பட்டபடிப்பில் சேர்ந்தார் 1990ல் பட்டம் பெற்றார். 1990ம் ஆண்டு டிசம்பர் திங்களில் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் ஆய்வியல் நிறைஞர் (M-Phil) என்ற பட்டத்தையும் பெற்றார்

இவர் தம் உழைப்பால் தன்னை வளர்த்துக் கொண்டதோடு நில்லாமல் ஆந்திரமாநிலத்தில் வாழும் தமிழ் மாணவர்களின் வளர்ச்சிக்கும், தொண்டாற்றி வருகிறார் என்பது குறிப்பிடத் தக்கதாகும். 1975- ஆம் ஆண்டு புத்தூரில் தமிழ்ச் சங்கம் நிறுவி அதில் முக்கிய உறுப்பினராக இருந்து அதன வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் துணை புரிந்து வருகின்றார் கார்வேட்நகர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ் மாணவர்கள் படிக்க வாய்ப்புக் கிடைக்கச் செய்தது; துவக்கப்பள்ளி முதல் பட்டக் கல்லூரி வரையுள்ள கல்வி நிலையங்களில் ஆசிரியர் பற்றாக் குறையைப் போக்கியது; தமிழ் மாணவர்களுக்குத் தமிழில் மொழியிலா நூல்களை அரசு அச்சிட்டு வழங்குவதற்கு வழி வகுத்தது போன்ற பொதுத் தொண்டுகளைச் செய்து வரும் இவர் ஒரு தமிழ்த் தொண்டர் என்று கூறுவது மிகப் பொருத்தமாகும். இவர் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் நடத்திய கருத்தரங்குகளிலும் அனைத்திந்தியத் தமிழ் இலக்கியக் கழகம் நடத்திய கருத்தரங்குகளிலும் சில ஆய்வுக் கட்டுரைகளைப் படித்துள்ளார்.

அன்பன்

**டாக்டர் சு. சகாதேவன் M.A., Ph.D ,**

**அரசு கல்லூரி புத்தூர்**